# இசைக்கலை வல்லுநர்கள்

"வைணிக, காயக" "மகாவித்துவான்"
"கலாசிகாமணி"
**V. S. கோமதிசங்கர ஐயர்**
(வீணைவிரிவுரையாளர்-அண்ணாமலைப் பல்கலைக்கழகம்)

தமிழ்நாடு சங்கீத நாடகசங்கத்தின்
பொருளுதவியுடன் வெளியிடப்பெற்றது.

கோமதி வெளியீடு-1
முதற்பதிப்பு; ஜூலை 1970


விலை ரூ: 4-25

கிடைக்குமிடங்கள்:

1. G. கோமதியம்மாள்
   28, லெக்சரர் குவாட்டர்ஸ், அண்ணாமலைநகர்.

2. சிதம்பரம்
   பிடில்வித்துவான், H. 40. Part I
   South Extention I, New Delhi-3.

3. சாந்திவர்த்தனன்
   122, ராயப்பேட்டை ஹைரோடு, மைலாப்பூர்,
   (சமஸ்கிருதக்கல்லூரியின் எதிர்பக்கம்)
   சென்னை-4.

சிவகாமி அச்சகம், அண்ணாமலைநகர்.

# Foreword

*By*

Prof. P. SAMBAMOORTHY, B.A., B.L.,
Fellow, Sangit Natak Akademi
NEW DELHI
U. G. C. PROFESSOR, UNIVERSITY OF MADRAS

South India has produced eminent musicians, who through their concerts, have literally plunged listeners in the ocean of celestial bliss. But due to some reasons, no attempt has been made to write a detailed biography of their lives and the historic occasions, when they gave concerts of outstanding excellence. This is a matter for regret. In these days, when knowledge of music has widely spread, there is a natural awakening to know the biographies of those musicians, the inner workings of their minds and the superb manner in which they handled intricate pallavis. The habit of maintaining diaries, containing the impressions of the concerts heard by them has not developed in South India. Two of the luminaries, who maintained such important diaries are, 'Ballavi Subbiah Bhagavathar', a disciple of, 'Maha Vaidyanatha Ayyar' and 'Sulamangalam Vaidyanatha Bhagavathar'. Vaineeka Vidwan, 'Gomati Sankara Ayyar' is the son of Pallavi Subbiah Baghavathar. The music world is deeply indebted to this vidvan for having carefully studied the notes written by his father and for having published them in the form of a book. If this book had not been published, we will

never be in a position to assess in detail the various fascets of the greatness of Maha Vaidyanatha Ayyar, Veena Kalyana Krishna Bhagavathar of Trivandrum, Coimbatore Ragavayyar and H. H. Ayilyam Tirunal of Travancore. The inspiring details relating to the musical contests in Trivandrum are narrated in a colourful and telling manner. The details relating to the historic contest between Maha Vaidyanatha Ayyar and Vidvan Venugopala Dass Naidu in Madras are also narrated. While reading the book one gets the impression as if those musical incidents are taking place before one's eyes. The various dates given, add to the historical value of the book.

This is a very valuable publication and will be of use to all musicians, teachers, rasikas and students of Music.

*P. Sambamoorthy*

116, SANTHOME HIGH ROAD,
MADRAS-4
*27—7—1970*



‘வைணிக, காயக’ ‘மகாவித்துவான்’ ‘கலாசிகாமணி’

**V. S. கோமதி சங்கர ஐயர்**

# முன்னுரை

திருநெல்வேலிமாவட்டம் சங்கரநயினர்கோயிலைச் சேர்ந்த வாசுதேவநல்லூர் கிராமத்தில் வசித்துவந்த என் தகப்பனரும் குருவுமாகிய பல்லவி சுப்பையா பாகவதரவர்கள், தஞ்சைமாவட்டத்தைச் சேர்ந்த வையச்சேரி மகாவைத்தியநாத சிவனவர்களிடம் 1876-ஆம் ஆண்டுமுதல் 1882-ஆம் ஆண்டுவரை ஏழு ஆண்டுகள் குருகுலவாசம் செய்தார்கள். இசையில் நற்றிறம் பெற்றுப் பல்லவி சுரம் பாடுவதில் பெரும் புகழ் அடைந்தார்கள். பல இசைப்புலவர்களைப் பேரும் புகழும் அடையும்படிச் செய்த பேராசான் ஆவார். இசை, தமிழ், சோதிடம், வேதாந்தம் ஆகிய நான்குகலைகளிலும் நிரம்பிய அறிவுத்திறம் பெற்றவர்கள்.

அவர்கள் என்சிறுவயதுமுதல் இசையில் நற்றிறம் பெறல் வேண்டுமென்ற கருத்துக்கொண்டு மகாவைத்யநாதசிவன், பெரிய வைத்தியநாத ஐயர், சின்ன வைத்தியநாத ஐயர், ஆயில்யம்திருநாள் அரசர், கோயம்புத்தூர் இராகவஐயர், பிட்சாண்டார்கோயில் சுப்பராயர், அந்தனூர் சுப்பையர், பட்டினம் சுப்பிரமணிய ஐயர், சென்னை வேணுகோபாலதாசுநாயுடு, பூச்சி ஸ்ரீனிவாச ஐயங்கார், பாலக்காடு அனந்தராம பாகவதர், வீணை கல்யாண கிருட்டினபாகவதர், வீணை சேஷண்ணு, வீணைவைத்தியநாதஐயர், பிடில் திருக்கோடிக்காவல் கிருஷ்ணையர், நாதசுரம் பொன்னு

சாமிபிள்ளை, புல்லாங்குழல் சரபசாஸ்திரிகள் ஆகிய மற்றும் பல பெரும்புலவர்களுடைய இசைத்திறமைகளைப் பன்முறையும் சொல்லிச்சொல்லி மகிழ்வார்கள். இசைத்துறையில் அவரவர்களுக்கு உரிய தனிப் பண்மையும், பாணியையும் எடுத்துக்காட்டுக்களுடன் விளக்குவதோடு இசைக்துக்காட்டியும் எனக்கு அறிவுறுத்தினார்கள்.

நான் அண்ணாமலைப்பல்கலைக் கழகத்தில் 1931-ஆம் ஆண்டில் வீணை ஆசிரியர்பதவி ஏற்ற நாள்முதல் என் தந்தையார் என் கண்ணிற்கும் செவிக்கும் கருத்திற்கும் விருந்தளித்த அப்பழங்கால இசை மேதைகளின் பண்பாட்டுத்திறமும், பண்பாடும் திறமும் பற்றி என்னுடன் பணிபுரிந்த திரு. பிரின்ஸிபால் சபேசஐயர், தலைவர் டைகர்வரதாச்சாரியார், பேராசிரியர் பொன்னையாபிள்ளை, மற்றும் ஏனைய ஆசிரியர்களிடமும் இசை மாணவர்களிடமும், இசையன்பர்களிடமும் நானும் அடிக்கடிக் கூறி மகிழ்வதுண்டு. அவர்களனைவரும் பல ஆண்டுகளாக இச்சிறந்த நிகழ்ச்சிகளையும், அரிய கருத்துக்களையும் தொகுத்து ஒரு பெருநூலாக்கி வெளியிட்டால் இசைஉலக அன்பர்களுக்கு மிக்க பயனுடையதாக இருக்குமென்று கூறிவந்தார்கள். அப்போதைய சூழலில் அது இயலாமற்போனாலும் அவர்களின் நல்லுள்ளத்தின் வாழ்த்துக்களும் இறை அருளும் நெடுநாட்களுக்குப் பிறகு என்னை மீண்டும் இப்பணியில் ஈடுபடுத்தி இந்நூலை இசைத்தமிழ் உலகிற்குப் படைக்கத் துணைபுரிந்தது.

இத்தொகுப்பு நூலின் படியை, இசைப்பேரறிஞரும் பேராசிரியருமான உயர்திரு. P. சாம்பமூர்த்தி அவர்

களிடம் காண்பித்தேன். அவர்களும் பல பணிகளுக்கிடையே இந்நூல் முழுவதையும் படித்துப் பார்த்து, உடன் அச்சாகி வெளி வரவேண்டுவது மிகமிக இன்றியமையாதது என வற்புறுத்தி மனமுவந்து வாழ்த்தினார்கள். அத்துடன் தமிழ்நாடு சங்கீத நாடக சங்கத்திற்கு இந்நூலின்கண் உள்ள முக்கியமான செய்திகளை எடுத்து உணர்த்தி இந்நூல் விரைவில் வெளிவர ஆவன செய்து உதவினார்கள். என்னை ஊக்குவிக்கும் வகையில் நூலுக்கு ஓர் அரிய மதிப்புரையும் தந்து பெருமைப் படுத்தியுள்ளார்கள். அவர்களுக்கு என்றும் எனது நன்றி உரியது.

இந்நூலைக் கண்ணுறும் அன்பர்கள் இதிலுள்ள நிறைவுகளை ஏற்று என்னை ஊக்குவார்களாயின் இதனைத் தொடர்ந்து இன்னும் பல நூல்களை வெளியிட ஆர்வம் கொண்டுள்ளேன்.

“இசைக்கலை வல்லுநர்கள்” என்ற இந்நூலில் எண்பது ஆண்டுகளுக்கும் முன்பு வாழ்ந்த பெரிய வைத்தியநாத ஐயர், மகாவைத்தியநாத சிவன், கோயம்புத்தூர் இராகவ ஐயர், வீணை கல்யாண கிருஷ்ண பாகவதர், ஆயில்யம் திருநாள் அரசர் ஆகியோர்களின் இசைத்திறன்கள் பற்றியும், முப்பது ஆண்டுகளுக்கும் முன்பு வாழ்ந்த வாசுதேவ நல்லூர் பல்லவி சுப்பையா பாகவதர், மதுரை நாதசுரம் பொன்னுசாமி பிள்ளை, ஆன்மறைநாடு திருமலை ஐயங்கார், காரைக்குடி வீணை சகோதரர்களாகிய சுப்பராம ஐயர், சாம்பசிவ ஐயர் ஆகியோர்களின் இசைத்திறங்கள் பற்றியும் பல அரிய செய்திகளை அரும்பாடுபட்டுத் தேடிக் கண்டு தொகுத்து அதற்கான நிகழ்ச்சிக் குறிப்

புக்களையும் விளக்கங்களையும் ஏற்றவாறு தெளிவுபடுத்தியுள்ளேன். 'பல்லவி சுப்பையா பாகவதரவர்களும் காரைக்குடி வீணைசகோதரர்களும்' என்ற கட்டுரையில் குறித்த நிகழ்ச்சிகளை நான் நேரிற் கண்டவனாதலால் அவ்வாறே வெளியிட்டுள்ளேன். ஏனைய யாவும் என் தகப்பனாராகிய பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் என்னிடம் கூறிய வண்ணம் எழுதப்பெற்றதாகும்.

இந்நூல் இசைகற்கும் மாணவர்களுக்கும், இசைப் புலவர்களுக்கும், இசையன்பர்களுக்கும் பெரும் விருந்தாகுமென்று எண்ணுகிறேன்.

1931 முதல் என்னை அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் வீணை ஆசிரியர்பதவி வகிக்கும்படி செட்டிநாட்டரசர் உயர்திரு. டாக்டர். இராஜா சர், மு. அண்ணாமலைச் செட்டியாரவர்கள் ஏற்பாடு செய்தார்கள். அப்பதவியிலிருந்து நான் மேலும்பணிபுரிய தமிழிசைக் காவலர், செட்டிநாட்டரசர் உயர்திரு. டாக்டர். இராஜா சர். எம். ஏ. முத்தையசெட்டியாரவர்கள் அன்புள்ளம் கொண்டுள்ளார்கள். அதன் பயனாக நான் பல தமிழிசை நூல்கள் வெளியிடவும், நூற்றுக் கணக்கான தமிழிசை நூல்களை உருவாக்கவும் இயன்றது. அறிவைப் போற்றி அன்புக்கு வாழ்வளித்த வள்ளல் உயர்திரு டாக்டர் இராஜா சர். மு. அண்ணாமலைச் செட்டியாரவர்களுக்கும் உயர்திரு டாக்டர் இராஜா சர். எம். ஏ. முத்தைய செட்டியாரவர்களுக்கும் என் மனமுவந்த வணக்கத்தைச் செலுத்துகின்றேன்.

என் தந்தையும் குருவுமாகிய பல்லவி சுப்பையா பாகவதரவர்களுக்கு இந்நூலை அன்புக் காணிக்கையாக்கி நினைவு கூர்கின்றேன்.

இந்நூல் வெளிவரப் போதிய பொருட் செலவுக்குத் தயங்கி இருந்த காலத்துத் தமிழ்நாடு சங்கீத நாடக சங்கத்தார் பெரிதும் மனம் உவந்து உதவித் தொகை ஈந்து நூல் வெளிவரப் பெருந்துணை புரிந்தனர். அவர்களுக்கு என் உளம் நிறைந்த அன்பும் நன்றியும் உரித்தாகும்.

இந்நூலின் கட்டுரைகளை மேற்பார்த்து உதவிய உளுந்தூர்ப்பேட்டை திரு சண்முகம் (தமிழ்விரிவுரையாளர்-அண்ணமலைப்பல்கலைக்கழகம்.) அவர்களுக்கு என் அன்புகலந்த நன்றி.

இதனை விரைவில் அச்சிட்டு அழகான நூலாக்கித் தந்த சிவகாமி அச்சகத்தாருக்கு எனது நன்றி.

முத்தமிழ் உலக வித்தகர்களும், கலைஞர்களும், சுவைஞர்களும் எனது முயற்சியை வரவேற்று வாழ்த்தியருள வேண்டுகிறேன்.

அன்பன்,

**V. S. கோமதிசங்கர ஐயர்,**

வீணை விரிவுரையாளர்,

அண்ணமலைப் பல்கலைக்கழகம்.

# உள்ளுறை

FOREWORD: இசைப்பேரறிஞர், பேராசிரியர் P. சாம்பமூர்த்தி அவர்கள்.

முன்னுரை: V. S. கோமதிசங்கரஐயர்

௧

# இசைக்கலை வல்லுனர்கள்

## 1

## சுவாதித்திருநாள் அரசர், ஆயில்யம் திருநாள் அரசர், மகா வைத்தியநாதசிவன், கோயம்புத்தூர் இராகவ ஐயர் *

தென்னிந்தியாவில் வழங்கிவரும் தமிழ்நாட்டிசையாகிற கர்னாடக இசையைப் போற்றியும், இசையை வளம்பெற வளர்ச்சியுறச் செய்தும், இசை வித்துவான்களை இன்முகத்தால் சிறப்புற ஆதரித்தும் வந்த இந்திய சமஸ்தானங்கள்பலவற்றுள்ளும் திருவனந்தபுரம் சமஸ்தானத்தைச் சிறப்பாக எடுத்துக்கூறல் வேண்டும்.

திருவனந்தபுரம் சமஸ்தானத்தைச் சிறப்போங்க பரிபாலித்து வந்த அரசர்களில் கருவில் திருவுடையார் ஸ்ரீசுவாதித்திருநாள் அரசர் அவர்கள் குறிப்பிடத்

* டெல்லி மியூஸிக் கிளப்பிற்கு 4-8-69ல் அனுப்பப் பட்ட கட்டுரை.

தக்கவர்கள் ஆவர். அவருக்குப் பதினன்கு மொழி களில் பாண்டித்தியம் உண்டென்று கூறுவார்கள். ஆயினும் அவர்கள் இயற்றியுள்ள இசை உருப்படிகளைக் கவனிக்கும்போது தமிழ், தெலுங்கு, மலையாளம், சம்ஸ்க் கிருதம், கன்னடம், இந்துஸ்தானி, மராட்டி முதலிய மொழிகளின் பாண்டித்தியம் புலனுகின்றது. ஏனைய ஆங்கிலம், துளு, உருது, சௌராஷ்டி போன்ற மொழி களில் பேசும் திறமைகளை அடைந்திருந்தனர் என்று எண்ண இடமுண்டு. இவர்களுக்கு சித்திரம், மாந்தி ரீகம், சோதிடம், சிற்பம், உடற்பயிற்சி முதலிய கலை களில் நல்ல பாண்டித்தியம் உண்டென்பர்.

இவரது தர்பார் மண்டபம் கந்தர்வலோகம் போன்று விளங்குமாம். சகலவித பண்டிதர்களும் சூழ அரசரவர்கள் கொலு வீற்றிருந்தார்கள். இவரது சபையை அலங்கரித்த இசை வித்துவான்களில் இரவி வர்மன் தம்பி, கிளிமானூர் கோயில்தம்பிரான், பர மேசுர பாகவதர், [1]க்ஷீராப்தி சாஸ்திரிகள், கணபதி பாகவதர், கன்னைய பாகவதர், அலாவுதீன், பஞ்சாப் சுலைமான், மேரு சுவாமிகள், வைணிக வித்துவான் பாலக்காடு வேங்கடாத்திரி பாகவதர், கோவிந்த மாரார், பரதநாட்டிய வித்துவான்களான தஞ்சை வடிவேல், சின்னையா, பொன்னையா, சிவானந்தம் ஆகிய சகோதரர்கள் ஆகிய இவர்கள் மிகவும் முக்கியமானவர்கள். இன்னும் பல இசைவித்துவான் களும் உண்டு.

---

[1] இவரது உருப்படிகள் என்னிடம் இருக்கின்றன.

ஸ்ரீ சுவாதித்திருநாள் அரசர் அவர்கள் இசை சாகித்தியகர்த்தாவாக தீக்ஷிதர், சியாமாசாஸ்திரிகள், தியாகைய்யர் ஆகிய மூவர்களுடன் தாமும் சேர்ந்து நான்காமவராகத் திகழ்ந்தார்கள். அவர்கள் இசை நூல்கள் மட்டுமின்றி தோத்திர ரூபமான நூல்களும், காவிய ரூபமான நூல்களும், காலக்ஷேபத்திற்கு உரிய நூல்களும் செய்து யாவராலும் போற்றப்பட்டவர்கள்.

இசை சம்பந்தமாக ஐநூறுக்கும் மேற்பட்ட கீர்த்தனைகளும், சதிசுரம், தானவர்ணம், பதவர்ணம், சௌகவர்ணம், பதம், சாவளி, தில்லாறு முதலியவைகளும்; இந்துஸ்தானி மொழியில், த்ருபத், டப்பா, க்யால், தூம்ரி முதலிய மெட்டுக்களில் பல பாடல்களும் இவ்வாறு ஏராளமாக இயற்றியுள்ளார்கள். இப்பாடல்களில் நூறு கீர்த்தனங்கள் வரையே இக்காலம் சுரரூபமாக அச்சில் வெளிவந்துள்ளன. ஏனைய பெரும்பான்மையான உருப்படிகள் சிதற்றுக் கிடக்கின்றன.

ஸ்ரீசுவாதித்திருநாள் அரசர் அவர்களின் தர்பாரிலே ஆஸ்தான வித்துவாறுக இருந்த தஞ்சை வடிவேல் என்பவர் மேல்நாட்டு இசைக் கருவியாகிற பிடில்வாத்தியத்தைக் கையாண்டு நமது கர்றுடக இசையை முதன் முதலாகச் சிறப்புற வாசித்து யாவரும் வியக்கும்படி செய்த திறங்கண்டு வடிவேல் அவர்களுக்கு முழுதும் தந்தத்திறுலான அழகான வேலைப்பாடுடைய பிடில் ஒன்றைச் செய்து அவையோர்கள் கண்டுகளிக்கும்படி பரிசுதந்து போற்றிறுர்கள் என்பது உலகறிந்தது.

ஸ்ரீ சுவாதித்திருநாள் அரசர் அவர்கள் செய்த இசை உருப்படிகளுக்கு வடிவேல் சகோதரர்களே இசை அமைப்புக்கள் (வர்ணமெட்டுக்கள்) அமைத் தனர் என்று மேற்படியாரின் வம்ச பரம்பரையினர் கூறிவருகின்றனர். அது உண்மையன்று. ஸ்ரீசுவாதித் திருநாள் அரசர் அவர்கள் இசைக்குரிய சாகித்திய மியற்றும் ஆற்றலும், இசையை அழகுற அமைக்கும் திறனும், கர்னாடக இசையை சுருதி லயம் இவற்றோடு அழகுறப்பாடும் சாரீரவளமும் பெற்றவர்கள் என்று எங்கள் பரம்பரையில் கூற நான் பன்முறை கேட்டிருக் கிறேன். எனவே இம்முத்திறத்தினும் ஸ்ரீ சுவாதித்திரு நாள் அரசர் அவர்கள் வல்லுனர் என்பதே உண்மை.

ஸ்ரீ சுவாதித்திருநாள் அரசர் அவர்கள் சில சமயங்களிலே புதிதாக ஓர் இசைச் சாகித்தியத்தை உருவாக்கி அதற்குத் தகுந்த ஒரு வர்ணமெட்டை அமைத்து அதனைத் தம்மனத்திற் கொண்டு பிறகு தமது தர்பார் மண்டபத்திலுள்ள இசை வித்துவான் களிடம் சாகித்தியத்தை எடுத்துக் கூறி இதற்கு இன்ன இராகத்திலே இன்ன தாளத்திலே அழகாக ஒரு வர்ண மெட்டு (இசையமைப்பு) அமைக்குமாறு கூறுவார் களாம். அவ்வாறு கூறுவது இசை வித்துவான்களின் திறன்களைச் சோதிப்பதற்கன்று, அவர்களின் இசை அமைப்பானது இராகபாவம் தாளக்கட்டு இவற்றோடு அழகுற அமைந்து விட்டால் அரசர் அவர்கள் மிகவும் பெருமிதம் கொண்டு அவர்களைப் புகழ்ந்து கொண்டாடி அந்த இசையமைப்பை ஏற்றுக்கொண்டு

அத்துடன் தமது திறத்தினையும் சேர்த்து அழகு செய்து விடுவார்களாம். இவ்வாறான சில உருப்படிகள் பரமேசுர பாகவதர், வடிவேல், பொன்னையா, கன்னையபாகவதர் ஆகிய இவர்களது இசை உருவம் பெற்றன என்பர். இவ்விசையமைப்புக்கள் அரசர் அவர்களுக்குத் திருப்தியை அளித்தகாரணத்தான் அதையும் ஏற்றுக் கொண்டுள்ளார்.

அரசர் அவர்களுக்கு நல்ல சுரஞ்ஞானமும், லயஞ்ஞானமும், இராகஞ்ஞானமும் தெளிவாக உண் டென்பர். இல்லாவிடில் தென்னிந்திய இசைவித்து வான்களோடு வடநாட்டு இந்துஸ்தானி இசைவித்து வான்களையும், மகாராஷ்டிர இசைவித்துவான்களையும் ஏற்றுக்கொண்டு அவர்கள் இசைத்துவரும் இசை நுட்பங்களை அறிந்து அவர்களை ஆதரிக்க இயலுமா? நூற்றுக்கணக்கான இசை உருப்படிகளைச் செய்து அதற்கு இராக தாளங்களை குறிப்பிட்டு அதில் தமது மனத்தை ஈடுபடுத்த இயலுமா? அந்த இசை உருப் படிகளை வித்துவான்களைக் கொண்டு பாடிப் பரப்பி அதனை ரசித்து உணர்ந்து வருதற்குரிய குணநலன் களைப் பெற இயலுமா? தமது இராஜ்ய பாரத்தைச் சாமானியமாகவும் தமது ஆயுள் முழுவதும் இசை இன்பத்திலேயே தமது மனத்தை லயப்படுத்தி ஆனந்திக்கும் பண்பு வருமா! இவைகளை ஆழ்ந்து கவனித்தால் அவர்களது உருப்படிகளுக்கு அவர்களே பெரும்பாலும் இசையமைப்பு அமைத்தனர் என்ற உண்மை புலனாகும். பதினான்கு மொழிகளோடு இசை யொலியாகிற காந்தர்வ மொழியையும் அவர்கள்

செவ்வனே அறிந்து பதினைந்து மொழிகளின் நலன்களையும் நயங்களையும் தெளிந்த சிறப்புப் பெற்றவர்கள்.

ஸ்ரீ சுவாதித்திருநாள் அரசர் அவர்களுக்கு அடுத்து ஸ்ரீ ஆயில்யம் திருநாள் அரசர் அவர்களைக் கூறல் வேண்டும். அவர்கள் மிக அற்புதமாய் அழகாய்ப்பாடும் ஆற்றலுள்ளவர்கள். மூன்று ஸ்தாயிகளிலும் எளிமையாக சஞ்சாரம் செய்யும் திறனுடையவர்கள். சங்கீதத்திலுள்ள திட்பநுட்பப் பகுதிகளை உணர்ந்து சுவைப்பவர்கள். இசை வித்துவான்களின் தராதரமறிந்து போற்றிப் புகழ்வார்கள். அவர்கள் சோழநாட்டைச் சேர்ந்த வையை மகாவைத்தியநாத சிவனவர்கள் போலவே பாடுவார்கள். இராகம், தானம், கீர்த்தனை, பதம், சாவளி, தில்லானா முதலியவை இவர்கள் பாட்டில் எளிமை பெற்று விளங்கும். சுரம் மட்டும் பாடமாட்டார்கள். ஏன்? இசைவித்துவான்களைப் போல கச்சேரி செய்ய வேண்டிய அவசியம் இல்லாததால். இசைவித்துவான்களுக்கெல்லாம் அவர்களது பாட்டிலே அளவுகடந்த பிரியமும் பிரேமையும் உண்டு.

அவர்களது காலத்திலே அச்சமஸ்தானத்தை அலங்கரித்த இசைவித்துவான்கள் பலர். அவர்களுள் வயது முதிர்ந்த பரமேச்வரபாகவதர், அவர்களின் மாணுக்கர்களாகிய இராகவய்யர், இராமசாமிபாகவதர், மற்றும் கடுவாய்க்கிட்டுபாகவதர், வீணை கல்யாண கிருஷ்ணபாகவதர், வில்லடி மகாதேவ பாகவதர் ஆகியோர் முக்கியமானவர்கள்.

ஸ்ரீ ஆயில்யம் திருநாள் அரசர் அவர்கள் காலத்திலே அவர்களின் அரசதர்பார் மண்டபத்தில் ஒவ்வொருநாளும் இன்னிசை விருந்து, கதாகால க்ஷேபம், புராண இதிகாசச் சொற்பொழிவுகள், பரத நாட்டியம், சாக்கையார் கூத்து, கதைகளி முதலிய வைகளும், அஷ்டாவதானம், பீதாம்பரம், பொம்ம லாட்டம் போன்றவைகளும் ஆகிய நல்ல கலைநிகழ்ச் சிகள் நடந்த வண்ணமிருக்கும். வெளிநாட்டிலிருந்தும் பல வித்துவான்களை வரவழைத்து பலநாட்கள் பல மாதங்கள் வரை அவர்களை இருக்கச்செய்து அவர் களுடைய வித்துவத்தைக் கேட்டுக் களித்து அவர் களின் திறமைக்குத் தக்கவாறு அரச மரியாதைகளைச் செய்து விடைகொடுத்தனுப்புவது வழக்கம். மேலும் அரசர் அவர்கள் தமது தர்பாரிலே வெளிநாட்டி லிருந்து வந்த வித்துவான்கள் நல்ல இசைப் புலமை யுடையவர்கள் என்று கண்டால் தமது ஆஸ்தான வித்துவான்களிலிருந்து ஒருவரைத் தேர்ந்தெடுத்து அவர்களுடன் சேர்ந்து கானம் செய்யும்படி செய்து அவர்களின் திறமறிந்து பாராட்டுவார்கள்.

இவ்வாறு நடந்து வருங்காலத்து சோழநாட்டு இசை வித்துவானும், இசையில் மகாமேதையாக விளங்கியவரும், மூன்று ஸ்தாயிகளிலும் அநாயாசமாக சஞ்சரித்துக் கானம் செய்பவரும், கேட்போரை மயிர்க்கூச்செறியும்படிக் கானம்செய்பவரும், சீலமும் நற்குணமும் வாய்ந்தவரும், சிவபூசை—சூதசம்ஹிதை பாராயண விருதம் அனுஷ்டிப்பவரும், சிவத்தியான பருமாகிய வையை மகாவைத்தியநாத சிவனவர்

களின் கானத்தைக் கேட்க விரும்பி தமது அரச சபைக்கு வரவழைத்து இருந்தார்கள். அவர்களது இசையைக் கேட்ட ஸ்ரீஆயில்யம் திருநாள் அரசர் அவர்கள் மகாவைத்தியநாத சிவனர்களைத் தம்மோடு பலமாதங்கள் வைத்துக்கொண்டு அவர்கள் இசைக்கும் போது வரும் இசையின் திட்ப நுட்பங்களைக் கண்டு ரசித்து வந்தார்கள். ஒரு நாள் மகா வைத்திய நாத சிவனவர்கள் பாட்டைக்கேட்ட ஸ்ரீஆயில்யம் திரு நாள் அரசர் அவர்கள் தமது தர்பாரிலும் இதுபோன்ற இசைப்புலமையும் ஞானவளமும் வாய்ந்த இசை மேதைகள் உண்டு என்பதை மகாவைத்தியநாத சிவனவர்களுக்குத் தெரிவித்தல் வேண்டுமென்று எண்ணினார்கள். ஆஸ்தான வித்துவான்களிலே பரமேச்வர பாகவதரின் மாணுக்கராகிய இராகவ ஐயர் ஒருவரால்தான் மகாவைத்தியநாத சிவனவர்களைச் சமாளிக்க இயலும் என்பதை நன்கு உணர்ந்தார்கள். அச்சமயம் இராகவஐயரவர்கள் மூலநோய் உபத்திரவத்தால் வருந்தி அரிப்பாடு என்னும் தமது சொந்த ஊரில் சில ஆண்டுகள் தங்கி இருந்தார்.

“அக்காலத்தில் அரசதர்பாரில் நடந்த இசை பற்றிய சம்பவங்களிலே சில நிகழ்ச்சிகள், மகாவைத்தியநாத சிவனவர்களின் பிரதமமாணுக்கரும், எனது குருவும் தகப்பனுருமாகிய திருநெல்வேலி மாவட்டம் சங்கர நயினர் கோயில் தாலுகா வாசுதேவநல்லூர் பிரஹ்மஸ்ரீ பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் என்னிடம் நேரில் கூறியது போல் கூறத் தொடர்கிறேன்”

ஸ்ரீ ஆயில்யம் திருநாள் அரசர் அவர்கள் ஒருநாள் வையை மகாவைத்தியநாத சிவனவர்களின் இன்னிசையைக் கேட்டு மிகவும் ஆனந்தப்பட்டுப் பரவசமானுர்கள். அப்பொழுது அரசரவர்கள் தமது ஆஸ்தான வித்துவான்களை நோக்கி மகாவைத்தியநாத சிவனவர்களின் இசைஞான பலத்திற்குச் சமமாக பாடுதற்குரிய சாமர்த்தியமும் ஞானபலமும் உள்ள வித்துவான்கள் நமது ஆஸ்தானத்தில் யாரேனும் உளரோ! என்று கேட்டார்கள். அப்பொழுது அங்குள்ள வித்துவான்களில் சிலர் பரமேச்வர பாகவதரின் மாணுக்கருள் ஒருவராகிய இராகவஐயர் அவர்களே தகுதியானவர்கள். அவர்கள் இப்போது அரிப்பாட்டில் வசித்து வருகிருர்கள் என்று எடுத்துரைத்தனர்.

பின்பு அரசரவர்களின் கட்டளைப்படி சமஸ்தான அலுவலர் ஒருவர் அரிப்பாடுசென்று இராகவ ஐயரவர்களிடம் செய்திகளை உணர்த்த நோய்வாய்ப்பட்டு வருந்தும் இராகவ ஐயரவர்கள் தமது நோயைப் பொருட்படுத்தாமல் அரசரவர்கள் ஆணைக்குக் கட்டுப்பட்டு திருவனந்தபுரம் வந்து சேர்ந்தார்கள். அரசர் அவர்களைப் பேட்டி கண்டார்கள். அரசரவர்களும் இராகவ ஐயரவர்களைப் பார்த்துத் "தாங்களும் மகாவைத்தியநாத சிவனவர்களும் சேர்ந்து பாடி நான் கேட்கவேண்டுமென்று விரும்புகிறேன்" என்று கூறினுர்கள். ஒரு நாளும் குறிப்பிடப்பட்டது. அதுவரை மகாவைத்தியநாதசிவனவர்கள் இராகவ ஐயரவர்கள் பாட்டையோ, இராகவ ஐயரவர்கள் மகா வைத்திய

நாத சிவனவர்கள் பாட்டையோ ஒருவர்க்கொருவர் கேட்டுக்கொண்டதில்லை.

குறித்தநாளில் மகாவைத்தியநாத சிவனவர்களும், ஆஸ்தான வித்துவான் [1]இராகவ ஐயர் அவர்களும் சேர்ந்து கானம் செய்தனர். இருவரில் யாருடைய இசை உயர்வானது யாருடைய இசை தரம் குறைந்தது என்று தாரதம்மியம் பார்க்க இயலாதவாறு யாவரும் பிரமிப்புக் கொள்ளும் வகையில் இவ்விருவர்களும் கானம் செய்து சதசை நிறைவித்தனர். அன்று பிரதானமாக எடுத்துக்கொண்ட இராகம் சங்கராபரணம். இராகவ ஐயரவர்களுக்கு "தோடி இராகவன், கல்யாணி இராகவன், காம்போதி இராகவன், சங்கராபரண இராகவன், வேகடை இராகவன்" என்று இராகத்தை முன்னடையாகச் சேர்த்துப் பெயர் கூறுவதுண்டு.

மகாவைத்தியநாத சிவனவர்களின் சாரீரம் இயற்கை வளம் கொண்டது. தங்கக் கம்பிபோல எவ்வகையிலும் வளைந்து நெளிந்து சுலபமாகப் பேசும் தன்மையது. இராகவஐயரவர்களின் சாரீரம் கனமும் கம்பீரமுமானது. சாதகபலத்தால் ஆழங்கொண்டது. எப்பேர்ப்பட்ட இசைநுட்பத்தையும் தமது சாதக

---

[1] இவருக்கு அரிப்பாடு என்பது சொந்த ஊர் ஆதலால் அரிப்பாடு இராகவ ஐயரென்றும், கோயம்புத்தூரில் வெகு காலம் வாழ்ந்து வந்ததால் கோயம்புத்தூர் இராகவ ஐயரென்றும் வழங்குவர்.

பலத்தாலும் ஞானபலத்தாலும் வெகுசாமர்த்தியமாகச் செய்துகாட்டும் திறமுடையது.

மகாவைத்தியநாத சிவனர்கள் அநாயாசமாகச் செய்து வரும் இசை நுட்பம் யாவற்றையும் இராகவ ஐயரவர்கள் தமது சாதக பலங்கொண்டு இசைத்து விடுவதுடன் தமது சாகசச் செயல்களால் இன்னும் பலப்பல அற்புதமான இசைச் செயல்களையும் இசையில் அமைத்துக்காட்டினார்கள். இருவரும் மூன்று மணி நேரம் பாடினார்கள். மகா வைத்தியநாத சிவனவர்களுக்கு இராகவ ஐயரவர்களிடம் அளவிலாத மதிப்பு. அவர்களின் அபூர்வ செயலாற்றல்களைக் கண்டு மிகவும் வியந்தனர். சாதக பலத்தால் செய்தற்கரிய செயல்களையும் சாதிக்க இயலுமென்ற உண்மையை இராகவ ஐயரவர்கள் மூலம் அறிந்து களிப்புற்றிருந்தார். இவரது அதி அற்புதமான சாதக பலத்தையும் ஞான பலத்தையும் அருஞ் செயல்களையும் கற்பனைத் திறங்களையும் அரசவையில் தமது வாக்கினல் எல்லோரும் உணரக் கூறல் வேண்டுமென்று மகா வைத்திய நாத சிவனவர்கள் எண்ணினார்கள்.

இசைவினிகை முடிந்ததும் ஆயில்யம் திருநாள் அரசர் அவர்களின் ராஜ சதசில் எல்லாவித்துவான்களும் சூழ்ந்திருக்க அரசரவர்களின் திருமுன்பு மகா வைத்தியநாத சிவனவர்கள் இவ்வளவு கற்பனைத் திறத்துடன் அழகொழுக இசைப்பவரும், அசகாய சூரருமான வித்துவான்கள் இருப்பது மிகவும் பெருமைக்குரியது. இப்பேர்ப்பட்ட மகா வித்துவான்களையும் இவ்வித்துவான்களை ஆதரிக்கும் அரசர் அவர்களை

யும் கண்டு நான் பெருமிதமடைகின்றேன் எனக் கூறி ஞர்கள். உடனே இசைமேதை இராகவ ஐயரவர்கள் இருந்த பக்கம் திரும்பி இராகவ ஐயரவர்களை நோக்கித் "தங்கள் பெயரோ இராகவன்! தங்களின் செய்கைகள் இராக்ஷதச் செய்கைகளாக இருக்கின் றனவே" என்று வேடிக்கை தோன்றவும், அதில் தமது வியப்புத் தோன்றவும் பாராட்டிஞர்களாம்.

"இராட்சதச் செய்கை" என்று குறிப்பிட்டது இங்கு இராகவனுக்குரிய குண நலன்களான சாந்தம் சீலம், ஈவு, இரக்கம், பச்சாதாபம், உயிர்களிடத்து அன்பு, ஞானநிலை, காப்பாற்றுங்குணம், சத்திய குணம் ஆகிய இவைகளல்லாமல் இராட்சதர்களின் குணங்களாகிற கோபம், இரக்கமின்மை, பிறரால் இயலாததைச் செய்தல், மாயாசாலங்கள், தம்மைக் கண்டு யாவரும் பயப்படும்படி மிரட்டல், வியப்பைத் தருவது போன்ற செயல்கள் ஆகியவைகளால் இசை நிகழ்ச்சியில் இராகவ ஐயரவர்கள் மேலோங்கி நின்ற திறமையை எடுத்துக்காட்டவேயாம்."

மகா வைத்தியநாத சிவனவர்களின் வாக்கிஞல் தமது ஆஸ்தான வித்துவாஞகிய இராகவ ஐயரவர்களைப் புகழ்ந்து பாராட்டிய பாராட்டைக் கேட்டு அரசர் அவர்கள் பேருவகை கொண்டு அக்கால முறைப்படி பரிசில்களும் அரசமரியாதைகளும் செய்து இருவரையும் மனங்கனிந்து போற்றிப் புகழ்ந்தார் களாம்.

# 2

## ஆயில்யம் திருநாள் அரசர் அவர்களும் கோயம்புத்தூர் இராகவ ஐயரவர்களும்

திருவனந்தபுரம் சமஸ்தானத்தை அலங்கரித்து வந்த அரசர்களிலே கருவிலே திருவுடையார் சுவாதித் திருநாள் அரசரவர்களும் அவருக்குப்பின் அரசாண்ட ஆயில்யம் திருநாள் அரசரவர்களும் குறிப்பிடத் தக்கவ ராவர். இவ்விரு அரசர்களும் இசைப் புலவர்களைப் பெரிதும் மதித்துப் பாராட்டி ஆதரித்து வந்தவர்கள். சுவாதித்திருநாள் அரசரவர்கள் தாமே இசைப் பாடல் கள் இயற்றி அதற்கு இசையமைப்பும் செய்து இசை யரசராகத் தோன்றிப் புகழும் பெற்றனர். இத்திறத் தால் பல இசைப் புலவர்களையும் ஆதரித்து இசையைப் பெரிதும் வளர்த்தார்கள். ஆயில்யம் திருநாள் அரச ரவர்கள் இசைஞானத்தில் சிறந்தவர்கள். அழகான குரல்வளம் பெற்றவர்கள். தாம் ஒரு இசைப்புலவ ருக்கு ஒப்பாக இருந்து பாடும் ஆற்றல் பெற்றவர்கள்.

இச்செயல்படு திறத்தினல் தம் நாட்டு இசைப்புலவர்க ளன்றி அயல்நாட்டு இசைப்புலவர்களையும் இன்முகத் தால் வரவழைத்து அவர்களையும் ஆதரித்து இசையை ஓங்கி வளரச் செய்தார்கள். இவ்விரண்டு அரசர்கள் போல இதற்கு முன்னும் இதற்குப் பின்னும் இசைத் திறமமைந்த ஓர் அரசர் தோன்றியதில்லை என்றே கூறுகின்றனர். அரசரவர்கள் நல்ல இசை ஞான முள்ள ஓர் இசைப்புலவருடன் பழக நேரும்போது தாம் ஒரு அரசபதவி வகிக்கும் உயர்ந்த நிலையுடையவ ரென்றும் மற்றவர் ஒரு சாதாரண ஏழைக் குடியாகிய தாழ்ந்த நிலையுடையரென்றும் எண்ணுமல் சரிசம மாகவே பழகுவார்களாம்.

ஆயில்யம் திருநாள் அரசரவர்கள் நன்ருக இசை யைப் பாடும் குரல் நயமுடையவர்களாதலால் தமது அவையில் யாரேனும் இசை நிகழ்ச்சி செய்ய வருங் காலத்து அவரது இசைவளம் எல்லா வகையினும் சிறப்பமைந்தது என்று கண்டால் அவர்களைப் பல நாட்கள்-பலமாதங்கள் தம்முடன் இருத்திக்கொண்டு, அவரது இசையில் வரும் நல்லதொரு இசை உரு வத்தை அவர்களுடைய வாயிலாகப் பன்முறையும் கூறச்செய்து, தாமும் தமது குரல் நயத்தால் அதனை இசைத்து அவ்விசை கைவரப்பெற்று விடுவார்கள். இசையிலுள்ள புதியதான திட்பநுட்பங்களை அவர் களிடமிருந்து அறிந்து அத்திறத்தினைத் தாமும் பாடிக் காட்டுவார்களாம். இம்மாதிரியான கலை நுட்பங்களைத் தமது ஆஸ்தானத்துப் புலவர்களான பரமேசுர பாக வதர், கோயம்புத்தூர் இராகவ ஐயர், வீணை கல்யாண

கிருஷ்ண பாகவதர், அயல்நாட்டு இசைப் புலவர் களாகிய வையை மகா வைத்தியநாத சிவனவர்கள், சிவகங்கை பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் ஆகிய இவர்களிடமும் அறிந்து ஈடுபட்டவர்கள் என்பர்.

ஆயில்யம் திருநாள் அரசரவர்களுடைய காலத்தில் நல்ல இசை ஞானமும் செயல் திறமும் அமைந்த இசைப் புலவர்களன்றிச் சாமானியப் புலவர்கள் அவர்கள்பால் தமது செயலைக் காண்பித்தல் இயலாது. தமது அரச அவைக்கு நற்றிறம் வாய்ந்த ஓர் இசைப் பெரும் புலவர் வந்துள்ளதைக் கண்டால் அவர்களிடம் இசை சம்பந்தமாக ஒரு திறத்தைக் கூறி அச்செயலை அப்புலவர் எத்திறங் கொண்டு செயலாற்றுகிறார்கள் என்று காண்பார்கள். அத்திறம் புகழத்தக்க வகையில் இருந்தால் தாமும் மகிழ்ந்து அப்புலவரையும் பாராட்டி ஏராளமான பரிசில்கள் கொடுத்துக் கொண்டாடுவார்கள். அரசரவர்கள் இசை சம்பந்தமாகக் கூறும் ஒவ்வொரு விடு புதிரும் நுட்பம் மிக்கதாகவே இருக்கும். இவ்வாறு செய்வது புலவர்களின் திறன்களைச் சோதிப்பதற்கன்று. அவர்களது இசை ஞானத்திறனைத் தாம் அறிந்து மகிழ்வதற்கேயாம். இவ்வகைகளை எல்லாப் புலவர்களிடத்தும் செயல் படுத்த மாட்டார்கள். நல்ல திறனும் ஆற்றலும் அமைந்த வித்துவான்களினிடமே இது செயல்படுத்தப் பெறும். அவர்கள் காலத்திலே இம்மாதிரியான நிகழ்ச்சிகள் எத்துணையோ நடந்ததுண்டு என்பர்.

ஆயில்யம் திருநாள் அரசரவர்கள் காலத்திலே காலை–பகல்–மாலை–இரவு ஆகிய எக்காலமும் இசைப்

புலவர்கள் அரசரவர்களுடன் சூழ்ந்துகொண்டே இருப்பார்கள். அரசரவர்கள் அல்லும் பகலும் இசை யின்பத்திலே மூழ்கிக் கொண்டிருப்பர். இதற்கிடை அரசாங்க அலுவல்களும் சிறிது இடம் பெறும். இசை நிகழ்ச்சிகள் பெரும்பாலும் மாலையும் இரவுமே நடை பெறும். ஏனைய நேரங்களில் இசைப்புலவர்களுடன் அளவளாவி இசை சம்பந்தமான செய்திகளைப் பேசி வருவார்கள். அப்பேச்சின் உட்பொருள் அடிக்கடி இசைநுட்பப் பகுதிகளை எடுத்து விளக்கிப் பாடிக் காண்பித்து அதன் அரிய தன்மைகளைத் தாமட்டு மின்றி ஏனைய யாவரும் அறிந்து மகிழத்தக்கதாக இருக்கும். அரசரவர்கள் இசை திட்பநுட்பங்களை அறிந்து மகிழ்வதே தம்பிறப்பின் பயனுகும் என் றெண்ணி அவ்வாறே செயலில் காட்டி வந்தார்கள்.

எல்லா இசைப்புலவர்களும் ஆயில்யம் திருநாள் அரசர் என்றுல் மிக்க அன்புகொண்டு விளங்குவார் கள். அவர்கள் இசைஞானத்தில் தெளிந்த அறிவும் நயமான குரலினல் பாடும் ஆற்றலும் பெற்றிருந்த மையே இதற்குக் காரணம். இவர்களது நாளோலக்க (தர்பார் மண்டபம்) மண்டபத்தில் புலவர்கள் போட்டி போட்டுக்கொண்டு முந்தி நிற்பர். எல்லோர் உள்ளத் திலும் மகிழ்ச்சி ஆரவாரமே ஓங்கி நிற்கும். அரசரவர் களுடன் கலைவளம் பெற்ற புலவர்கள் மிக எளிமை யாகப் பழகலாம். அத்துணைச் சலுகை புலவர்களுக்கு அளிக்கப் பெற்றிருந்தது.

ஒரு சமயம் வெளிநாட்டு வித்துவான்களும் சமஸ் தானத்திலுள்ள ஆஸ்தான வித்துவான்களும் நிறைந்

திருந்த தர்பார் மண்டபத்திலே ஆஸ்தான வித்து வான்களில் ஒருவராகிய இராகவ ஐயரவர்கள் இசை வினிகை நடத்திக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது சுப்பராய சாஸ்திரிகள் அவர்கள் ரீதிகௌளை இராகத்தில் இயற்றிய "ஜனனீ நினுவினு" என்ற கீர்த்தனையைப் பாடி அதில் சுப்பராய சாஸ்திரிகள் இயற்றியுள்ள சிட்டைச் சுரத்தையும் பாடினார்கள்.

அப்பொழுது ஸ்ரீ ஆயில்யம் திருநாள் அரசர் அவர்கள் இராகவ ஐயரவர்களை நோக்கி இந்தச் சிட்டைச் சுரம்போல் பதினாறு ஆவர்த்தனங் கொண்டதும், இதன் குறில் நெடில் சுரம் எங்கெங்கு வருகின்றனவோ அதுபோல வருவனவாகவும், ரீதிகௌளை இராகத்தின் அமைதி கெட்டு விடாமல் நல்ல பாவம் வருமாறும், இதன் சாகித்திய அமைப்புச் சிறிதும் பேதப்படாத நிலையில் வேறொரு சிட்டைச் சுரத்தைக் கற்பனையாக இப்பொழுது பாட இயலுமா? என்று கேட்டார்கள். உடனே இராகவஐயரவர்கள் மூன்று சிட்டைச் சுரத்தைத் தமது கற்பனைத் திறத்தால் பாடிக் காண்பித்து சபையோரனைவரும் பிரமிக்கும்படி செய்தார்களாம். ஒவ்வொரு வித்துவான்களும் ஆவர்த்தனங்களை எண்ணியும், இராகபாவங்களைக் கவனித்தும், குறில் நெடில் பேதங்களைக் கவனித்தும், நொடேஷனைக் குறியீடு செய்தும் இவ்வாறு பலரும் கவனித்து வந்தனராம். இந்தக் கற்பனைத் திறத்தைக்கண்டு அரசரவர்கள் மட்டுமின்றி அங்குள்ள வித்துவத் ஜனங்களுள்பட யாவரும் கரக்கம்பம் சிரக்கம்பம் செய்து புளகாங்கிதம் அடைந்தார்களாம். உடனே அரசரவர்கள் புகழுரை

களுடன் ராஜசன்மானங்களும் பல்லக்கு மரியாதை களும் செய்தனராம். அப்போது அரசர் அவர்கள் தமது வாயால் நான் இந்நாட்டுக்கு அரசன், நமது இராகவனவர்களோ இசைஉலகத்தின் சக்கரவர்த்தி என்று கொண்டாடினார்களாம்.

"சுப்பராய சாஸ்திரிகளியற்றிய சிட்டைச் சுரமும் அதன் சாகித்தியத்தையும் இங்கு குறிப்பிட்டு அதன் கீழ் இராகவ ஐயரவர்கள் பாடின கற்பனைச் சிட்டைச் சுரத்தில் எனது தகப்பனாராகிய பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் குறித்து வைத்துள்ள மூன்று வகை களையும் இங்கே எடுத்தெழுதுகிறேன்."

இராகம்:- ரீதிகௌளை. தாளம்:- சாய்ப்பு.

நி, ப, நி, = நி, ச நி, நி, | சா , = ; நி, ச |
நி ர வ தி க ஸூ க தா . . ய கி

க ரி ச = நி, ச க க | மா ம = க க ரி ச ||
ய னு சு வி னி நி னு சா ல கொ லி சி தி

நி, ச க = ரி நி, ச க | ரி நி, ச = ரி ச ச நி, |
நி ர த மு க த ன யு நி மொ ர லு வி னி

பா, நி, = நி, ச சா | க க ம = க க ரி ச ||
நீ வ லெ னெ ப்ரோ சு ட கு எ வ ரி க

க க ம = க க மா | ; நி, = நி, ச நி, ச |
த ர லோ வி னு மா . இ தி க ன மா

நி, ச க = க ம க ம | நி நி த = ம நி நிச' ||
த ரு ணை மி தி க்ரு ப ஸ லு ப து ரு ஸூ க

க' க' ம' = க' ரி' கா' | க' ரி' நி = சா' நி நி |
ஸ ர ஸி ரு ஹ லோ | ச னி ஸˇ வா ஸி னி

சா' நி = த ம மா | க ரி ச = சா நி, ப, ||
தா ம ஸ மு ஸே ய க னே ப்ரோ வு மு'

(ஜனனீ)

(இராகவஐயரவர்கள் கற்பனையாகப் பாடிய
முதலாவது சிட்டைச் சுரம்)

க ச க = க ம க க | மா, = ; க ம |
நி ர வ தி க ஸˇ க தா. . ய கி

த + ப ம = க ம த த | நீ நி = த த ம ம ||
ய னு சு வி னி நி னு சா ல கொ லி சி தி

க ம ப = ம க ம ப | ம க ம = ப ம க ரி |
நி ர த மு க த ன யு னி மொ ர லு வி னி

சா க = க ம மா | த த நி = த த ம ம ||
நீ வ லெ ணெ ப்ரோ சு ட கு எ வ ரி க

த த நி = த த நீ | ; க = க ம க ம |
த ர லோ வி னு மா . இ தி க ன மா

க ம த = த நி த நி | க' க' ரி' = ச' க' க' ம' ||
த ரு ண மி தி க்ரு ப ஸ லு ப து ரு ஸˇ க

த' த' நி' = த' ம' தா' | த' ம' க' = மா' க' க' |
ஸ ர ஸி ரு ஹ லோ ச னி ஸˇ வா ஸி னி

மா' க' = ரி' ச' நீ | நி த ம = கா ரி ச ||
தா ம ஸ மு ஸே ய க னே ப்ரோ வு மு

(ஜனனீ)

(இராகவ ஐயரவர்கள் கற்பனையாகப் பாடிய இரண்டாவது சிட்டைச் சுரம்)

தமத = தநிதத | நீ , = ; தநி |
நிரவ திகஸாக தா. . யகி

ச' நித = மததநி | சா' ச' = நி தநிச'||
யனுசு வினினினு சால கொலிசிதி

தநிச' = நிதநிச' | நிதநி= ச' நிதம |
நிரத முகதன யுனிமொர லுவினி

காம = மததா | நிநிச'= நிதமத ||
நீவ லெனெப்ரோ சுடகு எவரிக

நிநிச' = நிநிசா' | ; ம = மதமத |
தரலோ வினுமா . இ திகனமா

மதநி = நிச'நித | மமக = நிதநித ||
தருண மிதிக்ருப ஸலுப துருஸாக

மமத = மகமா | நிதப = நீ நிச' |
ஸரஸி ருஹலோ சனிஸா வாஸினி

கா' ரி' = ச' நிதா | மகம = கா ரிச ||
தாம ஸமுஸே யகனே ப்ரோவுமு
(ஜனனி)

(இராகவஐயரவர்கள் கற்பனைச் சிறப்பாகப் பாடிய மூன்றாவது சிட்டைச் சுரம்)

நிதம = மகரிக | சா, = ; நித |
நிரவ திகஸாக தா. . யகி

மகம = நிநிதம | தாநி = ச' நிதநி ||
யனுசு வினிநினு சால கொலிசிதி

ச' நி த = ம ச' நி த | ம ச' நி = த ம க ரி |
நி ர த முக த ன யு னி மொ ர லு வி னி

சா ம = க ரி சா | க க ம = ம நி நி ச' ||
நீ வ லெ னெ ப்ரோ சு ட கு எ வ ரி க

ரி' ச' நி = த நி தா | ; நி = ச' நி த நி |
த ர லோ வி னு மா . இ தி க ன மா

ச' க' ரி' = க' ம' க' ரி' | ச' நி ச' = நி நி த ம ||
த ரு ண மி தி க்ரு ப ஸ லு ப து ரு ஸுக

க' ரி' ச' = நி த நீ | ப நி நி = ச'ா நி த |
ஸ ர ஸி ரு ஹ லோ ச னி ஸு வா ஸி நி

ம'ா க' = ரி' ச' நீ | ச' நி த = மா க ரி ||
தா ம ஸ மு ஸே ய க னே ப்ரோ வு மு

(ஜனனீ)

இராகவஐயரவர்களின் கற்பனைத் திறனுகிய மூன்று சிட்டைச் சுரங்கள் இங்கு குறித்துள்ளன. இது போன்று வேருெரு கற்பனைச் சுரத்தை இசை வித்துவான்கள் இசைத்துப்பார்க்க வேண்டுகிறேன். அப்பொழுதான் யாதொரு யோசனையின்றியும், தயக்கமின்றியும் பாடப்பட்ட தமிழ்நாட்டு இசை மேதையாகிற இராகவஐயரவர்களின் ஞான வளத்தின் சிறப்புக்கள் அறிந்து போற்றுதற்குரியதாகும்.

குறிப்பு :— + இக்குறி சுத்ததைவதத்தைக் குறிக்கும்.
' இக்குறி சுரத்தின் பக்கத்தில் மேலிருந்தால் தாரஸ்தாயியையும், கீழிருந்தால் மந்தரஸ்தாயியையும் குறிக்கும்.

## 3

## ஆயில்யம் திருநாள் அரசர், மகாவைத்தியநாத சிவன், வீணை கல்யாணகிருட்டினபாகவதர்.

திருவனந்தபுரம் சமஸ்தானத்தை ஆயில்யம் திரு நாள் அரசர் அவர்கள் அரசாட்சி செய்துவந்த நாளில் அவரது தர்பார் மண்டபம் இசை வித்துவான்களால் நிறைந்து இருந்தது. ஒவ்வொரு நாளும் அரசர் அவர் களின் தர்பார் மண்டபம் இசை விழாவாகவே காட்சி யளித்து வந்தது. ஆயில்யம் திருநாள் அரசர் அவர் கள் தஞ்சையைச் சேர்ந்த வையை மகாவைத்திய நாத சிவனவர்களின் பாட்டைக் கேட்க வேண்டு மென்ற அவாமேலீட்டினால் மகாவைத்தியநாத சிவன வர்களைத் தமது ஆஸ்தானத்திற்கு வரவழைத்து மூன்று மாதங்களுக்குமேல் தம்முடன் கூட இருந்து வரும்படி ஏற்பாடு செய்துகொண்டார்கள். அக்காலத் தில் மகாவைத்தியநாத சிவனவர்களின் நாற்பது இசை நிகழ்ச்சிகள் அரச அவையில் நடந்தனவாகக்

கூறுவர். ஆயில்யம் திருநாள் அரசர் அவர்கள் மகா வைத்தியநாத சிவனவர்களின் இசையைப் பன்முறை கேட்ட பின்னும் மேலும் மேலும் கேட்டுப் பருக வேண்டும் என்ற அவாவையே கொண்டிருந்தார்கள்.

ஒருநாள் அரசரவர்கள் மகாவைத்தியநாத சிவனவர்களுடைய இசையுடன் தமது ஆஸ்தான வித்துவானாகிய வீணை கல்யாண கிருட்டின பாகவதரவர்களையும் வீணைவாசிக்கச் செய்து கேட்க வேண்டுமென்று எண்ணினார்கள். உடனே வைணிகவித்துவான் கல்யாண கிருட்டினபாகவதரை தமது தர்பாருக்கு வரச்செய்து "மகாவைத்தியநாத சிவனவர்களின் பாட்டுடன் தாமும் சேர்ந்து வீணைவாசித்து நான் கேட்க வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். தமக்கு ஆட்சேபணை யாதுமில்லையே" என்றார்கள். உடனே கல்யாணகிருட்டின பாகவதர், "அரசர் அவர்களின் ஆணைப்படி நடக்க சித்தமாக இருக்கிறேன். அவ்விடத்து விருப்பத்தை நிறைவேற்றுதல் எனது கடமையாகும். அவ்விடத்து ஆஞ்ஞை" என்றார்.

மறுதினம் மகாவைத்தியநாத சிவனவர்கள் பாட்டுடன் கல்யாண கிருட்டினபாகவதரவர்களும் சேர்ந்து வீணை வாசித்து வந்தார். கல்யாண கிருட்டின பாகவதரவர்கள் நல்ல சாதக பலம் உள்ளவர். அவரது வீணை வாசிப்பு ஒரிகை என்ற கமகம் நிறைந்தது. அதனால் எல்லாவிடத்தானும் பாட்டுப்போல பேசும் குணத்துடன் சிறப்புற விளங்கியது. வீணையில் யாரும் கையாளாத அதி விசித்திரமான முறையை வகுத்து

வாசிப்பவர். மகாவைத்தியநாத சிவனவர்கள் கம்பித கமகத்துடனும் ஹூம்கார ஒலியுடனும் இசைக்கும் இசையோடு கல்யாண கிருட்டின பாகவதர்வர்கள் ஒரிகை என்ற சாதக பலங்கொண்டு பாட்டுப்போல நிரப்பி வந்தார். கல்யாண கிருட்டினபாகவதரின் வீணையை ஆயில்யம் திருநாள் அரசர் அவர்களும் ஏனையோரும் அதுவரை தனித்துக் கேட்டுவந்தே பழக்கம். அன்று பாட்டுடன்! அதிலும் மகா உன்னதமான சாரீரத்துடன் – சன்ன இழைபோன்று வரும் கானத்துடன் அவரது வீணைவாசிப்பைக் கேட்டுவந்ததினுலும், பாட்டும் அவரது வாசிப்பும் ஒற்றுமையுடைத்தாய் அமைந்திருந்ததினுலும் அரசர் அவர்களும் அங்கு குழுமியுள்ள ஏனைய ஆஸ்தான வித்துவான்களும் கேட்டு அவரது வீணைவாசிப்பில் மெய்மறந்திருந்தார்கள். மகாவைத்தியநாத சிவனவர்கள் தாம் பாடிவரும் எதனையும் அவர் வீணையில் வாசித்து நிரப்புதலைக்கண்டு மிகவும் வியந்தார். வீணையில் பாட்டுப்போல வாசிக்க இயலுவதைக்கண்டு அவருக்கு இன்னும் பெருமகிழ்ச்சி உண்டாயிற்று. இசைச் செய்கைகளாகிற பல இடங்களில் கல்யாண கிருட்டினபாகவதர் வாசிப்பின் இசை நுட்பத்தையும் இசைத்திறத்தையும் கண்ட மகாவைத்தியநாத சிவனவர்கள் "ஆஹா! பேஷ்!" என்று தமது மகிழ்ச்சியை அடிக்கடி வெளிப்படுத்தி வந்தார்கள்.

இவ்வாறு பாட்டும் வீணையும் நூலும் இழையும் போல நல்ல நாதக்கட்டுடன் முழங்கிக்கொண்டிருந்தது. அச்சமயம் மகாவைத்தியநாத சிவனவர்கள்

தாம் பாடி வந்த தோடி இராக ஆலாபனையில் மந்தர ஸ்தாயி ஷட்ஜ சுரத்திலிருந்து அதிதாரஸ்தாயி ஷட்ஜ சுரம்வரை அதாவது மூன்று ஸ்தாயியிலும், (மெலிவு – சமன் – வலிவு) சூர்வாணம் வெகுவிரை வாய்ச் செல்லுவதுபோல, ஹூம்காரத்துடன், ஆரோகண அவரோகணக் கிரமத்திலே, வெகு வேகமாக இசைத்து நிறுத்தினார்கள். அவ்வாறு பாடிய வேகமும் துரித நடையும் மின்வெட்டியதுபோல யாவரையும் பொறி கலங்க வைத்து விட்டது. இவ்வாறான இசைத்திறத்தைக் கல்யாண கிருட்டினபாகவதரால் எங்ஙனம் செய்ய இயலும்! இவர் வீணையில் என்ன செய்யப் போகிறார் என்பதையே யாவரும் எதிர் நோக்கி இருந்தனர்.

கல்யாண கிருட்டினபாகவதரவர்கள் தோடி இராகத்தைச் சிறிது ஆலாபனை செய்து, அந்த இராகத்தின் இன்சுவையைக் கேட்போர் உள்ளத்தில் பதியச் செய்து, அவர்களுக்கு இசை உணர்ச்சியை உண்டாக்கிய பிறகு தாம் வாசிக்கும் இசை நயத்தால் ஒவ்வொருவரையும் 'ஆஹா!' எனத் தலையாட்டும்படி வீணையில் வாசித்து அதன் பிறகு தமது சாமர்த்தியத்தினாலும் சாதக பலத்தினாலும் மகாவைத்தியநாத சிவனவர்கள் பாடியதுபோல மூன்று ஸ்தாயிகளிலும் தாமும் வீணையில் வாசிக்க முயன்றார். அவரது வாசிப்பு ஒரிகை என்ற கமகம் பிரதான மாகையால் இவ்வாறு மூன்றுஸ்தாயியிலும் தாம் அதி துரிதமாக வாசிக்க முயன்றும் அது மின்வெட்டுப் போன்றும், பொரி தட்டினாற்போன்றும் வராமல் சிறிது மந்த நடையையுடையதாக ஒலித்து

விட்டது. அக்கணமே கல்யாணகிருட்டினபாகவதர் தாம் வாசித்த வகை நன்முறையில் அமையவில்லையே என்ற உணர்ச்சியை அடைந்துவிட்டார். அரசர் அவர்களின் ஆஸ்தான வித்துவானுகவும் அவர்களால் ஆதரிக்கப்பெற்று நன்கு மதிக்கப்பெற்றவராகவும் விளங்கிய நம் மதிப்பிற்கு இன்று நடந்த இந்த நிகழ்ச்சி யால் ஊனம் ஏறபட்டு விட்டதே என்றும் எண்ணிவிட் டார். நம்போன்ற வித்துவான்கள் யாவரும் நம்மை முகங்காணுவிடத்து எள்ளி நகையாடும்படியான நிலைக்கு ஆளாகி விட்டோமே என்றும் வருந்தினுர். உடனே தம் தலையைத் தாழ்த்திக்கொண்டார். இனி நம்மை யாரும் முன்போல் மதியார் என்றெண்ணி மனம் புண்பட்டு விட்டார். முகமும் திடீரென்று மாறு பட்டு விட்டது.

கல்யாணகிருட்டினபாகவதரின் முகமாற்றத்தை அக்கணமே ஆயில்யம் திருநாள் அரசர் அவர்கள் கண்டுகொண்டார்கள். மூன்று ஸ்தாயியிலும் வீணை யில் வாசித்துவரும்போது சிறிது தாமதப்பட்டு விட்டதை முன்னிட்டு மனம் வெதும்பி விட்டார் என் றும் தெரிந்து கொண்டார்கள். ஆயில்யம் திருநாள் அரசர் அவர்கள் இசைஞானத்தில் தேர்ந்தவர்கள். இசை திட்பநுட்பங்களை அறிந்தவர்கள். பாட்டுக்கும் கருவிக்கும் உள்ள பேதா பேதங்கள், அவைகளைக் கையாளுவதிலுள்ள கஷ்ட நஷ்டங்கள் இவைகளைத் தெளிவாகத் தெரிந்தவர்கள். கருவிகளுள் நாகசுரம், புல்லாங்குழல், பிடில், வீணை ஆகிய ஒவ்வொன்றிலும் உள்ள குணநலன்கள், இசைப்பயிற்சியில் ஒன்றிற்

கொன்றுள்ள சிரம சாத்தியங்கள் ஆகிய இவைகளைச் செம்மையாக அறிந்தவர்கள். ஆதலால் கல்யாண கிருட்டினபாகவதரை நோக்கி அரசர் அவர்கள் "கல் யாணகிருஷ்ணு! தாம் வாசித்தது சரிதான். அதில் யாதொரு குற்றமுமில்லை. மகாவைத்தியநாத சிவ னவர்கள் மிடற்றுக் கருவியால் இசைத்தார்கள். மூன்றுஸ்தாயியிலும் தட்டுத்தடங்கலின்றி நேர்முகமாக சாரீரத்தில் பேசுவது இயற்கையாகும். தாம் வாசித் தது வீணைக்கருவி. இவ்வீணையில் மத்தியஸ்தாயி தாரஸ்தாயி (சமன் – வலிவு) ஆகிய இரண்டு ஸ்தாயி கள் தான் நேர்முகமாகப் பேசும் தன்மையன. இன் னும் ஒருஸ்தாயியானது மந்தரத் தந்தியிற் பாதியும் பஞ்சமத் தந்தியிற் பாதியும் நிற்கும். எனவே தாம் மந்தரத் தந்தியிலிருந்து பஞ்சமத் தந்திக்கு வந்து மறு படி பஞ்சமத் தந்தியிலிருந்து சாரணித் தந்திக்கு வந்த பிறகே மூன்றுஸ்தாயியினையும் வாசித்தல் வேண்டும். இத்தந்திகளில் கைமாறி வருவதான தாமதமேயன்றி, வாசிப்பில் தாமதமில்லை. தாம் வாசித்தது திறமிக்க தாகவே இருந்தது. யாதொரு குறையுமில்லை. இதற் காகத் தாம் ஏதும் குறைபட்டுக்கொள்ள வேண்டாம்" என்று கூறினர்கள்.

அரசரவர்கள் இவ்வாறு கூறிய பிறகுதான் அங் குள்ள ஏனைய இசைவித்துவான்களுக்கும் வாத்திய மாகிய கருவியிலுள்ள நுண் அமைதி புரிந்தது. அது வரை கல்யாணகிருட்டின பாகவதருக்குத் துரிதமாகக் கைபேசவில்லை என்றே எண்ணி இருந்தனர். அரச ரவர்கள் கூறியதை மகாவைத்தியநாத சிவனவர்களும்

ஆமோதித்ததுடன் "இதுவரை யாரும் பாட்டுடன் வீணை வாசித்ததில்லை. தங்களைத் தவிர வேறு யாரா லும் வாசிக்கவும் இயலாது. தங்கள் வாசிப்பு பாட்டுப் போல ஹும்பித ஓரிகையுடன் விளங்குகின்றது. நான் பல வீணைகள் கேட்டிருக்கிறேன். அவைகள் பாட்டின் இலக்கண வகைகளை எடுத்து விளக்கக்கூடிய கருவி இசையாக மட்டுமிருக்கும். தங்களது வாசிப்பு உன் னதமான வாசிப்பு. மிகுந்த சிறப்புடையது. தாங்கள் வாசித்ததில் யாதொரு குற்றமுமில்லையே" என்று கூறினார்கள்.

ஆயில்யம் திருநாள் அரசர் அவர்களுடைய வாக் கால் வீணையிலுள்ள கஷ்ட நஷ்டங்கள், வாசிப்பின் திறம் இவைகளைக் கூறக் கேட்டதனால் கல்யாண கிருட்டினபாகவதரும் உவகைகொண்டு மனதில் ஒரு வாறு சமாதானமடைந்து முகப்பொலிவு பெற்றார். மறு படியும் இசைவினிகை தொடர்ந்து நடந்தது. இசை யைக் கேட்டோர் யாவரும் மெய்மறந்தனர். மகா வைத்தியநாத சிவனவர்களும் "வீணையுடன் பாடு வதில் தாம் இதுவரை காணாத ஓர்வித இன்பம் எனது அகத்துள் நிறைந்துள்ளது. அது எத்துணை தரத்தது என்று எடுத்துக்கூற என்னால் இயலவில்லை. இந்த இன்பம் இன்றுதான் முதன்முதலாக எனக்கு உண் டானதாகும்". என்று தமது அனுபவ உணர்ச்சி யினையும் வெளிப்படுத்தினார்.

அரசரவர்கள் அன்றைய தினம் நடந்த இசை வினிகையில் அளவிட முடியாத திருப்தியை அடைந்

தார்கள். அளவிறந்த அரச மரியாதைகள் பரிசில்கள் வழங்கப்பெற்றன. அக்கணமே இருவர்க்கும்தோடாக் கள் வீரசங்கிலிகள் அணியப்பெற்றன. விலைமதிப் பற்ற வெகுநேர்த்தியான பச்சைப் பட்டுப் பீதாம் பரமும் அளித்துச் சிறப்பித்தார்கள். அரச மரியாதை களில் பச்சைப் பட்டு பீதாம்பரம் அளிப்பது முதற்தர மான சம்மானமாகும். இந்தப் பச்சைப் பட்டுப் பீதாம் பரம் இன்றும் அவர்கள் வம்சத்தார்களிடம் இருப்ப தாகத் தெரிகிறது.

அன்று நடந்த இசைநிகழ்ச்சியிலிருந்து கல்யாண கிருட்டினபாகவதரவர்கள், மகாவைத்தியநாத சிவ னவர்கள் திருவனந்தபுரத்தில் இருந்தவரை ஒவ் வொரு நாளும் அவர்கள் விடுதிசென்று அவரது இசை யைத் தனிப்பட்ட முறையிற் கேட்டு அறிந்து வந்தார் கள். ராஜதர்பாரில் நடக்கும் இசைவினிகையைக் கேட்டுவந்த பயனின் விளைவால் மகாவைத்தியநாத சிவன் அவர்கள் இசையில் செய்து வந்த திட்பநுட்பப் பகுதிகளைத் தமது இல்லம் சென்று வீணையில் பயின்று வருவார்களாம். அதனுல் அவரது வீணைவாசிப்பு இன் னும் பன்மடங்கு சிறப்புற்று விளங்கியதாம்.

# 4
# ஆயில்யம் திருநாள் அரசர், மகாவைத்தியநாத சிவன், கோயம்புத்தூர் இராகவஐயர்.

உலகப் புகழ்பெற்ற மகாவித்துவான் வையை மகாவைத்தியநாத சிவனவர்கள் திருவனந்தபுரம் ஆயில்யம் திருநாள் அரசர் அவர்களின் வேண்டு கோளுக்கிணங்க இரண்டு முறைகள் சென்று மூன்று மாதங்களுக்கும் மேலாக அச் சமஸ்தானத்தில் தங்கி இருந்தார்கள். அரசரவர்கள் மகாவைத்தியநாத சிவ னவர்களுடைய பாட்டுடன் தமது ஆஸ்தான வித்து வானுகிய வீணை கல்யாணகிருஷ்ணபாகவதரவர்களும் சேர்ந்து வீணை வாசித்து வந்த கச்சேரி ஒன்றும், மகா வைத்தியநாத சிவனவர்களும் கோயம்புத்தூர் இராகவ ஐயரவர்களும் சேர்ந்து நிகழ்த்திய கச்சேரி கள் ஆறும், மகாவைத்தியநாத சிவனவர்கள் மட்டும் தனித்து நிகழ்த்திய கச்சேரிகள் சுமார் முப்பதுக்கு மேல் கேட்டு இன்னிசையமுதைப் பருகினுர்களாம். ஒவ்வோர் இசைநிகழ்ச்சி நாளன்றும் வித்துவான்களுக்

குச் சால்வை, உருட்டு[1], பரிசில்கள், ரத்னஹாரம், தோடாக்கள், வீர சங்கிலி, கழத்துச் சங்கிலி, விருது, பட்டுப் பீதாம்பரம் முதலிய அரச மரியாதைகள் கச்சேரி அமைப்புக்குத் தக்கவாறு நடக்குமாம். இம் மாதிரியான அரச மரியாதைகளை மகாவைத்தியநாத சிவனவர்கள் ஏராளமாக அடைந்துள்ளார்கள். இவற்றுடன் பொருளும் (பணம்) உண்டு.

மகாவைத்தியநாத சிவனவர்கள், திருவனந்தபுரம் சமஸ்தானத்து ஆயில்யம் திருநாள் அரசர் செய்த மரியாதைப் பொருள்கள் எல்லாவற்றையும் தமதூராகிய வையைச்சேரியில் தம்மால் தாபனம் செய்யப்பட்ட "நடராஜா - சிவகாமசுந்தரி" ஆகிய தெய்வங்களுக்கே அர்ப்பணித்துள்ளதாக மகாவைத்தியநாத சிவனவர்களின் தலைமைச் சீடரும், எனது தகப்பனாருமாகிய வாசுதேவ நல்லூர் பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் கூற நான் கேட்டிருக்கிறேன். நவரத்தினமாலை, முத்துமாலை, கழத்துச் சங்கலி, டாலருடன் கூடிய கைச்சங்கலி, பட்டுப்பீதாம்பரங்கள், பொன்னுடைகள் என அவர்கள் பெற்ற பரிசில்களை இன்றும் அங்கு காணலாம். ஆயில்யம் திருநாள் அரசர் அவர்கள் பரிசளித்த பச்சைப் பட்டுப்பீதாம்பரம் இன்றும் உள்ளதாக பேராசிரியர் P. சாம்பமூர்த்தி அவர்கள் (17-9-69 புதன்கிழமையன்று) என்னிடம் தெரிவித்தார்கள்.

1 கையிலிடும் ஒருவகை காப்பு.

இவ்வாறு மகாவைத்தியநாத சிவனர்கள் திரு வனந்தபுரத்தில் தங்கியிருந்த சமயத்தில் கோயம்புத் தூர் இராகவ ஐயரவர்களும் மகாவைத்தியநாத சிவன வர்களும் மற்றுமொரு முறை சேர்ந்து பாடினர்கள். மகாவைத்தியநாதசிவனவர்கள் இயற்கையான சாரீர வளம் பெற்றதுடன் இசைஞான பலத்தில் மிகவும் சிறப்புடையவர்கள். அதுபோல கோயம்புத்தூர் இராகவ ஐயரின் சாரீரம் இயற்கைவளம் இல்லா விடினும் சாதகபலம் மிகவும் அதிகம் உடையது. இசை ஞான பலத்தில் இவரை மிஞ்சுவோர் இல்லையென்றே கூறல் வேண்டும். மகாவைத்தியநாதசிவன் அவர்கள் சிறுத்த உருவம், ஐந்தடிக்கும் சிறிது குறைவான உயரம், ஒல்லியான மிதமான சரீரம் கொண்டவர். அவர்கள் விபூதி, உருத்திராக்கம் இவைகள் அணிந்து வருதலைப் பார்த்தால் வெண்கலத்தை உருக்கி வார்த்து அதை ஒரு படிமமாகச் செய்து மெருகு ஊட்டியபின் பளபளப்பதுபோல மினுமினுப்பாய் இருக்குமாம். தங் கத்தைப் புடம் போட்டெடுத்த நிறம், முகத்தில் தெய் வீகப் பொலிவு, களங்கமற்ற மனம். அவருடைய கண்கள் அருளும் அன்பும் பொழியும் நோக்குடை யவை. அவரைப் பார்க்கும்போது கயிலையில் தவ மியற்றும் அந்தப் பரமசிவனே நேரில் காட்சியளிப்பது போலத் தோன்றுமாம்.

கோயம்புத்தூர் இராகவ ஐயரவர்கள் நெடிதான தோற்றமும் கட்டுடலும் கொண்டவர். பெரிய உருவம். அவரது மீசையையும் உருவத்தையும் பார்த்தால் ஒரு மன்னருடைய பெருமிதத் தோற்றம் துலங்கும். பருத்த

சரீரம். பார்த்த மாத்திரத்தான் வித்துவான்கள் அனை வருக்கும் அவரிடம் சிறிது அச்சம் உண்டாகும். இராகவ ஐயரவர்களும் பலாப்பழம் போன்ற செக்கச் சிவந்த நிறம். இவர்களுடைய தோற்றம் இவ்வாறு இருக்குமேயன்றி அவர் பரம சாது, உபகாரி, தயாள சிந்தை உடையவர், எல்லோரிடத்திலும் அன்புப் பெருக்கு உள்ளவர். கர்னுடக இசையில் நல்ல தெளிந்த பாண்டித்தியம். எப்படிப்பட்ட கடினமான செயலையும் தம் சாதகபலத்தால் எளிமையாக்கிச் செய்து விடுவார். ஆயில்யம் திருநாள் அரசர் அவர் களுக்குக் கோயம்புத்தூர் இராகவ ஐயரவர்களிடம் தனிப்பட்ட அன்பும் மதிப்பும் உண்டு.

அவர்களிருவரும் சேர்ந்து பாடும்போது இசையி லுள்ள உருட்டல், பிருக்கா, ரவைஜாதி முதலிய நுணுக்கங்களை மகாவைத்தியநாத சிவனவர்கள் சர்வ சாதாரணமாகப் பாடிவிடுவார்கள். கோயம்புத்தூர் இராகவ ஐயரவர்களது சாரீரம் கனமானது, கம்பீர மானது. உருட்டல், பிருக்கா, ரவைசாதி முதலியவை கள் எளிமையாக வராது. இம்மாதிரி வரும் இடங் களிலே கோயம்புத்தூர் இராகவ ஐயரவர்கள் தமது தூல சரீரமாகிய தொந்தியை ஓர் அசைப்பு அசைப் பார். அத் தொந்தியின் குலுக்கலின் உதவியால் தமது சாதக பலத்தையும் சேர்த்து உருட்டல், புரட் டல், ரவைசாதி, பிருக்கா, துரிதவகை ஆகிய அனைத் தையும் உள்ளது உள்ளபடி இசைக்குற்றமின்றி இசைத்து விடுவார்கள். இச்செய்கைகள் யாவரையும் மகிழ்ச்சிகொள்ளச் செய்துவிடும்.

தவிரவும் இராகவ ஐயரவர்கள் இராகத்தின் முடிவிலே சூர்வாணம் போவது போன்ற செய்கை; சூர்வாணமானது மேலே சென்று சிறிது நேரத்தில் 'பட்' டென வெடித்து அதனின்று பல நிறங்களையுடைய ரஸதுண்டுகள் மிதந்து வருவதுபோன்ற செய்கை, தாளிதம் செய்யும்போது 'படபட சடசட' என்று கடுகு வெடித்தல் போன்றும், தாளிதத்தினால் ஓர் மணம் வீசுவது போன்றுமுள்ள செய்கை, ஓர் மூங்கிலிலையானது தனது காம்புவிட்டு சாய்ந்து சாய்ந்து படிப்படியே கீழே இரங்கிவருவது போன்ற செயல், மீன் கொத்திப் பறவை சற்று உயரத்தில் இறகை அடித்துக்கொண்டு சிறிதுநேரம் அங்கிங்கு அசையாமல் நின்று பிறகு திடீரென்று நேராகப் பாய்ந்து மறுபடி நேராக எழுவதுபோன்று செயல், தவளை தத்தித் தத்திக் குதிப்பது போன்ற செயல், யானை ஆடி அசைந்து வருவது போன்ற செயல், குதிரை அடிபோல சுறுசுறுப்பான இசைநடை ஆகிய இவை போன்ற இன்னும் பலப்பல அரிய செயல்களையும் அவர்கள் இசையில் கலந்து பலரும் வியந்து பாராட்டும்படிச் செய்வார்களாம்.

மேலும் அரசரவர்கள் உள்பட கேட்போர் அனைவரும் இவ்வாறான நிகழ்ச்சிகளை இராகவ ஐயரவர்கள் இப்பொழுது இசையில் கலந்து செய்யப்போகிறார்கள் என்ற குறிப்பை உணர்ந்து அச் செயல்களின் நுட்பங்களை அறிந்து அதனைச் சுவைக்கத் தயாராகி விடுவார்களாம். இம்மாதிரியான இசைச் செயல்களைப் பன்முறையும் கேட்ட மகாவைத்தியநாத சிவனவர்கள்

வெகு ஆச்சரியமுற்று இருக்கிறார்கள். அக்காலம் தம்முடைய சிஷ்யர்களிடம் கோயம்புத்தூர் இராகவ ஐயரவர்களையும், அன்னாரின் இசைச் செயல்களையும், அவரது இசை ஆற்றல் ஆகியவை பற்றியும் பன்முறையும் புகழ்ந்து கூறியுள்ளார்களாம்.

அன்றையதினம் அவ்விருவரும் களிப்பு மிக்க நல்லாற்றலுடன் இசை நிகழ்ச்சிகளை நடத்தினார்கள். அவர்களிருவரும் இசைத்து வரும்போது 'ஏதோ போட்டி போட்டுக்கொண்டு பாடுகிறார்களோ!' என்று அனைவரும் எண்ணும்படியான நிலையிலே அக்கச்சேரி தோற்றமளித்தது என்பர். அவ்விருவரும் இசைக் கச்சேரியைச் சிறப்பாக முடித்து புன்னகை தவழும் இன்முகத்துடன் அரசரின் அருகில் அமர்ந்தனர்.

ஆயில்யம் திருநாள் அரசர் அவர்கள் தெளிந்த இசை ஞான முடையவராகையாலும், அவ்விருவரின் கலைத்திறங்களை உள்ளது உள்ளபடி தாம் அறிந்து இருந்ததாலும் அவ்விருவரின் திறமைகளையும் பெருமைகளையும் பாராட்டிச் சிறப்பித்தல் வேண்டுமென்று எண்ணினார்கள். மகாவைத்தியநாத சிவனவர்கள் சாரீரவளமும் இசை ஞானத்திறனும் அமைந்வர்· அவருக்குச் சமமாகப் பாடுதற்கு வேறு எந்த வித்வானும் இல்லை என்று உலகப்புகழ் வாய்ந்தவர்கள். அப்பேர்ப்பட்ட மகாவித்துவானுடன் நமது ஆஸ்தான வித்துவானை கோயம்புத்தூர் இராக ஐயரவர்கள் சேர்ந்துபாடித் தம்திறமையைக் காட்டி அவருக்குச் சரி நிகராக விளங்கினார்கள் என்பதில் அரசரவர்களுக்கு

அளவிலா மகிழ்ச்சி. அன்று நடந்த இசையைக் கேட்டோர் அனைவருக்கும் மகாவைத்தியநாத சிவனவர்களுக்குக் கோயம்புத்தூர் இராக ஐயரவர்கள் இசைத் திறமையாகிற திட்பநுட்ப வகைகளில் சிறிதும் சளைத்தவரல்லர் என்று கொண்டாடும்படி அவ்விசை நிகழ்ச்சி இருந்தது.

கடைசியாக ஆயில்யம் திருநாள் அரசர் அவர்கள் மகாவைத்தியநாத சிவனவர்களின் சாரீர நலன், இசைவளம், இசைஞானத்திறன் இவைகளைக்குறித்து "இவர் தங்கக்குடம்" (இயற்கை சாரீரம். எப்படி வேண்டுமாயினும் இயங்கிப் பேசும் குணமுடைத்து.) என்றும்; இராகவ ஐயரவர்களின் சாரீரநலன், இசை வேலைப்பாடு, இசை ஞானத்திறன் இவைகளைக்குறித்து "இவர் கருங்கற் குடம்" (ஒரு கருங்கல்லைச் சேதமுண்டாக்காமல் தங்கக்குடத்தைப்போல மிக மெல்லியதாகக் குடைந்தெடுத்து மிகவேலைப்பாடுகளுடன் அமைத்துப் பளபளப்பை ஊட்டிப் பிராகாசிக்க வைப்பது போல சாதக பலத்தால் வளம் பெற்றது இவருடைய இசை.) என்றும் புகழ்ந்து தோடா, விருது ஆகிய மேன்மையான சன்மானங்களைச் செய்து பாராட்டினார்களாம்.

# 5

## ஆயில்யம் திருநாள் அரசர் அவர்களின் உசேனி இராக இன்னிசை.

இசை உலகிலே யாருக்கும் அமையாத இசை வளமும், இயற்கையான நல்லமைதிபெற்ற குரல் நயமும் கொண்டு, தெய்வ அனுகூலத்திற்குப் பாத்திர மானவரும், பேரும் புகழும் தமக்குத்தாமே வந்து அடைந்தவரும், எல்லாவிதச் சிறப்பையும் பெற்ற வரும் ஆகிய வையை மகாவைத்தியநாத சிவனவர்கள் திருவனந்தபுரத்தை ஆண்டுவந்த ஸ்ரீ ஆயில்யம் திரு நாள் அரசர் அவர்களுடைய காலத்திலே அரசர் அவர் களுடைய வேண்டுகோளின்படி சிலமாத காலங்கள் அவர்களுடன் தங்கி இருந்தார்கள்.

தனது இசை நிகழ்ச்சிகள் பன்முறையும் நடந்து வரும்போது இசையில் எங்கெங்கு உண்மையான அழகுகள் நிரம்பிவரப்படுமோ அவ்வருமையான இடங்களை அரசர் அவர்கள் அறிந்து மகிழ்வுற்றதோடு

பிற இசைக்கலைஞர்களின் இசைத்திறனறிந்து போற்று தலேயும், அவர்களின் தரமறிந்து அவர்களுக்கு அரச மரியாதைகள் செய்தலையும் அரசர்பால் செம்மையாக அமைந்திருத்தலைக்கண்ட மகாவைத்தியநாத சிவன வர்கள் ஸ்ரீ ஆயில்யம் திருநாள் அரசர் அவர்களின் தெள்ளிய ஞானத்தைப்போற்றிப் புகழ்ந்து வந்தார்கள்.

மகாவைத்தியநாத சிவனர்கள் பலமாதங்கள் திரு வனந்தபுரம் சமஸ்தானத்தில் தங்கியிருந்தபோது அங்குள்ள வித்துவான்களும் ஏனையபலரும் பேசிக் கொள்ளுவதினின்று ஸ்ரீ ஆயில்யம் திருநாள் அரசர் அவர்கள் நன்ருகப் பாடுவார்களென்றும், அவரது சாரீரம் இசைப்புலவர்களெல்லாம் மதிக்கத்தக்க முறையில் மிக அழகாயிருக்குமென்றும், இலக்கண சுத்தம், சுருதி சுத்தம், எளிமை ஆகியவற்றுடன் பிறரை மயக்கும் சக்தியும் அச்சாரீரத்தில் உண்டென் றும் அறிந்துகொண்டார்கள். சமய சந்தர்ப்பமறிந்து எவ்வாறேனும் முயன்று ஸ்ரீ ஆயில்யம் திருநாள் அரசர் அவர்களின் இசையின்பத்தைப் பருகி துய்க்க வேண்டு மென்று மகாவைத்தியநாதசிவனவர்கள் அவா மேலிட் டவராக இருந்தார்கள். எனினும் அரசரவர்களிடம் அதனை எவ்வாறு கூறுவது! அது மரியாதையாக இராது! முறையுமாகா! என்று வாளாவிருந்துவந்தார். ஆனல் அக்காலம் தம்முடன் அடிக்கடி அளவளாவும் ஆஸ்தான விந்துவான்களிடம் தமது விருப்பத்தைக் கூறியிருந்தார். அதுபற்றிய விபரங்களை வித்துவான் கள் யாரும் அரசரவர்களிடம் அறிவிக்கவில்லை. எவவாறு தெரிவிக்க இயலும் "இராஜதர்பார்"

ஆயிற்றே. எல்லோரும் தெரிவித்தற்கு அஞ்சிநின்ற னர்.

ஒருநாள் அரசரவர்களின் தர்பார்மண்டபத்திலே மகாவைத்தியநாதசிவனவர்கள். ஏனைய ஆஸ்தான வித்துவான்கள், மற்றும் அரண்மனை முக்கிய அலுவலர்கள், வெளிநாட்டினின்று வந்திருந்த பலவித்துவான்கள் ஆகிய அனைவரும் நிறைந்திருந்தனர். அப்பொழுது அனைவரும் கூடி அமைதியாக இசைபற்றியும், நாட்டியக்கலைபற்றியும், மற்றும் சிற்பம், சோதிடம், சித்திரம் இன்னும் உலக இயல்புகள் ஆகிய பலவற்றைப் பற்றியும் பேசி இருந்தனர். அரசர் அவர்களும் கலந்துகொண்டு மகிழ்ச்சியோடு இருந்தார்கள். ஆயினும் மகாவைத்தியநாத சிவனவர்கள் மட்டும் இதில் சம்பந்தப்படாதது போன்றும், ஏதோ தம்மனதில் சிறு குறை தோன்றுவது போன்றும் உள்ள மனவாட்டத்துடன் காணப்பட்டார்கள். இவ்வாறிருந்த நிலையை அரசரவர்கள் உடனே கவனித்ததுடன் மகாவைத்தியநாத சிவனவர்களை நோக்கித் "தாங்கள் மகிழ்ச்சியாகக் காணப்படவில்லையே! ஏதோ வருத்தமுற்றிருப்பதாகத் தோன்றுகிறதே! தங்களது முகம் வாட்டமுற்றிருக்கிறதே! தங்களுக்கு என்னகுறை! இங்குள்ளவர்கள் யாரேனும் முறைதவறி நடந்துவிட்டார்களா! எதுவாயினும் என்னிடம் உள்ளது உள்ளபடி கூறுங்கள். தங்களுடைய குறைகளை அறவே களைந்து விடுகிறேன். மகாவித்துவானாகிய தங்களுக்கு ஏதுகுறையும் இருத்தல் கூடாது" என்று மிகப்பரிவுடன் விசாரித்தார்கள்.

அரசரவர்கள் இவ்வாறு கூறியதும் மகாவைத்தியநாதசிவனவர்கள் அவர்களை நோக்கி "மகாராஜா அவர்களின் சமஸ்தானத்தில் இருக்கும்போது எனக்கு என்ன குறை நேரப்போகிறது. மகாராஜா அவர்களின் அன்பிற்கு ஆளாகிய எனக்கு யாதொரு குறையுமில்லை" "ஆனால்!............" என்று மௌனமாகச் சிறிது நேரம் இருந்து அங்குள்ள வித்துவான்களைப் பார்த்தார். மகாவைத்தியநாத சிவனவர்கள் அவ்வாறு வித்துவான்களைப்பார்த்ததும் அங்குள்ள வித்துவான்கள் நிலைமையை ஊகித்து அறிந்துகொண்டனர்.

உடனே அங்குள்ள வித்துவான்களில் ஒருவர் எழுந்து முன்வந்து அரசர் அவர்கள் அருகிற் சென்று "மகாவைத்தியநாத சிவனவர்களுக்கு யாதொரு குறையுமில்லை. அவர்கள் இச்சமஸ்தானத்திற்கு வந்ததுமுதல் இந்நாள்வரை மகாராஜா அவர்கள் நல்லமுறையில் அழகாக கானம் செய்வார்களென்ற செய்தியைப் பலர் வாயிலானும் அறிந்துள்ளார்கள். அவர்கள் எங்ஙனமாயினும் மகாராஜா அவர்கள் கானம் செய்து அதன் பாவரஸத்தைத் தாம் கேட்க வேண்டுமென்ற அவாமிகுதியுடையவர்களாகி விட்டார்கள். இவ்விபரங்களை மகாராஜா அவர்களிடம் எவ்வாறு தெரிவிப்பது! தமது விருப்பத்தை எவ்வாறு நிறைவேற்றிக் கொள்ளுவது என்ற குறையினாலேயே அவர்கள் வாட்டமுற்றிருக்கிறார்கள். இதைத்தவிர அவர்களுக்கு வேறு எவ்வித குறையுமிருப்பதாகத் தெரியவில்லை" என்று பணிவோடு மெதுவாகக் கூறினார்.

ஸ்ரீ ஆயில்யம் திருநாள் அரசர் அவர்கள் உடனே தம் முகத்தில் புன்னகை தவழ மகா வைத்தியநாத சிவனவர்களை நோக்கி "இது என்ன பிரமாதம். முன்பே தெரிவித்திருந்தால் தங்களது விருப்பத்தை நிறைவேற்றி இருப்பேனே. தங்கள் போன்ற மகா மேதைகள் என்னிடத்தில் இசைசம்பந்தமாக எதனைச் சுவைக்க இயலும்? ஆயினும் பரவாயில்லை, தங்களது எண்ணத்தை நிறைவேற்றுதலை முன்னிட்டு இப் பொழுதே பாட ஆரம்பித்து விடுகிறேன்" என்று அன்பு ததும்பக் கூறினார்கள். உடனே அரசரவர் களுக்கு ஏற்றதாக சுமார் ஐந்துகட்டைச் சுருதி தம்பு ராவில் கூட்டப்பெற்றது. சுருதி சேர்த்தானதும் அரச ரவர்கள் மகா வைத்தியநாத சிவனவர்களை நோக்கி உசேனி இராகத்தைச் சிறிது ஆரம்பம் செய்யுங்கள் என்று கூறினார்கள்.

பொதுவாக இசை வித்துவான்கள் உசேனி இரா கத்தை ஆலாபனை செய்ய எடுத்துக்கொள்ளும்போது அன்றைய நடைமுறையை வைத்து "சசபாஆஆ- நிதா அமா-பநிதநீசாஆஆ" என்றே முதலிற்றொடங் குவர். இவ்வாறிருக்க மகா வைத்தியநாத சிவனவர் கள் இந்த உசேனி இராகத்தை நடைமுறை வழக் கினின்றும் சிறிது மாற்றி "நிதநீச்சாஆஆ-ச்நிசரீச்நி தாபாஆ" என்று தொடங்கினார்கள். இங்கு கவனிக்க வேண்டுவது:- உசேனி இராகம் அல்லது வேறு இரா கம் எதுவாயினும், வித்துவான்கள் தமது சாமர்த் தியத்தினால் எவ்விடத்திலிருந்தும் தொடங்கி அந்தந்த இராகத்தின் சுவை தோன்றப் பாடி இசைத்துவிடுவர்.

அரசரவர்கள் இவ்வாறு கூறியதும் மகாவைத்தியநாதசிவனவர்கள் அவர்களை நோக்கி "மகாராஜா அவர்களின் சமஸ்தானத்தில் இருக்கும்போது எனக்கு என்ன குறை நேரப்போகிறது. மகாராஜா அவர்களின் அன்பிற்கு ஆளாகிய எனக்கு யாதொரு குறையுமில்லை" "ஆனால்!..........." என்று மௌனமாகச் சிறிது நேரம் இருந்து அங்குள்ள வித்துவான்களைப் பார்த்தார். மகாவைத்தியநாத சிவனவர்கள் அவ்வாறு வித்துவான்களைப்பார்த்ததும் அங்குள்ள வித்துவான்கள் நிலைமையை ஊகித்து அறிந்துகொண்டனர்.

உடனே அங்குள்ள வித்துவான்களில் ஒருவர் எழுந்து முன்வந்து அரசர் அவர்கள் அருகிற் சென்று "மகாவைத்தியநாத சிவனவர்களுக்கு யாதொரு குறையுமில்லை. அவர்கள் இச்சமஸ்தானத்திற்கு வந்ததுமுதல் இந்நாள்வரை மகாராஜா அவர்கள் நல்லமுறையில் அழகாக கானம் செய்வார்களென்ற செய்தியைப் பலர் வாயிலானும் அறிந்துள்ளார்கள். அவர்கள் எங்ஙனமாயினும் மகாராஜா அவர்கள் கானம் செய்து அதன் பாவரஸத்தைத் தாம் கேட்க வேண்டுமென்ற அவாமிகுதியுடையவர்களாகி விட்டார்கள். இவ்விபரங்களை மகாராஜா அவர்களிடம் எவ்வாறு தெரிவிப்பது! தமது விருப்பத்தை எவ்வாறு நிறைவேற்றிக் கொள்ளுவது என்ற குறையினாலேயே அவர்கள் வாட்டமுற்றிருக்கிறார்கள். இதைத்தவிர அவர்களுக்கு வேறு எவ்வித குறையுமிருப்பதாகத் தெரியவில்லை" என்று பணிவோடு மெதுவாகக் கூறினார்.

ஸ்ரீ ஆயில்யம் திருநாள் அரசர் அவர்கள் உடனே தம் முகத்தில் புன்னகை தவழ மகா வைத்தியநாத சிவனவர்களை நோக்கி "இது என்ன பிரமாதம். முன்பே தெரிவித்திருந்தால் தங்களது விருப்பத்தை நிறைவேற்றி இருப்பேனே. தங்கள் போன்ற மகா மேதைகள் என்னிடத்தில் இசைசம்பந்தமாக எதனைச் சுவைக்க இயலும்? ஆயினும் பரவாயில்லை, தங்களது எண்ணத்தை நிறைவேற்றுதலை முன்னிட்டு இப்பொழுதே பாட ஆரம்பித்து விடுகிறேன்" என்று அன்பு ததும்பக் கூறினார்கள். உடனே அரசரவர்களுக்கு ஏற்றதாக சுமார் ஐந்துகட்டைச் சுருதி தம்புராவில் கூட்டப்பெற்றது. சுருதி சேர்த்தானதும் அரசரவர்கள் மகா வைத்தியநாத சிவனவர்களை நோக்கி உசேனி இராகத்தைச் சிறிது ஆரம்பம் செய்யுங்கள் என்று கூறினார்கள்.

பொதுவாக இசை வித்துவான்கள் உசேனி இராகத்தை ஆலாபனை செய்ய எடுத்துக்கொள்ளும்போது அன்றைய நடைமுறையை வைத்து "சசபாஆஆ-நிதா அமா-பநிதநீசாஆஆ" என்றே முதலிற்றொடங்குவர். இவ்வாறிருக்க மகா வைத்தியநாத சிவனவர்கள் இந்த உசேனி இராகத்தை நடைமுறை வழக்கினின்றும் சிறிது மாற்றி "நிதநீச்சாஆஆ-ச்நிசரீச்நிதாபாஆ" என்று தொடங்கினார்கள். இங்கு கவனிக்க வேண்டுவது:- உசேனி இராகம் அல்லது வேறு இராகம் எதுவாயினும், வித்துவான்கள் தமது சாமர்த்தியத்தினால் எவ்விடத்திலிருந்தும் தொடங்கி அந்தந்த இராகத்தின் சுவை தோன்றப் பாடி இசைத்துவிடுவர்.

ஆயினும் ஒவ்வொரு இராகமும் எவ்விடத்திலிருந்து தொடங்குதல் வேண்டுமென்ற இலக்கணமுறை உண்டு. அவ்விலக்கண முறையாகிற விதிப்படி ஒவ்வொரு இராகத்தையும் எடுத்து இசைக்கப் பெற்ருல் அது நமது கற்பனை வளத்தை மிகுவிக்கும். அவ்விலக்கண விதிப்படி உசேனி இராகத்தைப் பாடுதல் வேண்டுமாயின் மகாவைத்தியநாத சிவனவர்கள் தொடங்கிய முறையே இலக்கணப் பொருத்த முடையதாகும். இவ்வாறு உசேனி இராகத்தை மகாவைத்தியநாத சிவனவர்கள் தொடங்கியதும் அரசரவர்கள் ஆஹா! நன்று எனக்கூறி அதைத் தொடர்ந்து தாம் பாட ஆரம்பித்தார்கள். அரசரவர்களின் சாரீரம் தங்கக் கம்பியை இழுத்தாற் போல மெல்லியதும் சன்னமுமாகிய ஒலி. சுருதியுடன் இழைந்து சாரீரமும் தம்புராச் சுருதியும் ஒன்றிவிட்டது. மந்தரத்தாயியிலிருந்து தாரத்தாயிவரை (மெலிவு–சமன்–வலிவு) எவ்விடத்திற் பாடினும் இசைநயத்துடன் கேட்போர் உள்ளத்தை உருக்கி உணர்ச்சிவசப்படச் செய்தது. ஒவ்வொரு சங்கதிகளும் அதன் இசைப்பிடிப்புக்களும் இலக்கிய இலக்கணமுறை தவருமல் மிகத் தெளிவானதாக அமைந்தது. கேட்கக் கேட்கத் தெவிட்டாமல் இன்னும் இன்னும் கேட்க வேண்டுமென்ற எண்ணத்தைத் தூண்டிக்கொண்டே இருந்தது. அரசரவர்கள் தம்மையும் மறந்து சுருதியோடு லயித்து இராக சொரூபம் குலையாமல் உசேனி இராகத்தை அலுப்புச் சலிப்பின்றி அரைமுகூர்த்தம் அதாவது முக்கால்மணி நேரம் வரைப் பாடி கேட்போரை மெய்மறக்கும்படி செய்து விட்டார்கள்.

அரசரவர்கள் உசேனி - சைந்தவி - ஆகரி - துவஜா வந்தி - அடாணா - செஞ்சுருட்டி - மாஞ்சி - பரசு- ஆகிய இவைகள் போன்ற இராகங்களைப் பைரவி- தோடி-கல்யாணி-காம்போதி-சங்கராபரணம் முதலிய இராகங்களைப்போல வெகு எளிதான முறையிற் கையாண்டு வெகுநேரம்வரை இசைத்து சிரமமின்றிப் பாடும் ஆற்றல் படைத்தவர்களாம். எனவே உசே னியை இவ்வாறு அதி அற்புதமாகப் பாடி அனைவரும் வியந்து பாராட்டும்படி இசைமழை பொழிந்து விட் டார்கள்.

மகாவைத்தியநாத சிவனவர்கள் உண்மையான கள்ளங்கபடற்ற உள்ளமும், நிறைந்த கலையும் கொண்ட நிறைகுடமாதலால் அரசரவர்களின் இசை நயம் அவர்களின் உள்ளத்தைக் கரைத்துவிட்டது. கண்களிருந்து கண்ணீர் மகிழ்ச்சி வெள்ளமாய்க் கரை புரண்டோடிற்று. அரசரவர்கள் பாடி முடிக்கும்வரை அவர்கள் ஓர் அரசர் என்ற தோற்றம் மகாவைத்திய நாத சிவனவர்களின் மனதைவிட்டு அகன்றுவிட்டது. தம்மோடு கூடச்சேர்ந்த ஒரு இசை நண்பர் என்றே எண்ணி விட்டார்கள். அரசரவர்களுக்கு அன்று பக்க வாத்தியமாகிய பிடில் மிருதங்கம் யாதுமில்லை. தம்புராச் சுருதியோடு ஒன்றி லயித்து இராகத்தையே ஆலா பித்து யாவரையும் தம்பால் ஈர்த்து விட்டார்கள்.

அரசரவர்கள் பாடி முடித்ததும் மகாவைத்திய நாத சிவனவர்கள் அரசரவர்களிடம் "நாங்கள் பிழைத்தோம் என்றார்கள். எங்களது அதிர்ஷ்டம்

தங்களைக் கடவுள் ஓர் அரசராகச் செய்துவிட்டார். தாங்கள் எங்களைப்போல் வித்துவானுகமட்டும் இருந் திருந்தால் எங்கள் போன்ற வித்துவான்களுக்குத் தம்புராவைக் கையிலெடுக்கும் யோக்கியதை ஏது? எங்களுக்குப் பேரும் புகழும் ஏது? எங்களை இசை வித்துவான்களென்று யார் மதிப்பார்கள்? எங்களைப் போன்ற சாமான்னிய இசைவித்துவான்கள் பேரும் புகழும் அடைதல் வேண்டுமென்ற எண்ணங்கொண்ட அந்தக் கடவுளானவர் தங்களுக்கு இசைஞானசம்பத் தையும் கொடுத்து இராச்சியாதிபதியான சம்பத்தை யும் அளித்து விட்டார்" என்று பெருமைபட எடுத் துரைத்தார்கள்.

உடனே அரசரவர்கள் "தங்கள் போன்ற மகா மேதைகள் இப்படி என்னைப் புகழ்ந்துரைக்கலாமா! எனக்கு என்ன தெரியும்! தங்கள் போன்ற மகாவித்து வான்களுடைய இசையின் திட்பநுட்பங்களை அறிதற் குக்கூட எனக்குச் சக்தி கிடையாதே! நீங்களெல்லாம் மகாவித்துவான்கள். உங்களது இசை விருந்துகளைக் கேட்கத்தகுந்த பேற்றை மட்டும் முற்பிறவியின் புண் ணியத்தால் சிறிது பெற்றிருக்கிறேன். அதனுல் ஏதோ பாடுகிறேன்! பாடுவதும் முறையோடு இராது! இதெல் லாம் அவைக்குப் பொருந்துவதாகுமா? ஏதோ கேள்விப்பாட்டு. தங்கள் முன்பு நான் பாடுதல் கூடாது. இருந்தாலும் தங்களுடைய அபார யோக் கியதாம்சங்களுக்கு நான் கட்டுண்டுள்ள படியால் தங்களது அவாவை நிறைவேற்றுதல் வேண்டும் என்றே பாடினேன். குற்றங்குறைகளை எல்லாம் என்

பொருட்டுப் பொறுத்தல் வேண்டுமென்று மிகவும் நய மாகக் கூறினார்கள்.

மகாவைத்தியநாத சிவனவர்கள் "மகாராஜா அவர்கள் அவ்வாறு கூறுதலாகாது. மகாராஜா அவர் களின் ஞானபலத்தை எட்டுதற்கு வித்துவான்கள் யாரு மில்லை என்று துணிந்து கூறுவேன். உசேனி இரா கத்தை முக்கால்மணி நேரமும் இசைக் குற்றமின்றி, வெறுப்புத் தோன்றாத நிலையில், பாடினவையே திரும் பத்திரும்பவராமல், எவ்விடத்தானும் அதில் இன்ப மும்-சுவையும் திட்பநுட்பங்களும், சவுக்க-மத்தியம-துரிதகால நடைகளின் ஒழுக்கமும், மனதை ஈர்த்து ஒருமுகப்படுத்தும் ஆற்றலும், இசையின் வளமான சிறப்பே இராகத்தின் முழு அமைதியிலும் தோன்றும் படி யாரால் கானம் செய்ய இயலும்! மகாராஜா அவர் கள் சிறந்த இசைஞான மேதையாக விளங்குவதனு லேயே இச்சமஸ்தானத்தில் ஏராளமான இசை அறிஞர் கள் ஆஸ்தான வித்துவான்களாகத் திகழுகின்றனர். வெளிநாட்டிலிருந்துவரும் பலவித்துவான்களையும் மகா ராஜா அவர்கள் ஆதரிக்க இயலுகின்றது. வித்துவான் களின் தராதரத்தைத் தராசுமுளைபோல் நிறுத்து அவ ரவர்களுக்குரிய இடத்தை அளிக்க முடிகின்றது. வித்து வான்களின் இசைத்திறமைகளை நன்கறிந்து அவர்கள் போற்றிப்புகழப்படுகிறார்கள். மகாராஜா அவர்கள் உண் மையான இசை அறிவுஞானத்தைப் பெற்றிருப்பதனால் எங்கள்போன்ற எத்துணையோ வித்துவான்கள் தங்களை யடைந்து தங்களால் பொருளும் பெயரும் புகழும் அடைகின்றார்கள். இதெல்லாம் எங்களது அதிர்ஷ்டமே

தவிர வேறல்ல" என்று உண்மையான முறையில் புகழ்ந்து உரைத்தார்கள். இவ்வாறு மகாவைத்திய நாத சிவனவர்கள் அரசரவர்களை மனமார உள்ளக் குளிர்ச்சியுடன் கண்களில் நீர்மல்க போற்றிப் பேசியதைக் கேட்டதும் அங்குள்ள வித்துவான்கள் அனைவரின் கண்களும் குளமாகிவிட்டன. அரசரவர்களும் உலகப் புகழ் பெற்ற ஒரு மேதையின் வாக்கினால் நமது சாமான்னிய இசையும் சிறப்புப் பெறும்பேறு பெற்றதே என்றெண்ணியதோடு கண்களிலும் நீர்மல்கக் காட்சியளித்தனர். இவ்வாறு அரசரவர்களும் இசைவித்துவான்களும் அன்றையதினம் ஓர் இசை விழாவாகத் திகழ்ந்ததை எண்ணி எண்ணி மிக்க மகிழ்ச்சி கொண்டனர். பிறகு அவரவர்களும் அரசரவர்களிடம் பிரியா விடை பெற்றுக் கொண்டனர்.

# 6
# ஸ்ரீ ஆயில்யம் திருநாள் அரசர் அவர்களும் சிவகங்கை பெரிய வைத்தியநாத ஐயரவர்களும்.

இராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த சிவ கங்கை என்ற ஊரில் பெரிய வைத்தியநாத ஐயர், சின்ன வைத்தியநாத ஐயர் என்ற இரண்டு இசை வித்துவான்கள் இருந்தனர். அவர்களிருவரும் பெரிய தகப்பனுர் சிறிய தகப்பனுர் பிள்ளைகள். அதாவது அண்ணன் தம்பி முறையினர். அவ்விருவரும் இசைத்திறமைமிக்கவர்கள். இராகவித்தாரம், தானம், நிரவல் முதலியவைகளில் பெரிய வைத்தியநாத ஐய ரும்; பல்லவி, சுரம், சுரபல்லவி, தாளவின்னியாசப் பல்லவி, நூதனதாளங்களிற் பல்லவி பாடுதல் ஆகிய இவைகளில் சின்ன வைத்தியநாத ஐயரும் சிறந்து விளங்கினுர்கள். அவர்களை இராமனுதபுரம் அரசரவர் களும், பல சமீன்தார்களும், கல்லிடைக்குறிச்சியில் சின்னப்பட்டம் வகித்துப் பிறகு திருவாவடுதுறையில் மகாசந்நிதானமாக இருந்துவந்த ஸ்ரீலஸ்ரீ மேலகரம்

சுப்பிரமணிய தேசிகர் அவர்களும், அவர்கள் போன்ற இன்னும் பல மடாதிபதிகளும் ஆதரித்துப் போற்றி வந்தார்கள். அவர்கள் செய்யும் இசைத்திறன் இசைப் பண்புகள் ஆகியவை பலவாற்றானும் மிகச் சிறந்தவை என்று அக்காலத்திய இசை வித்துவான்களாலும், ஏனைய மக்களாலும் மதிக்கப் பெற்றுவந்தன.

பெரிய வைத்தியநாத ஐயரும் சின்ன வைத்திய நாத ஐயரும் அக்காலத்திய வித்துவான்களாகிய பட்டினம் சுப்பிரமணிய ஐயரவர்கள், மகாவைத்திய நாத சிவனவர்கள், இராமசாமி சிவனவர்கள், கோயம் புத்தூர் இராகவ ஐயரவர்கள், திருக்கோடிக்காவல் பிடில் கிருஷ்ணையரவர்கள், திருவனந்தபுரம் வீணை கல்யாணகிருஷ்ண பாகவதரவர்கள், மிருதங்கம் நாரா யணசாமியப்பா, துக்காராம் ஆகிய அவர்களின் சம காலத்தியவர் ஆயினும் பத்து அல்லது பதினைந்து ஆண்டுகளுக்கும் மூத்தவர்களாவர். அவர்கள் காலத் தில் கச்சேரிகளுக்காக அலைந்து திரிந்து ஓடியாடும் வழக்கம் இல்லை. பிரபுக்கள், சமீன்தார்கள், மடாதி பதிகள், அரசர்கள் யாவராலும் விரும்பி அழைக்கப் பெற்று இசை நிகழ்ச்சிகள் நடத்தி அவர்களால் அளிக் கப் பெறும் கௌரவமான பொருளைப்பெற்று மன அமைதி அடைவார்கள். பொருளை ஏராளமாகச் சேர்த்தல் வேண்டுமென்ற பேரவா அவர்களிடம் அறவே கிடையாது. அக்காலத்தில் திருவாவடுதுறை சின்னப்பட்டம் மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் அவர் களும், இராமநாதபுரம் அரசர் அவர்களும் அவர்களை அடிக்கடி ஆதரித்துள்ளார்கள்.

பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் ஒரு சமயம் குடும்பம் நடத்த இயலாத நிலையில் வறுமையுற்றிருந்தார். அப்பொழுது திருவனந்தபுரம் அரசரவர்களைப் பேட்டிகண்டு பொருளீட்டித் தமது வறுமையைத் தீர்த்துக்கொள்ள எண்ணினார். அக்காலத்தில் ஸ்ரீ ஆயில்யம் திருநாள் அரசரவர்கள் திருவனந்தபுரத்தை ஆண்டுவந்தார்கள். அவர்கள் சங்கீத ஞானத்தில் மிகச் சிறப்புற்றவரென்றும், தம்மிடம் வரும் இசை வித்துவான்களை ஆதரித்து அவரவர்களின் புலமைக்குத் தக்கவாறு மரியாதைகளையும் பொருள்களையும் கொடுத்து இசைவித்துவான்களின் குறைகளைத் தீர்த்து வருகிறார்கள் என்றும் பெரிய வைத்தியநாத ஐயர் அவர்கள் கேள்வியுற்றிருந்தார்.

பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் கச்சேரிக்காக எங்கு சென்றாலும் தமது தம்பியாகிய சின்ன வைத்தியநாத ஐயரையும் அழைத்துச் செல்வதே வழக்கம். பெரிய வைத்தியநாதஐயர் திருவனந்தபுரம் அரசரவர்களைப் பேட்டி கண்டு தமது வறுமைப் பிணியைத் தீர்த்துக் கொள்ளல் வேண்டுமென்று எண்ணிப் புறப்பட்டபோது தம்மோடு சின்ன வைத்தியநாதஐயரையும் அழைத்துச் செல்லாமல் தாம் மட்டுமே புறப்பட்டார். தாம் தனியாகப் புறப்பட்ட அக்காலை கிராமம் கிராமமாகச் சென்று ஆங்காங்குக் கிடைக்கும் சிறு சன்மானங்களையும் ஏற்றுக்கொண்டு அதன் உதவியால் சிலசமயம் மாட்டு வண்டியிலும், சிலசமயம் தபால் வண்டியிலும், இன்னும் சிலசமயம் நடந்து சென்றும், மற்றுமொரு சமயம் கூண்டு இல்லாத பாரவண்டிகளில்

சென்றும் இவ்வாருக இருபத்தைந்து அல்லது முப்பது நாட்கள் கழிந்தபின் திருவனந்தபுரம் வந்து சேர்ந் தார்கள். அக்காலம் மிகுந்த தொலைவு பிரயாணம் செய்தலென்பது எளிதன்று என்பதை இக்காலத் தோர் அறிதல் வேண்டும்.

திருவனந்தபுரம் அரசர் அவர்கள் தம்மை அண்டி வரும் இசை வித்துவான்கள், வீணை – பிடில் – புல்லாங் குழல் – மிருதங்கம் - நாதஸ்வரம் ஆகிய கருவிகளில் கைதேர்ந்த புலவர்கள், கதாகாலட்சேபம் செய்யும் வித்துவான்கள், இராமாயண – பாரத – பாகவத - சாத்திரம் ஆகிய இவைகளையறிந்த பண்டிதர்கள், மற்றும் பரதநாட்டியம், கூத்துக்கள், பொம்மலாட்டம், அட்டாவதானம், தசாவதானம், பீதாம்பர வித்தை, கதைகளி, சாக்கையார்கூத்து ஆகிய கலைகளில் தேர்ந் தவர்கள் ஆகிய இவர்கள் பலநாள் தங்கி இளைப்பாற எல்லா வசதிகளும் கூடிய பல கட்டிடங்களைத் தமது அரண்மனைக்குப் (கொட்டாரத்திற்குப்) பக்கத்திலே யே அமைத்திருந்தார்கள். வருகிற கலைஞர்களின் தகுதிக்குத் தக்கவாறு இருத்தற்கு இடமும், உணவு தயாரித்துக் கொடுக்கவும், மற்றும் அவர்களுக்கு வேண்டியவற்றை உடனுக்குடன் கவனிக்கவும், அதற் குரிய ஆட்களையும் அதிகாரிகளையும் நியமித்திருந்தார் கள். வித்துவான்கள் எத்துணை காலம் தாமதித்த போ திலும் அவர்களின் நன்மைகள் நன் முறையில் கவனித்து வரப்பெறும்.

இக்காலம் அரசரவர்களின் அரண்மனை பத்மநாப சுவாமி கோயிலிலிருந்து வெகுதூரம் (பலமைல்கள்)

தள்ளி இருக்கின்றது. அக்காலத்தில் அரசரவர்கள் தாமதிக்கும் அரண்மனையானது பத்மநாபசுவாமி கோயிலுக்குப் பக்கலிலேயே இருந்தது. அதாவது இப்பொழுது உள்ள மேத்தன் மணிக்கூண்டுக் கட்டிடத்தின் உள்வாயிலிலே அரண்மனை (கொட்டாரம்) இருந்ததாகக்கூறுவர். அந்த இடம் கச்சேரிகள் நடத்தப் பெறும் தர்பார் மண்டபமாயும் சிறிது காலம் இருந்தது என்பர். திருவனந்தபுரம் அரசர்கள் அனைவரும் பத்மநாபசுவாமியின் தாசனுகவேயிருந்து இராச்சிய பாரத்தை ஆண்டு வந்தபடியால் பத்மநாபசுவாமியின் பூசை முதலிய வழிபாட்டை முன்னிட்டு கோயிலின் பக்கலிலேயே அரசவர்களின் அரண்மனை இருந்தது என்பது பொருந்தும். கோயிலுக்கும் அரண்மனைக்கும் நிலவறை உண்டென்றும் கூறுவர்.

தாம் ஒரு சங்கீத வித்துவான் அல்லது இன்ன கலையில் தேர்ச்சியுள்ளவன், அரசரவர்களைப் பேட்டி காண்பதற்காக வந்திருக்கிறேன் என்று அக்கட்டிடத்து அதிகாரியிடம் கூறினால் போதும். உடனே அவரின் தேவைகள் கவனிக்கப்பெறும். அரசரவர்களின் பேட்டி கிடைக்கும் வரை எத்தனை மாதங்களாயினும் சரி, அங்கே எல்லா வசதிகளுடனும் தங்கியிருக்கலாம். இது ஒரு புனிதமான ஏற்பாடு. அக்காலத்தில் ஓர் அயல் நாட்டு வித்துவான் அரசரவர்களைப் பேட்டி காணல் வேண்டுமாயின் அரசஅவையில் உள்ள ஆஸ்தான வித்துவான்கள் யாராவது ஒருவரிடம் செய்தியைக் கூறல் வேண்டும். அந்த ஆஸ்தான வித்துவானுனவர் சமய சந்தர்ப்பங்களைத் தெரிந்து

கொண்டு அரசர் அவர்களிடம் செய்திகளைத் தெரிவிப் பார். பின்பு அரசரவர்களின் சம்மதமறிந்து அவர் களிட்ட கட்டளையைப் பேட்டிக்காகக் காத்திருக்கும் வித்துவானிடம் தெரிவிப்பர். பின்பு முறையே வேண்டிய ஏற்பாடுகள் செய்வார்கள். பேட்டி கிடைக் கும்அவரவர்களின் திறமைகள் அரசரவர்களின் திரு முன்பு செயல் படுத்தப்பெறும்.

அக்காலத்தில் அரசரவர்களின் சமஸ்தானத்தில் பலப்பல ஆஸ்தான வித்துவான்கள் இருந்தனர். ஒவ்வொருவரும் இசைத்திறமையில் மிக வல்லுநர்கள். மகா மேதைகள்' அவ்வாறுன பல இசை வித்துவான்களில் வயதுமுதிர்ந்த பரமேசுரபாகவதர், கோயம்புத்தூர் இராகவஐயர், இராமசுவாமிபாகவதர், சாம்பபாகவதர், கடுவாய்க் கிட்டுபாகவதர், வீணை கல்யாணகிருட்டினபாகவதர் ஆகிய அவர்கள் முக்கிய மானவர்கள். பெரியவைத்தியநாத ஐயரவர்கள் மேலே கூறியபடி அயல்நாட்டிலிருந்து வந்த வித்துவான்கள் தங்கும் விடுதியில் இருந்துகொண்டு, தாம் வந்திருக் கும்செய்தியைப் பல ஆஸ்தான வித்துவான்களிடமும் கூறியிருந்தார். அவ்வாறு கூறியும் தாம் வந்து மூன்று மாதகாலங்களாகியும் அரசரவர்களிடமிருந்து தமக்கு யாதொரு செய்தியும் கிடைக்காததைப் பற்றிச் சிந் திக்கலானுர். இவ்விபரங்களைத் தம் கண்ணிற் படும் ஆஸ்தான வித்துவான்களிடம் கேட்கும்போது அவர் கள் "நாங்கள் அரசரவர்களிடம் தங்கள் வரவைப் பற்றியும் தங்களுடைய இசைத்திறன் பற்றியும் தெரி வித்து விட்டோம். ஆனுல் தங்களுடைய இசை

நிகழ்ச்சியை எப்பொழுது நடத்தல் வேண்டும், பேட்டிக்குத் தங்களை எப்பொழுது அழைத்து வரல் வேண்டும், தங்களை எப்பொழுது தங்களுடைய ஊருக்கு அனுப்புவித்தல் வேண்டுமென்ற ஆணை அரசர வர்களிடமிருந்து எங்களுக்குக் கிடைக்கவில்லை. நாங் கள் என்ன செய்வது'' என்று கூறி வந்தனர்.

பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் அரசரவர் களின் பேட்டிக்காக மூன்று மாத காலம் காத்திருந்தும் அரசரவர்களின் பேட்டி கிடைக்கவில்லை. ஏனெனின் சமஸ்தானத்திலுள்ள ஆஸ்தான வித்துவான்களில் ஒருவராவது பெரியவைத்தியநாத ஐயரவர்கள் வந்து காத்திருக்கும் செய்தியை அரசரவர்களிடம் கூறவில்லை. இவ்வாறு கூருததற்குச் சில காரணங்கள் உண்டு. அதாவது வெளிநாட்டு வித்துவான்களை அரசரவர்கள் சமுகத்திற்கு அறிவித்தல்வேண்டு மாயின் முதலில் ஒழுக்கம், சீலம், ஆசாரம், பக்தி ஆகியவை அவர்களிடம் இடம் பெற்றுள்ளனவா என்பதை முதலில் அறிந்தே தெரிவித்தல் வேண்டும். இவ்வகையைக் கவனிக்கும்போது பெரியவைத்திய நாத ஐயரவர்கள் சிறிது போதைக்கு உட்பட்டவர். அதுவும் தமது சரீர நலனுக்காகவே உபயோகிக்கக் கூடியவர் ஆயினும், இதையறிந்த ஆஸ்தான வித்து வான்களுக்கு அவரைப்பற்றி அரசரவர்களிடம் அறி விக்க இயலாததற்கு ஓர் காரணமாயிற்று. பெரிய வைத்தியநாத ஐயரவர்களின் இசை ஞானத்திறமை, சாரீரவளம், இசையை வெளிப்படுத்தும் எளிமை யும் அருமையும் கூடிய செயற்பாடு, அவரது

புகழ் முதலிய யாவற்றையும் அறிந்த ஆஸ்தான வித்து வான்கள் அரசரவர்களிடம் பேட்டிகாண வாய்ப்பளித் தால் அவருடைய அசையாற்றலும், பெருந்திறமையும் அரசரவர்கள் அறிந்து அவர்கள்பால் மனம் ஈடுபட்டு அவர்களையும் தமது ஆஸ்தான வித்துவானுக அமர்த்தி விடின் தங்களுடைய மதிப்பிற்கு ஏதாவது ஊனம் ஏற் பட்டுவிடுமோ! என்ற ஐயப்பாட்டின் மேலீட்டால் அவர்களைப் பற்றித் தெரிவிக்கவில்லை என்பதும் ஒரு காரணமாகும். இந்த வகையில் எல்லா ஆஸ்தான வித்துவான்களும் ஒற்றுமையுடையவராய் இருந்தனர்.

இது இவ்வாறிருக்க ஒருநாள் பெரியவைத்தியநாத ஐயரவர்கள் மூன்றுமாத காலமாகியும் அரசரவர்கள் பேட்டி நமக்குக் கிடைக்கவில்லையே! நாம் உண்ணு வதும் உறங்குவதுமாகக் காலம் கடத்துகிருேமே! வீணுகக் காலங்கழிகின்றதே! வீட்டிற்குச் செலவுகள் வகைக்காக ஒன்றும் அனுப்புதற்கு இயலவில்லையே! மனைவி மக்கள் என்ன செய்கின்றனரோ! ஏது செய் கின்றனரோ! அறியக்கூடவில்லையே! அரசரவர்களின் பேட்டியானது இன்றுகிடைத்துவிடும்! நாளைகிடைத்து விடும்! அல்லது இன்னும் ஒரு வாரத்திலாயினும் கிடைத்துவிடும்! இசை நிகழ்ச்சி முடிந்து அரசமரி யாதைகளைப்பெற்று தக்கபொருள்களோடு ஊர்சென்று மனைவி மக்களைக்கண்டு அவர்களடையும் மகிழ்ச்சி யைக்கண்டு களிக்கலாமென்று எண்ணி அவர்களுக்கு இது நாள் வரை யாதொரு தகவலும் தெரிவித்தோ மில்லையே! என்று அல்லும் பகலும் இடைவிடாது ஏதோ சிந்திக்கலானுர். இரவெல்லாம் உறக்கமின்றி

மனம் ஓர் நிலை கொள்ளாது என்செய்வது ஏதுசெய்வது என்று தத்தளித்துக் கொண்டிருந்தது. அவர் மிகச் சஞ்சலத்திற்கு உட்பட்டார்.

பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் இவ்வாறு சஞ் சலப் பட்டுக்கொண்டிருந்த அந்த இரவில் அரண்மனை யில் எக்காரணத்தாலோ அரசர் அவர்களுக்கு உறக் கம் சரியாக வராமல் புரண்டு புரண்டு படுத்து வந்த னர். அவர்கள் பலவிதத்திலும் உறக்கங்கொள்ள முயற்சித்தும் உறங்க இயலவில்லை. ஆகையால் படுக்கைவிட்டு எழுந்திருந்து அரண்மனையின் முன் முகப்பிலுள்ள வெளிப்புறத்தில் சற்று உலாவிக்கொண் டிருந்தார்கள். இரவு நேரமாகையால் அரசரவர்களு டன் யாருமில்லை. அரண்மனையின் முன்முகப்பிலுள்ள பெரியவாசலின் இரும்புக்கிராதி பூட்டப்பெற்று அங்கு இரண்டு இரவுக் காவலர்கள் மட்டும் உலாவிக்கொண் டிருந்தனர். இரவுக் காவலர்கள் இரவு முழுவதும் உறக்கமின்றி ஒருவருக்கொருவர் மாற்றி மாற்றி அவ் வாசலைக் காவல் செய்துகொண்டே இருத்தல் வேண் டும். அவ்வாசலுக்கு மேலேதான் மேத்தன்மணிக் கூண்டு உள்ளது.

பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் அன்றிரவு முழுவதும் சஞ்சல மனமுடையவராகி சிந்தித்துப் பிறகு உறுதியான ஓர் முடிவிற்கு வந்து விட்டார். "இனி இங்கிருப்பதில் பயனில்லை. சூரியன் உதிப்பதிற்கு முன் பாகவே பயணம் சென்று கிராமங்கள் தோறும் தங்கி அங்குள்ள செல்வர்கள், பொதுமக்கள், கோயில் அதி

காரிகள், சமீன்தார்கள் முதலியவர்களிடத்து தமது இசையாற்றலை வெளிப்படுத்தி அவர்களால் கிடைக்கும் சிறிய பொருளுதவியைத் திரட்டிக்கொண்டு தமது ஊர் திரும்புதலே முறை. இனி இங்கு காத்திருப்பதில் பயனில்லை'' என்று முடிவு செய்து விட்டார். அதன் பின்பு அவருக்கு உறக்கம் வராமையான் படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்து கொண்டு யாதொருவித மான சிந்தனையுமின்றி வாய்க்கு வந்தபடி பாடலானார். அன்று பௌரணமி நாளாகையால் முழுமதி மிக்க ஒளி வீசிற்று. எவ்வித எண்ணங்களுமின்றி பாடப்பெற்றதால் இயற்கையாகவே 'பூபாள' இராகம் அவரிடமிருத்து உதயமாயிற்று அவ்வாறு வெளிவரப்பெற்ற அந்த பூபாள இராகத்தை வெகு அழகாகவே ஆலாபனை செய்யலானார்.

அவரது சாரீரம் கம்பீரமானது. மேல்ஸ்தாயிக்குப் போகப்போக அது கோபுரம்போன்று அடிபெறுத்து நுனிசிறுத்து வருவதான ஒலியுடையது. முதலில் கனமும் கம்பீரமுமாகவும் பின்பு ஆரோகணரீதியில் சுரங்கள் படிப்படியே மேலே செல்லச்செல்ல சிறிது சிறிதாக நாதம் மென்மையடைந்து வருவது அவருடைய சாரீர வளம். மெல்லினமாக நாதம் சிறிதாகுமேயன்றி அவரது கம்பீரமானஒலி வெகுதூரம் கேட்கும் அமைதியுடையது. ஓர் நாகசுரத்தை வெகுதூரம் நின்று கேட்டுச் சுவைப்பதுபோல அவருடைய இசையை வெகுதூரம் இருந்துகேட்டு இசையின் நுட்பதிட்பங்களை அறியலாம். இரவு வேளையாதலால் அவரது பூபாள இராக ஒலி மிகவும் சுகமாகவும், அழகான

பாணியுடனும், சுருதியோடு இழைந்து குழைந்து இன்பத்தை அளித்தது. அவர் இவ்வாறு பாடிக்கொண்டு இருக்கும்போது அக்கம்பக்கத்திலுள்ள மரங்களில் தங்கி இருக்கும் காகங்கள் கரையலாயின. பொதுவாகக் காகங்கள் பொழுது விடியும் நேரத்தில் கரைவதே இயற்கை. அவர் பாடும்போது இரவு சுமார் ஒரு மணி இருக்கும். நல்ல நிலவு. அமைதியான வேளை. நிலாவெளிச்சத்தினுல் பொழுது விடிந்துவிட்டது போன்ற தோற்றம் இருந்தது. அவ்வெளிச்சத்தினின்றும் காகம் கரைதலினின்றும் பொழுது விடிந்து விட்டதோ என்ற எண்ணத்தை யாவருக்கும் உண்டாகியது.

பெரிய வைத்தியநாத ஐயரவர்களின் கம்பீரமான சாரீரத்திலிருந்து வெளிப்பட்ட அந்த பூபாள இராகமானது அரண்மனை முன்வெளியில் உலாவிக்கொண்டிருந்த அரசரவர்கள் செவிகளிலும் ஒலித்தன. பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் வித்துவான்கள் தங்கும் கட்டிடத்தின் மேல்மாடியிலே தங்கிஇருந்தபடியால் அவர் பாடியபோது அவ்விசையொலி மிகவும் நன்ருக வெகுதூரம் கேட்கும் வாய்ப்புப் பெற்றிருந்தமையான் அவ்விராகத்தின் ஒவ்வொரு அமைதிகளும் அரசரவர்கள் செவிகளிலே வெகு தெளிவாகவே ஒலித்தன. அதனுல் அவர் பாடிய இராகச்சுவையை நன்ருக அறிய முடிந்தது.

அரசரவர்கள் தமது செவியில் பூபாள இராகம் ஒலிப்பதையும் காகங்கள் கரைதலையுங்கண்டு வியப்புற்ருர். இன்றிரவு நமக்கு நன்ருகத் தூக்கம் வர

வில்லையே, புரண்டு புரண்டு படுத்தோமே, உறக்கம் வராத காரணத்தால் நாம் உலாவிக்கொண்டு இருக்கிறோமே! அதற்குள்ளாகவா விடிந்துவிட்டது! இன்று இரவு விரைவில் சென்று விட்டதா! என்று எண்ணிய நிலையில் வாயிலைக் காவல் செய்யும் இரவுக் காவலாளியைக் கூப்பிட்டு 'மணி என்ன! பார்!' என்றார்கள். காவலாள் மணியைப்பார்த்து "ஒன்றரை ஆகிறது மகாராஜா" என்று கூறினன். உடனே அரசரவர்கள் மேலும் வியப்புற்றவராகி ஒரு மணிக்குப் பூபாளம் பாடி காகம் கரைய வேண்டுமாகில் பாடுவார் ஓர் இசைமேதையாக இருத்தல்வேண்டும். அருள் பெற்றவராகவும் இருத்தல் வேண்டும். அவர் யார் என்று தெரியவில்லை. இப்படி ஒரு வித்துவான் வந்திருக்கிறார் என்று இன்றுவரை நம்மிடம் ஒருவரும் கூறவில்லையே. ஆனால் இசையோ வித்துவான்கள் தங்கும் கட்டிடத்திலிருந்தே ஒலிக்கின்றது என்ற எண்ணமிட்டவர்களாய், 'வாயில் காவலாளியை அழைத்து வித்துவான்கள் தங்கும் விடுதியிலிருந்து பாட்டு ஒலி கேட்கிறது. நீ சென்று பாடுவது யார்! எந்த ஊர்! எப்போழுது வந்தார்! என்று விபரங்களைக் கேட்டு வா!' என்றார்கள்.

உடனே சேகவன் விரைந்து சென்று பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் தங்கியிருந்த விடுதியிலுள்ளவர்களைத் தட்டி எழுப்பி பெரிய வைத்தியநாத ஐயரவர்களிடம் செய்திகளைக் கூறினன். பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் அச் சேகவகனிடம் "நான் இங்கு வந்து மூன்று மாத காலமாகிறது. என் பெயர் பெரியவைத்தி என்பதாகும். எனது

சொந்த ஊர் சிவகங்கை. நான் அரசரவர்களைப் பேட்டி காணுதல் பொருட்டு காத்து இருக்கிறேன். என்னைப் பற்றிய செய்திகளை இங்குள்ள ஆஸ்தான வித்துவான் கள் அனைவரிடமும் கூறியுள்ளேன். மூன்று மாத கால மாகக் காத்திருந்தும் அரசரவர்கள் பேட்டி எனக்குக் காணக் கிடைக்காததால் விடிந்தவுடன் நான் எனது சொந்த ஊர் செல்லப் பயணமாகி விட்டேன். நான் சிவகங்கையிலிருந்து முப்பது நாள் பிரயாணம் செய்து இவ்விடம் வந்து மூன்று மாத காலமாகிற படியால் வீட்டிலுள்ள மனைவி மக்கள் யாவரும் செலவுக்குப் பொருள் இல்லாமலும், என்னைப்பற்றியும் கவலையுறு வர். ஆதலால் நான் இனி தாமதப்பது முறையல்ல என்ற முடிவுக்கு வந்து விட்டேன் என்றும்; இவ்விடம் தங்கி இருந்த இந்த மூன்று மாத காலத்தில் அரசரவர் களைப் பேட்டி காண முடியாத குறையொன்று தவிர குளித்தல்-சபம்-பூசை-உணவு ஆகிய இவைகளில் எனக்கு இங்கு யாதொரு குறையுமில்லை'' என்றும்; இன்னும் பலவிதங்களிலும் தமது விபரங்களை எடுத்துக் கூறி அவனை அனுப்பினர். சேவகனும் எல்லாச் செய்தி களையும் கூட்டியும் குறைத்தும் உரையாமல் உள்ளது உள்ள படியே அரசர் அவர்களிடம் தெரிவித்தான். அரசரவர்களும் அந்நேரத்திலேயே அச் சேவகனிடம் ''நீ உடனே போய் அந்த வித்துவானை ஊர் செல்லல் வேண்டாம். நாளை அரசரவர்கள் தங்களுக்குப் பேட்டி தர இசைந்துள்ளார்கள். உங்களை அரசரவர்கள்பால் அழைத்துச் செல்லதக்க வித்துவான்களும் அதிகாரி களும் வருவார்கள். அரசரவர்களைப் பேட்டி கண்டு விட்டு அதன் பின்பு அரசரவர்களின் உத்தரவு பெற்றுக்

கொண்டு தாங்கள் ஊர் செல்லலாம் இது அரசரவர் களின் கட்டளை என்று கூறிவா! நானும் உறங்கச் செல்லுகிறேன்'' என்று கூறிச் சென்ருர்கள்.

அரசரவர்கள் கட்டளைப்படி அச் சேவகனும் விரைந்து சென்று பெரிய வைத்தியநாத ஐயரவர்களி டம் அரசரவர்கள் கூறிய செய்திகளைச் சொல்லி விட்டு பின்பு தம் வேலையில் ஈடுபடலாயினன். பெரியவைத் தியநாத ஐயரவர்களுக்கு மிக்க மகிழ்ச்சி. நாளை அரசர வர்களின் பேட்டி காணலாம். இசை வினிகை நடக் கும். அரசரவர்கள் வியக்கும்படி நாம் இசையைக் கானம் செய்தல் வேண்டும். கடவுள் அருளினுலே இன்றிரவு பாடியதைத் தற்செயலாக அரசரவர்கள் கேட்டிருக்கிருர்கள். ஆஸ்தான வித்துவான்கள் எவ ரும் தம்மைப் பற்றியும் தாம் வந்திருக்கும் விபரம் பற்றியும் அரசரவர்களிடம் தெரிவிக்கவில்லையெனத் தெரிகின்றது. இவர்கள் ஏன் என்னைப்பற்றி அரசரவர் களிடம் கூறவில்லை? என்ன காரணமிருக்கும் என்று பலவாறு சிந்தித்தவராய்ப் படுக்கையில் படுத்திருந் தார். மறுநாள் நடக்கவிருக்கும் இசை நிகழ்ச்சியில் தாம் செய்ய வேண்டிய முறை பற்றி ஆழ்ந்து எண்ணிய வாறு அயர்ந்தார்.

உறங்குவதற்குச் சென்ற அரசரவர்களுக்குப் பெரிதும் கோபம். ஆஸ்தான வித்துவான்கள் இது போன்ற மகாவித்துவான்களின் வரவைத்தம்மிடம் தெரிவிக்காமல் மறைத்ததற்கு என்ன காரணம்; இது போன்று இன்னும் எத்துணை காரியங்கள் நடந் துள்ளனவோ! விடிந்ததும் இதற்கு ஒரு முடிவு கா ணல்வேண்டுமென்று மிக வருத்தமுற்றவர்களாக

உறக்கத்தில் ஆழ்ந்தார்கள். மறுநாள் விடிந்ததும் காலைக்கடன் சிற்றுண்டி முதலியயாவும் முடிந்தவுடன் வழக்கப்படி தர்பார் மண்டபம் சென்றார்கள். ஆஸ்தான வித்துவான்கள் அதிகாரிகள் முதலிய யாவரும் வந்திருந்தனர். அப்போது அரசரவர்கள் ஆஸ்தான வித்துவான்களை நோக்கி "பெரிய வைத்தியநாத ஐயர் என்ற ஒரு மகாவித்துவான் இவ்விடம் வந்து மூன்று மாதங்கள் ஆகின்றனவே. அவர்களைப் பற்றி இதுவரை நீங்கள் என்னிடம் கூறவில்லையே. அதற்கு என்ன காரணம், இவ்வாறு செய்தல் முறையாகுமா!" என்று சிறிது கடிந்து கேட்டார்கள்.

அரசரவர்களின் கோபத்திற்குப் பயந்த ஆஸ்தான வித்துவான்கள் "தங்கள் பேரில் யாதொரு குற்றமில்லை என்றும், பெரியவைத்தியநாத ஐயரவர்கள் உலகப் புகழ் பெற்றவர், அவரது இசை போற்றத்தக்கது, இசையில் மகா மேதை, அவர்களுடைய இசைவினிமையை மகாராஜா அவர்கள் கேட்டு மகிழ்தல் வேண்டுமென்பதே எங்கள் அவா. அவர்களின் இசை நிகழ்ச்சி மகாராஜா அவர்கள் திருமுன்புநடக்கவேண்டுமே! நடக்காது போய்விடல் கூடாதே! என்று நாங்கள் கவலையுள்ளவர்களாக இருந்தோம். ஆனால் அவர்களைப் பற்றி மகாராஜா அவர்களிடம் கூறுதற்கு இயலாமலிருக்கிறதே என்று நாங்கள் வருத்த முற்றிருந்தோம். சமயமறிந்து மகாராஜா அவர்களுக்கு அவர்பால் நல்லெண்ணம் உண்டாகும்படி செய்து அவர்களது இன்னிசையை மகாராஜா அவர்கள் கேட்டு மகிழும்படி செய்தல் வேண்டுமென்று எண்ணியிருந்தோம். இக்காரணங்

கொண்டே இந்த மூன்று மாத காலமாக அவர்களை ஊருக்குச்செல்லாத வண்ணம் நாங்கள் கண்காணித்து வருகின்ருேம். இன்றே அம் மகாமேதையின் இன்னிசையை மகாராஜா அவர்கள் கேட்கக் கடவுளின் திருவுளம் இரங்கிற்றென்றெண்ணி சந்தோஷ மடைகின்ருேம்'' என்றனர்.

உடனே அரசரவர்கள் வித்துவான்களை நோக்கி ''இத்தகைய பெரிய இசை மேதையைப் பற்றித் தாங்கள் அறிந்தும் இவ்வளவு காலம் எனக்குத் தெரிவிக்காமல் மறைத்ததின் காரணமென்ன?'' என்று வினவினர்கள் ''மகாராஜா! அவர்கள் இசைக் கலையின் மன்னராக இருந்தும் தங்களின் எதிரே சமமாக இருக்க தகுதியற்றவராயிற்றே! அவர் பெரிய குடிகாரர். இதனை நாங்கள் முன் கூட்டியே கூறிஞல் மகாராஜா அவர்கள் சினந்து குடிகாரனைப் போகச் சொல் என்று ஆணையிட்டுவிட்டால், அவரிடமுள்ள அபார யோக்கியதாம்சங்களை - இசைப்பண்புகளை மகாராஜா அவர்கள் அனுபவிக்க இயலாது போய்விடுமே என்று அஞ்சித்தடுமாற்றத்தோடு இத்தனை காலம் வரை வாளா இருந்தோம்'' என்று கூறினர்.

ஆஸ்தான வித்துவான்கள் அரசரவர்களிடம் கூறிய அந்த நேரத்தில் பொருத்தமான வார்த்தைகளை கேட்டதும் அரசரவர்கள் 'ஓஹோ! அப்படியா செய்தி! சரிதான். ஆஸ்தான வித்துவான்கள் பேரிலும் குற்றம் இல்லை. அவர்கள் யோசித்து முறைப்படியேதான் நடந்து கொண்டுள்ளனர். எவ்வாருயினும் தாம் அவர்

களுக்குப் பேட்டி அளிப்பதாகச் சேவகன் மூலம் அறிவித்து விட்டோம். அச் சொல்லைக் காப்பாற்றி அம்முறையை அனுசரிப்பதுதான் நல்லது'' என்று எண்ணினார்கள். இவ்விபரங்களை ஆஸ்தான வித்துவான்களிடமும் கூறி முக்கியமான வித்துவான் ஒருவரையும் தக்க அலுவலர் ஒருவரையும் அனுப்பி வரவழைத்தார்கள். பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் வரவை எதிர்கொண்டழைத்து அவர்களுக்கு இன் முகத்தாலும் இன் சொல்லாலும் வரவேற்று தமது தர்பாரில் உட்காரச்செய்து சிறிது அளவளாவிக் கொண்டிருந்தனர். அவர்களின் யோக க்ஷேமங்களை அரசரவர்கள் நன்றாக மனதில் வாங்கிக்கொண்டார்கள்.

பின்பு தமது தர்பார் மண்டபத்திலே இசைப் பெரும் புலவர்களும், சமஸ்தானத்து அதிகாரிகளும், ஏனைய பிரபுக்களும் வீற்றிருந்த அந்த இசை அரங்கிலே பெரிய வைத்தியநாத ஐயரவர்களின் இன்னிசை விருந்து நடந்தது. அரசரவர்கள் இசைத்திறமும் வளமான சாரீரமும் நல்ல ஞானமும் உடையவராகையால் பெரிய வைத்தியநாத ஐயரவர்களின் இசையில் கட்டுண்டு மௌனிகளாகி விட்டார்கள். கம்பீரமான சாரீரத்துடன்; ஓசையின் நயமானது கோபுரம் எழுப்பியது போன்று ஒலித்து ஒவ்வோர் செயலும் மிகத் தெளிவாகவும் எளிதாகவும் அவரது சாரீரத்தினின்று வெளியாயிற்று. அவ்வாறு சிறப்பு மிகுந்த இன்னிசையை அரசரவர்கள் நுகர்ந்து மிக்க மகிழ்ச்சியில் மூழ்கிக் கண்கள் மூடி அவ்விசையின்பத்திலேயே ஆழ்ந்திருந்தார்கள். அவையிலுள்ளோரும் அவ்வாறே இருந்தனர்.

கச்சேரி முற்றுப் பெற்றும் பல நிமிடங்கள் வரை அனை வரும் இசை நிகழ்ச்சி நடந்து கொண்டு இருப்பதாகவே எண்ணியிருந்தனர். ஆஸ்தான வித்துவான்கள் அனை வரும் இவரது இசையைக் கேட்டதும் தம்மையும் மறந்து மனமகிழ்ச்சியுடனேயே விளங்கினர்.

பெரியவைத்தியநாத ஐயரவர்களின் இசைநிகழ்ச்சி முடிந்ததும் அரசரவர்கள் பெரியவைத்தியநாத ஐயர வர்களைத் தம்பக்கலில் இருத்திக்கொண்டு "நன்று நன்று! இன்று ஒரு சுபதினம்! நல்ல இசை. காது நிறைந்து இருக்கிறது! இது போன்று யாரால் பாட இயலும்" என்று புகழ்ந்து கூறினார்கள். தவிர பெரியவைத்தியநாத ஐயரவர்களிடம் அரசரவர்கள் பெருமதிப்பு வைத்து இவர்களும் நமது ஆஸ்தான வித்துவான்களில் ஒருவராக இருந்தால் நன்றாக இருக்குமென்று மனதில் எண்ணமிட்டார்கள். தவிர பெரியவைத்தியநாத ஐயரவர்கள் இங்கு மூன்று மாத காலந் தங்கி விட்டபடியால் மனஅதிருப்தி அடைந் திருப்பார்கள். அதையும் சமாதானம் செய்து விடல் வேண்டுமென்று எண்ணி பெரியவைத்தியநாத ஐயர வர்களிடம் "தாங்கள் மூன்று மாதங்களாக இங்கு தாம தித்து விட்டீர்கள். நேற்று வரை எனது பேட்டி கிடைக் காததால் தாங்கள் மனவருத்த முற்றிருப்பீர்கள். இது எனது தவறுமன்று. ஆஸ்தான வித்துவான்களின் தவறுமன்று. எனது கட்டளைப்படி ஒரு சாமான்னிய காரணமாய் என்னிடம் அச்சமுற்று தங்களது வரவை வித்துவான்கள் என்னிடம் தெரிவிக்காமல் இருந்து விட்டனர். ஆஸ்தான வித்துவான்கள் அனைவரும்

தங்களது இசையை என்னைக் கேட்க வைத்தல் வேண்டுமென்ற அவாவுடனேயே இருந்தனர். ஆனால் சமய சந்தர்பங்களால் காலதாமதம் ஆயிற்று. எல்லா வற்றையும் தாங்கள் பொறுத்துக் கொள்ளல் வேண்டும். தவிர நான் தங்களை அனுப்பிய பிறகே தங்களது ஊர் செல்லல் வேண்டும். அதுவரை எவ்வளவு கால மாயினும் தாங்கள் எனது விருந்தினராக எனது சமஸ் தானத்திலே இருத்தல் வேண்டும். தங்களுக்கு யா தொரு குறைகளும் இல்லாதபடி கவனிக்கச் செய் கிறேன்'' என்று மிகுந்த அன்பும் ஆதரவும் தோன்றக் கூறினார்கள். அரசரவர்கள் இவ்வாறு கூறக் கேட்டதும் பெரியவைத்தியநாத ஐயரவர்கள் மிக்க மகிழ்ச்சியுள்ள வராகி ''ஆஹா! அவ்வாறே ஆகட்டும்'' என்று தம் முடைய சம்மதத்தையும் தெரிவித்தார்கள். ஆஸ்தான வித்துவான்கள் அனைவரும் இவ்விருவர்களுடைய உரையாடலையும் ஆமோதித்தனர்.

அரசரவர்கள் சிறிது மௌனமாகி பிறகு பெரிய வைத்தியநாத ஐயரவர்களை நோக்கி ''தங்களுடைய இசை வினிகையை மறுமுறையும் கேட்க ஆவலுடைய வனாக இருக்கிறேன், இரண்டு தினங்கள் தாங்கள் இளைப்பாறிக் கொள்ளுங்கள். மூன்றும் நாள் தங்களு டைய இன்னிசை நடத்தற்குரிய ஏற்பாட்டைச் செய் வோம். என்னையும் ஏனைய வித்துவான்களையும், இசைப் பிரியர்களையும் தங்கள் இன்னிசையால் களிப்பித்தல் வேண்டும். தாங்கள் இந்த சமஸ்தானத்திற்கு வந்ததே எங்களது பெரும் பாக்கியம்'' என்று மனம் நெகிழக் கூறினார்கள். பெரியவைத்தியநாத ஐயரவர்களும்

"இசையை இவ்வாறு மேன்மையாக மதித்து எங்கள் போன்ற வித்துவான்களை கௌரவித்துப் பொருளீந்து, காத்துப் பேணி வரும் ஒரு பேரரசர் அவர்கள் இருக்கும் போது நான் பாடுதற்கு என்ன தடை இருக்கிறது. அரசரவர்கள் வாக்கினால் என்னைப் புகழ்ந்து பாராட்டுவது எனது பாக்கியமல்லவா? எத்துணை முறைகள் வேண்டுமாயினும் அரசரவர்கள் விரும்பினால் நான் பாடுதற்குச் சித்தமாயிருக்கிறேன். அவ்விடத்து ஆஞ்ஞையை மீற யாருக்குத்தான் துணிவு உண்டாகும்? அரசரவர்கள் பத்மநாதசுவாமிதாசன், இசையில் மகாஞானஸ்தர், அண்டினவர்களிடம் பரிவும் அன்பும் கொண்டவர்கள், எல்லோரையும் ஆதரிக்கும் தயாளர், கொடை வள்ளல், தங்களுடைய கட்டளையைத் தட்டல் ஆகுமா! என்று கூறி விடை பெற்றனர்.

அரசரவர்கள் பெரியவைத்தியநாத ஐயரவர்கள் பால் அன்பும் ஆதரவும் கொண்டுள்ளார்கள் என்பதை அறிந்த ஆஸ்தானத்து வித்துவான்கள் தாங்கள் ஒருவருக்கொருவர் அறியாமல் காலை – நடுப்பகல் – மாலை -இரவு என்று ஒவ்வொருவராக பெரியவைத்தியநாத ஐயரவர்கள் தங்கி இருந்த வீடுதி சென்று அவருடன் அளவளாவித் தங்கள் ஒவ்வொருவருக்கும் அவர்களிடம் அன்பும் பற்றுதலும் உண்டென்பதைக் காட்டிக் கொண்டனர். அவர்கள் ஒவ்வொருவருடைய தனி உரையாடல்களின் காரணமாகத் தம்மை ஓர் குடிகாரர் என்று அரசரவர்களின் மனதில் படும்படியாகக்கூறியுள்ளார்கள் என்பதை பெரியவைத்தியநாத ஐயரவர்கள் அறிந்து கொண்டார். ஆனாலும் தாம்

அறிந்து கொண்டதாக ஆஸ்தான வித்வான்களிடம் காட்டிக்கொள்ளாமல் மிகவும் வினயமாக இருந்தார்.

அரசரவர்கள் குறிப்பிட்டபடி மறு முறையும் பெரிய வைத்தியநாத ஐயரவர்களின் இசைவினிகை அரச அவையில் நடைபெற்றது. அரசரவர்களும், அரசரவர்களைச் சார்ந்தவர்களும், சமஸ்தானத்து அலுவலர்களும், ஆஸ்தானத்து இசை வித்துவான்களும், வெளிநாட்டிலிருந்து வந்துள்ள பல வித்துவான்களும் ஆகிய அனைவரும் நிறைந்து நிரம்பியிருந்த ஒரு பெரிய இசைமன்றம். அப்பேர்ப்பட்ட நல்லதொரு மன்றத்திலே பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் பாடத்தொடங்கினார்கள். சாரீரம் வெண்கலக் கடையில் மதயானை புகுந்தாற்போல கலகல வென்று பேசிற்று. நல்ல விறுவிறுப்பு, சுறுசுறுப்பு, யாவருடைய தலையும் ஆட்டுரல் குழவிபோல ஆடிக்கொண்டிருந்தது. கச்சேரி சூடுபிடித்துக் களைகட்டி விட்டது. எல்லோருடைய வாயினின்றும் 'ஆஹா!' என்ற ஒலி ஓங்கி ஒலிக்கின்றது. அரசரவர்கள் பெரிய வைத்தியநாத ஐயரவர்களின் குரல்வளையிலிருந்து இசை வெள்ளமாக ஓடிக்கொண்டு இருக்கிற இன்னிசை ஒலி நயத்திலே ஈடுபட்டு மெய்மறந்து விட்டார்கள்.

பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் தம்புரா சுருதியோடு ஒன்றி நெறி பிறழாமல் கணீரென்ற குரலோடு யாவருடைய உடலும் சிலிர்த்து மயிர்க் கூச்செறிந்து தம்மை மறந்து இருக்கும் நிலையில் தமது அபாரத் திறமையைக் கையாண்டு பாடிவரும் தருணத்தில்,

இசை நிகழ்ச்சியின் மத்தியிலே தமது பாட்டை நிறுத்திக்கொண்டு, தமது பக்கவாத்தியங்களாகிற பிடில்-மிருதங்கம்-தம்புரா முதலியவைகளையும் திடீரென நிறுத்திவிட்டு பின்பு அரசர் அவர்களை நோக்கி "மகாராஜா" என்றழைத்தார்கள். அரசரவர்கள் அச்சமயம் இசையை நுகர்ந்து கண்களைமூடி ஆனந்தமான ஒலி நயத்தில் ஈடுபட்டிருந்தார்கள். இசை ஒலிகளெல்லாம் திடீரென்று நின்றதும், மகாராஜா என்று அழைத்த குரலும் அரசரவர்கள் செவியில் கேட்டதும் அரசரவர்கள் தமது நிலையிலிருந்து விடுபட்டு கண்விழித்து பெரிய வைத்தியநாத ஐயரவர்களை நோக்கினூர்கள். உடனே பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் "எனக்கு இப்போது சிறிது தாகசாந்திசெய்து கொள்ள வேண்டும். என் சரீர நிலைமை-மனநிலைமை ஆகியவற்றை முன்னிட்டு எனக்கு அந்த போதைவத்து தேவைப்படுகிறது. மகாராஜா அவர்கள் முன்பு இவ்வாறு கேட்பது முறையல்ல! கௌரவமுமல்ல! எனினும் அதற்கும் மேல்தான் என்னூல் பாட இயலும்போலத் தோன்றுகிறது. அரசரவர்கள் என்னை மன்னித்தல் வேண்டும். அரச அவையில் செய்யத்தகாத காரியத்தைச் செய்கிறேனே என்று அரசரவர்கள் என்னை ஒதுக்கல் வேண்டாம். எனது சரீரத்தின் தன்மை அப்படி இருக்கிறது. அரசரவர்கள் யோசித்தல் கூடாது. மேற்கொண்டு நான் அழகாய்ப் பாடுதலை முன்னிட்டாவது இதற்கு அனுமதி தரல் வேண்டுமென்று எடுப்பாகச் சிறிதும் தயக்கமின்றிக் கூறினூர்கள். அரங்கிலுள்ளவர்களெல்லாம் அதிர்ச்சியடைந்தனர். அவர் இம்மாதிரி கூறியதைக் கேட்டதும் அவையிலுள்ளோர்

யாவரும் அரச அவையில் அரசரவர்கள் முன்பு மரி யாதையின்றி அவர் நடந்து விட்டதால் அரசரவர் களின் கோபத்திற்கு இலக்காகி விட்டார்கள். இனி என்ன உத்திரவை அரசரவர்கள் இடுவார்களோ! என்று அஞ்சி இருந்தார்கள்.

அரங்கத்தில் அமைதி குடிகொண்டது. அரச ரவர்கள் சிந்தித்தார்கள். இசைமன்றத்தில் தக்கோர் வீற்றிருக்கின்றனர், இவரது இசையை மேற்கொண்டு அனுபவித்தல் வேண்டும் என்ற அவா அவை முழு வதும் நிறைந்திருந்தது. ஆனால் இவரது அசம்பா விதமான செயல் அரச அவைக்கு ஒவ்வாததாக இருந் தது, இவ்வாறு இவர் கூறியது தகாதாயினும், அவரது யோக்கிதாம்சம், தெளிந்த பேச்சு, தீரச்செயல் முத லியவைகளை முன்னிட்டு அரசரவர்கள் "இசை தொடர்ந்து நடக்கட்டும்! தங்களது தேவை தங்களது எண்ணப்படி நடக்கும்" என்றார்கள். அவ்வாறே பெரிய வைத்தியநாத ஐயரவர்களின் விருப்பமும் நிறை வேற்றப்பட்டது. இசைஒலி மேலும் எழும்பலாயிற்று.

இவ்வாறு அரச அவையில் வெறுக்கத்தக்க ஒரு செயலைச் செய்துவிட்டுப் பின்பு அவர் பாடலானார். 'ஆஹா!' என்னென்று சொல்வது. இதற்குமுன் பாடிய அமைதியினைக் காட்டிலும் பன்மடங்கு ஓங்கி ஒலிக்கத் தொடங்கிற்று. போதைதரும் வத்துவை உபயோ கித்தபடியால் உடல் சோர்ந்து, தள்ளாடி, உளரிக் கொட்டித் தாருமாரான நிலையை அடைந்துவிடுவார் என்று எண்ணிய அவையினர் ஆச்சரியம் அடைந்து

விட்டனர். சிறிதும் சளைக்கவில்லை, களைக்கவில்லை. மிகத்தெம்புடன் நிதானம் இழக்காமல், சுருதிலய சுத்தமாக, கணீரென்ற குரலுடன் கம்பீரமாக, கண்ணியமாக, தம்நிலை மாருமல், இசையில் எங்குங்குழைவும் அசைவும் கொண்டு வியக்கும்படி கானம் செய்து சிறப்பித்தார்கள். அவரது இன்ப கானத்தைக் கேட்ட அனைவரும் மகுடிக்குமுன் நாகம் போல நாதவெள்ளத்திற்குக் கட்டுப்பட்டுத் தம்மை மறந்திருந்தனர். அவருடைய வெறுக்கத்தக்கதான செயலெல்லாம் மறக்கப்பட்டுவிட்டது. இவ்வாறு பாடிவருவதற்கு இடையிலே பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் அரசரவர்களை நோக்கி "மகாராஜா இப்பொழுது குடித்துவிட்டுப் பாடும் குடிகாரனுகிய என்னுடன் கூடச் சேர்ந்து பாடுதற்கு இந்த நிறை மன்றத்திலே யாரேனும் தக்க வித்துவான்கள் உள்ளனரா? இருந்தால் வரச்செய்தல் வேண்டும். இந்தக் குடிகாரனோடு நிலைதவருமல், இசை தவருமல், இராகபாவம் தவருமல், தாளந்தவருமல் அவர்கள் பாடுதல்வேண்டும்" என்று கனகம்பீரமாக மொழிந்தார்கள். இவ்வாறு பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் கூறியதைக் கேட்டதும் அங்குள்ள ஆஸ்தான வித்துவான்களின் சப்த நாடிகளும் ஒடுங்கிவிட்டன. ஏது நடக்குமோ! என்ன நடக்குமோ! யாரை அரசர் அவர்கள் தேர்ந்து எடுத்து அவர்களுடன் சேர்ந்து பாடும்படி கட்டளையிடுகிருர்களோ! யார் பாடினுலும் அவர்கள் அவமானமுறுவது உண்மை என்று எண்ணிமிக்க கவலையுடையவர்களானுர்கள்.

ஸ்ரீ ஆயில்யம் திருநாள் மகாராஜா அவர்கள் வெகு சாமார்த்தியசாலி. இசைப் பண்பு, இசைத் திறன், நிகழ்ச்சியின் சமயசந்தர்ப்பம் ஆகிய யாவற்றை யும் எடைபோட்டு நன்ருக அறியும் திறத்தினர். முன்னேற்பாடின்றி வித்துவான்களை இசையரங்கிலே போட்டிக்குப்போவதுபோல உட்காரவைத்தல் முறை யல்ல என்பதை நன்கு உணர்ந்தவர்கள். பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் பலமாதங்கள் தாமதித்து விட்டபடியாலும் அவரைச் சிறிது தாழ்ந்த நிலையுடை யவர் என்று வித்துவான்கள் கூறிவிட்ட செய்தியிஞ லும் மனம் வெம்பி இவ்வாறு செய்கிருர்கள் என்பதை அரசரவர்கள் நன்கு புரிந்துகொண்டார்கள். திடீரென ஒரு வித்துவானை இவர்கள்கூட உட்காரவைத்துப் பாடச் செய்தால் அது கோழிச்சண்டை ஆட்டுக் கடாச் சண்டை போன்று அமைந்து ஒருவருக்கொரு வர் செய்யும் வன்திறமையை மட்டும் அறிதல் ஆகுமே யன்றி பெரிய வைத்தியநாத ஐயரவர்களின் இசையை நன்முறையில் அனுபவிக்க இயலாது என்ற இவ் வாருன எண்ணங்களை மனத்திற் கொண்ட அரசரவர் கள் தங்களுடன் சேர்ந்து பாடுதற்கு இப்பொழுது ஒரு வருமில்லை. வேருெரு சமயம் அவ்வாறு செய்யலாம் என்று எண்ணியுள்ளேன். இன்று தங்கள் பாட்டையே சுவைத்தல் வேண்டுமென்ற எண்ணம். இசைவினிகை நடக்கட்டும். தங்களிசை வெகு அழகாய் அமைந்து இருக்கிறது. இச்சுவை குறைதல் வேண்டாம். நடக் கட்டும் என்று உசிதமாகக் கூறிஞர்கள்.

அரசரவர்கள் இவ்வாறு கூறியதைக் கேட்ட ஆஸ்தான வித்துவான்கள் அனைவருக்கும் போன உயிர் வந்தாற்போல இருந்தது. ஒவ்வொருவரும் தப்பினோம் பிழைத்தோம் என்று எண்ணினார்கள். பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் தம்முடன் பாடுதற்கு இம்மன்றத்தில் இப்பொழுது யாருமில்லை என்று அரசரவர்களே கூறிவிட்டார்கள் என்று எண்ணி மிகவும் மகிழ்ச்சியுற்றார். பின்பு இளங்கன்று துள்ளிவிளையாடுவது போல எக்காளமிட்டுப் பாடலானார். இந்த உற்சாகத்தில் அவரது பாட்டு உயிருக்கு உயிர் ஊட்டுவது போல பிரகாசத்தை அடைந்தது. எல்லோரும் இசையை நன்கு அனுபவித்து அவரது இசைத் திறத்தினையும் மேதாவிலாசத்தையும் புகழ்ந்து கொண்டாடினார்கள்.

பெரிய வைத்தியநாத ஐயரவர்களின் கச்சேரி நல்ல முறையில் வெகு சிறப்பாக நடந்து முடிந்தது. அரசரவர்களுக்கு அளவிலா மகிழ்ச்சி. போதையாகிற வத்துவை உட்கொண்டும் நிலைதவறாமல், பேச்சுக் குளறுபடியில்லாமல், இசையில் தடுமாற்றமில்லாமல் மிக எளிமையாகப் பாடினாரே! இசையில் என்ன அபார வேலை! அவரின் எடுப்பான கணீரென்ற குரல் ஒன்றே போதுமே! என்ன விதமான உயர்தர இசை என்று வியப்பு மிகக்கொண்டு வித்துவானுக்கு மரியாதை செய்வதை முன்னிட்டு ஒரு மகர கண்டியும் ஒரு தோடாவையும் கொண்டுவரச் செய்து அதை அரசரவர்கள் தமது கையினாலேயே பெரிய வைத்தியநாத ஐயரவர்களின் வலக்கரத்தில் அத்தோடாவை அணி

வித்தார்கள். அத்தோடாவைப் போட்டு முடிந்ததும் பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் தமது இடது கையைநீட்டி மகாராஜா இந்தக் கைக்கும் ஒரு தோடா வேண்டும் என்ருர். மற்றுமோர் தோடாவை உடனே கொண்டுவரச் செய்து இடது கைக்கும் அணி வித்தார்கள். அப்பொழுது பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் தமது வலக்கரத்தை நீட்டி மகாராஜா! இந்தக்கைக்கு இட்டதோடா பாடியதற்காக என்றும், இடக்கரத்தை நீட்டி இந்தக் கைக்கு இட்ட தோடா குடித்ததற்காக என்றும், நகைச்சுவையாகவும் தமது வருத்தத்தைச் சிறிது விளக்குவது போன்றும் கூறினுர். அப்பொழுது அங்கு குழுமியிருந்தோர் அனைவரும் 'கொல்' என்று சிரித்தனர்.

உடனே பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் "மகாராஜா" என்னைக் குடிக்காரனென்று மகாராஜா அவர்கள் திருமுன்பு கூறியதாக அறிந்தேன். ஒவ்வொருவருக்கும் ஏதோ சில குறைகள் இருக்கும். அது அவர்களின் தேகநிலையை முன்னிட்டதாக இருக்கும். இதைக் காரணமாகக் கொண்டு இதனை மகாராஜா அவர்களிடம் கூறினுல் மகாராஜா அவர்களுடைய மனம் மாறுபட்டு என்னைப்போன்ற வித்துவான்களுக்கு இடையூறு நேருமன்ருே! நான் மிகவும் வருந்துகிறேன்" என்ருர்.

அரசரவர்கள் "தாங்கள் வருந்துதல் கூடாது. ஒழுங்கீனர்களுக்கு இவ்விடம் இடமில்லை என்பது எனது கட்டளை. அதை வித்துவான்கள் எண்ணி

விட்டார்கள். தங்கள் வரவை நானுக அறிந்த பின்பே இவ்விஷயத்தை பயந்துகொண்டே என்னிடம் வித்து வான்கள் அறிவித்தனர். அவர்களிடம் யாதொரு குற்றமுமில்லை. எல்லாவற்றையும் மறந்து இனி அன்புடன் இருத்தல் வேண்டும். தங்களுக்கு மட்டிலும் போதைவிஷயத்தில் விதிவிலக்களிக்கிறேன். தாங்கள் விரும்பினுல் இச்சமஸ்தானத்தில் தலைமை ஆஸ்தான வித்துவானுக இருக்கலாம். இவ்வாறு நேர்ந்தால் நான் மட்டற்ற'' மகிழ்ச்சியுள்ளவனுவேன் என்ருர்கள். பெரிய வைத்தியநாத ஐயரவர்களும் மிகுந்த களிப்புடன் ''மகாராஜா அவர்கள் சமஸ்தானத்தில் இருக்க எனக்கென்ன ஆட்சேபணை. ஆயினும் எனது சொந்த ஊர் அபிமானம், எனது பழைய நண்பர்களாகிய பல சமீந்தார்கள், பலபிரபுக்கள், திருவாவடுதுறை ஆதீன கர்த்தர் ஸ்ரீலஸ்ரீ மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் ஆகிய அவர்களை நான் அடிக்கடி பார்த்தல் வேண்டும். மகாராஜா விரும்பும்போதெல்லாம் வந்து விடுகிறேன். நானே எண்ணினுலும் வந்து விடுகிவேன். என்னைக் கட்டிப் போடாமல் ஏதேச்சையாக வெளியிடங்களுக்குச் செல்லும்படி அரசரவர்கள் என்னைத் தளர்த்தல் வேண்டும்'' என்ருர்கள்.

அரசரவர்களும் ''தங்களது எண்ணம் போலவே ஆகட்டும். தாங்கள் இனி எப்பொழுதும் இந்த சமஸ்தானத்திற்கு வருவதில் யாதொரு தடையுமிராது. தங்களுடைய வருகைக்காக இச்சமஸ்தானத்தின் வாயில் எப்பொழுதும் திறந்தே இருக்கும். இது தங்களுக்குரிய சொந்தமான ஓர் இடம்'' என்றுரைத்து

அவர்களுக்கு ஏராளமான பொருள்களும், பட்டு பீதாம் பரம்முதலிய ஆடை அணிமணிகளும் கொடுத்துப் பரி சளித்தார்கள். பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் தமது ஊருக்குத் திரும்புங்காலே அரசரவர்கள் அரண் மனைப் பல்லக்கில் அவர்களை ஏற்றி தமது பரிவாரங் களையும் உடனனுப்பி தமது இராச்சியத்தின் எல்லை யாகிய செங்கோட்டை வரை சென்றுவருமாறு பணித் தார்கள். பெரிய வைத்தியநாத ஐயரும் ஆயில்யம் மகாராஜா அவர்களிடம் பிரியாவிடைப்பெற்று ஊர் திரும்பினர்.

# 7

## மகாவைத்தியநாத சிவனவர்களின் பயிரவி இராக ஆலாபனை

திருவனந்தபுரத்தை ஆண்டுவந்த ஆயில்யம் திரு நாள் அரசர் இசையில் அதிக விருப்பங் கொண்டவர். தாமே அழகுறப் பாடும் ஆற்றல் பெற்றிருந்தமையால், தம்பால் வரும் இசைப்புலவர்களின் திறங்களை உள்ளது உள்ளபடியே அறியும் சிறப்புப் பெற்றிருந்தார்கள். அவர்கள் தமது அரச அவைக்கு மகாவைத்தியநாத சிவன் என்ற ஓர் இசைமேதையை முதன் முதலாக வரவழைத்து இருந்தார்கள். மகாவைத்தியநாத சிவனவர்கள் அரசரவர்களுடன் இரண்டு மாதங்கள் தங்கி இருந்தார்கள். அப்போது அரச அவையில் பன்முறையும் அவர்களது இன்னிசை நிகழ்ச்சிகள் நடந்து வந்தன. அவர்களது இன்னிசையானது ஒவ்வொருநாளும் புதுப்புது வகையில் அமைந்துவந்தது. இசையிலுள்ள திட்ப நுட்பங்கள் புதுமையான முறையில் வெளிப்

பட்டுவந்தன. அவர்களது அதி அற்புதமான இசை ஆற்றல் அரசரும் அவையிலுள்ள இசைப் புலவர்களும் போற்றிப் புகழும்படி இருந்தது. அரசரவர்கள் இசையின் எல்லா நயங்களையும் தெளிவாக அறியும் ஆற்றலுள்ளவராதலின் தமது அவைக்கு வரும் இசைப்புலவர்களின் இசையை ஒருமுறை கேட்டமாத்திரத்தான் அவர்களின் தகுதி இன்னதென்று தராசுமுனைபோல எடை போட்டுவிடுவார்கள். மகாவைத்தியநாத சிவனவர்கள் பன்முறை பாடியும் அவர்களது இசை எத்துணைத் தன்மையது என்று எடைபோட்டு அறிய முடியவில்லை. இறைத்த கிணறு ஊறுவது போலவும் பால் பொங்கி வருவது போலவும் ஒவ்வொருநாளும் இசையின் திறங்கள் வெவ்வேருகி வியப்புறும் வண்ணம் விளங்கி இன்பத்தை அளித்து வந்தன.

இவ்வாறு அவர்களது இசை நிகழ்ச்சிகள் நடந்து வரும்போது ஒருநாள் அரசரவர்கள் மகாவைத்திய நாத சிவனவர்களைப் பயிரவி இராகம் பாடச்செய்தல் வேண்டுமென்று எண்ணினுர்கள். அரசரவர்கள் இசையில் சூக்கும புத்தியுடையவர்களாகையால் தம்பால் வந்த எத்துணையோ இசைப்புலவர்கள் பயிரவி இராகத்தைப் பாடியும் அந்த இராகத்தில் தனக்கு அத்துணை சிறந்த நல்லெண்ணம் ஏற்படாதவராய் இருந்தார்கள். அந்தப் பயிரவி இராகத்தின் முழு அழகையும் பிறர்பாடி தாம் துய்த்தல் வேண்டும் என்ற எண்ணம் பலகாலங்களாக அவர்கள் மனத்துள் ஆழ்ந்து கிடந்தது. எனவே அந்த எண்ணத்தைப் பூர்த்தி செய்து கொள்ளக் கருதினுர்கள். மகாவைத்

தியநாத சிவனவர்களைப் பயிரவி இராகம் பாடச் செய்து அவ்விராகத்தை அவர்கள் எத்திறங்கொண்டு இசைத்துப் பாடுகிறார்கள் என்று அறிதல் வேண்டு மென்றெண்ணி அதனை மகாவைத்தியநாத சிவனவர் களிடம் தெரிவித்தார்கள்.

அரசரவர்களின் விருப்பமறிந்த மகாவைத்திய நாத சிவனவர்கள் அதற்கிணங்க அன்று பயிரவி இராகத்தை வெகு சிறப்பாகப் பாடினார்கள். அன்று நடந்த இசை நிகழ்ச்சியிலே இரண்டு கீர்த்தனைகள் பாடிவிட்டு உடனே பயிரவி இராக ஆலாபனையை வித்தாரம் செய்து பாடினார்கள். பயிரவி இராக ஆலா பனை மட்டும் ஒன்றரைமணி நேரம் ஆகிவிட்டபடியால் அன்றைய கச்சேரியில் பல்லவி சுரம் பாடுதற்கு நேர மில்லாமல் அந்த இராகத்தில் தீட்சிதரவர்களால் இயற்றப்பெற்ற 'சிந்தய மாகந்த மூல கந்தம்' என்ற கீர்த்தனையைப் பாடி அதிலே சிறிது நிரவல்செய்து சுருக்கமாக மத்தியகால நடையுடன் சில ஆவர்த் தனங்கள் மட்டும் செய்து சுரத்தைப் பாடிக் கச்சே ரியை முடித்தார்கள்.

அவர்கள் பாடிய பயிரவி இராகத்தைக் கேட்ட அர சரவர்கள் பதுமையாகி விட்டார்கள். அன்றையதினம் அரசஅவையில் கூடியிருந்த இசைப்புலவர்களாகிய பர மேசுர பாகவதர், கோயம்புத்தூர் இராகவ ஐயர், வீணை கல்யாணகிருட்டின பாகவதர் ஆகிய மற்றும் பல இசைப்புலவர்களும் அவர்கள் பாடிய பயிரவி இராகத் தில் தாங்கள் இதுவரை காணாத புதுப்புது இசைத்

திறன்களைக் கண்டு வியப்பும் களிப்பும் உடையவர் களாக விளங்கினுர்கள். கோயம்புத்தூர் இராகவ ஐயர வர்களைத் தோடி இராகவன், காம்போதி இராகவன், வேகடை இராகவன், சங்கராபரண இராகவன், கல் யாணி இராகவன் என்று அவரது பெயருக்கு முன்னுல் இராகத்தின் பெயரை அடையாகச் சேர்த்துக் கூறு வார்கள். இராகவ ஐயரவர்கள் இந்த இராகங்களை யெல்லாம் சிறப்பாக இசைப்பதில் அதிவல்லுனர் என்ற காரணத்திஞலேயே இந்த இராகப்பெயரை அவரது பெயருக்குமுன் அடையாகச் சேர்த்துக் கொள்ளுதல் வழக்கமாயிற்று. ஆனுல் பயிரவி இராகத்தை முன் அடையாகச் சேர்த்துப் பயிரவி இராகவன் என்ற பெயர் மட்டும் அவருக்கு இல்லை. ஏனெனில்! ஏனைய இராங்கங்களை அவர் சிறப்பித்துப் பாடுதல்போல பயிரவி இராகத்தை அத்துணைச் சிறப் பாகப் பாடுதற்கு அவர்களால் இயலாது. பாட இயலு மென்று அவர்கருதியவர் இல்லை. பாடுதற்கு முயற்சிக் கவும்மில்லை.

மகாவைத்தியநாத சிவனவர்களின் பயிரவி இராக ஆலாபனையின் சிறப்பான அம்சங்களைக் கேட்ட கோயம்புத்தூர் இராகவ ஐயரவர்கள் மெய் சிலிர்த்துப் புளகாங்கிதம் உடையவராய் ஒரு பதுமை போலத் தம்பித்து அப்படியே அயர்ந்து உட்கார்ந்து விட்டார். கச்சேரி முடிந்து இசைப்புலவர்களெல்லாம் எழுந்து அரசரவர்களைச் சூழ அமைத்திருக்கும் ஆச னங்களில் வந்து அமர, இராகவஐயர்மட்டும் ஆடாது அசையாது உட்கார்ந்தபடியே தம்மை மறந்து இருந்

தார். பயிரவி இராகத்தை இவ்வளவு அழகாக, நற்றி றத்துடன், மயக்குறும்படி இசைக்கலாம் என்பதை அவர் கனவிலும் கருதியவரில்லை. சிறிதுநேரம் சென் றதும் தமது உணர்வு வரப்பெற்ற கோயம்புத்தூர் இராகவஐயரவர்கள் எழுந்துவந்து அங்கு அரசரவர்கள் வீற்றிருத்தலையும் மறந்து மகாவைத்தியநாத சிவன வர்களின் இருகைகளையும் பிடித்துக்கொண்டு புகழ்ந்து கொண்டாடினர். அவரது கண்களில் கண்ணீர் ததும்பி நின்றது. இவ்வாறு யாரால் இசைக்க இய லும் என்று உருகினர். தங்களுக்குப் பணிவிடை செய்துகொண்டு இருக்கத்தக்க தகுதிகூட எங்களிடம் இல்லையே என்று புலம்பினர். நாங்களெல்லோரும் தங்களுடைய அபாரத் திறம் வாய்ந்த இன்னிசை யமுதைப் பருகுவதற்குக் கொடுத்துவைத்திருக்கும் பேற்றை என்னென்று எடுத்து இயம்புவது என்றார். இந்தப் பயிரவி இராகத்தைத் தாங்கள் இசைத்தது பரமசிவனின் அருளாணையே தவிர வேறல்ல என்று தான் எங்களால் உணரமுடிகிறது என்றார். இன்னும் பலப்பல இன்சொற்கள் கூறிப்புகழ்ந்தார். இப்புகழுரை களையெல்லாம் தம்மை மறந்தே கூறினர்.

மகாவைத்தியநாத சிவனவர்கள் பயிரவி இராகத் திலுள்ள இசை நயங்களை இதுகாறும் எவரும் பாடிச் சிறப்பிக்கவில்லை என்று எண்ணும்படியும், அதன் இசை நுட்பங்களை எவராலும் இசைக்க இயலாது என்று தோன்றும்படியும், யாவரும் வியந்து மெய் மறந்து செயலிழந்து இருக்கும் நிலைதோன்றத் தனது சாரீரவளமையாலும், இசைத்திறத்தினைச்

செயற்படுத்தும் முறையானும் அழகுறப்பாடிக் கச்சேரியைமுடித்தபின்பு அரசரவர்களோடு அளவளாவிக் கொண்டிருந்தனர். அரசரவர்கள் மகாவைத்தியநாத சிவனவர்களை மனமாரப் புகழ்ந்து பாராட்டியதுடன் "நான் இதுகாறும் எத்துணையோ இசைப்புலவர்களிடம் இப்பயிரவி இராகத்தைப் பாடிக் கேட்டிருக்கிறேன். அது என்செவிகளை நிறைக்கவில்லை. இன்று தாங்கள் பாடிய பயிரவி இராகம் என் செவிகளை நிறைத்ததோடு என் உள்ளத்தைத்தொட்டுக் கிளுகிளுப்பை உண்டாகிற்று. தாங்கள் பாடிய பயிரவி இராகத்தின் ஒவ்வோர் இசைப்பகுதியிலும் நான் மெய்சிலிர்த்தேன். இதுபோன்ற கற்பனைத் திறத்தையும், அதன் எளிமையான இயக்கத்தையும், இசை ஞானச் சிறப்பையும், இன்சுவையையும், இத்துணைச் சிறப்போடு வேறு எவ்விடத்தானும் வருதலை நான் எவரிடத்தும் கண்டிலேன். தங்களுடைய இசை மேதையை நான் எவ்வாறு புகழ்ந்து கூறுவேன். தங்களுடைய இசையைக் கேட்டபின்பு பேசுதற்குக்கூட நா எழவில்லை. தங்களுடைய இசையின் இன்பத்தைப் பருகியபின்பு இவ்வுலகில் வேறு என்ன இன்பம் இருக்கிறது. இனி நான் என்ன செய்தல் வேண்டும், எப்படிச்செய்தல் வேண்டும், எப்படி நடத்தல் வேண்டும் என்று எண்ணுவதற்கு இயலாமல் என் மனது செயலிழந்து இருக்கின்றது. நான் என்ன செய்வது" என்று அரற்றினார்கள்.

சிறிது நேரம் யாவரும் பேசாமலிருந்தனர். பிறகு அரசரவர்கள் "இன்று பாடிய பயிரவி இராகத்தின்

செயலாற்றில் இசை மேதையாகிய கோயம்புத்தூர் இராகவ ஐயரவர்களே தம்பித்து செயலிழந்து தம்மை மறந்துவிட்டார்கள் எனின் அவ்விசையின் தரத்தை இங்குள்ளோர் வாக்கினால் எவ்வாறு எடுத்துச் சிறப்பிப்பது. எல்லாம் கடவுள் செயலே! நான் தங்களது இசையில் கட்டுண்டுவிட்டேன். தாங்கள் என் கூடவே எக்காலமும் இருந்து இசையமுதை எனக்கு ஊட்டல் வேண்டுமென்று அவாவுறுகிறேன். கடவுளின் சித்தம் எதுவோ" என்றுகூறி நிறுத்தினார்கள். பிறகு சிறிது நேரத்திற்கெல்லாம் அரசரவர்கள் மகாவைத்தியநாத சிவனவர்களை நோக்கி நான் பல இசைவித்துவான்களிடம் இந்தப் பயிரவி இராகத்தைக் கேட்டிருக்கிறேன். அவர்கள் இசைக்கும்போது பிற்பகுதியில் (உத்தரபாகம்) "நித' நித' பத'நித' நீஇ தாபா" என்ற சுரக் கூட்டத்தை (இசைத்துக் காட்டினார்கள்). இசைத்து வரும்போது அது முகாரி இராகமாகவே என் செவியில் ஒலிக்கும். இதுபோல முற்பகுதியில் (பூர்வபாகம்) "ரிகரிகா சா" என்ற சுரக்கூட்டத்தை (இசைத்துக் காட்டினார்கள்) இசைத்து வரும்போதும் முகாரி இராகத்தின் உருவமே என் செவியில் ஒலிக்கும். இப்பகுதிகளை யாரும் இவ்வாறு பாடிவருதலைத் தான் நான் முழுவதும் கேட்டிருக்கிறேன். இந்த வகையான சுரக்கூட்டங்கள் பயிரவியின் இராக பாவத்தில் உள்ள ஒரு சிறந்த அம்சம்போல மதித்து இசைக்கப் பெறுகின்றது. அவர்களுக்கு அது பயிரவி இராகத்தின் உணர்ச்சியைக் கொடுக்கின்றதுபோலும். அனால் என்னைப்போன்ற கேள்விஞானம் உள்ளவர்

கட்கு அந்தச் சுரக்கூட்டங்கள் முகாரி இராகத்தின் அம்சத்தையே விளக்குகின்றன. ஒருக்கால் சுரஞ் ஞானக் குறைவாகிய எனது செவிகளுக்கு இவ்வாறு கேட்கப்படுகின்றது போலும் என்றூர்கள்,

பிறகு இன்று தாங்கள் பாடியதில் அந்தச் சுரக் கூட்டங்களின் சேர்க்கையே வந்தாலும் அது பயிரவி யாகவே என் காதுகளில் ஒலித்தது. தங்கள் சாரீர வளத்தின் தன்மையினுல் அவ்வாறு உணரப்பெறுகின் கின்றது என்று பிறர் கூறுவார்கள். அப்படியல்ல! என் பதை நான் இன்று உணர்ந்தேன். பிற்பகுதியில் வரும் அக்கூட்டத்தை முடிக்கும்போது (நியாஸம்) எல்லோரும் பஞ்சம சுரத்தில் முடிவுசெய்து பாடுவ தால் முகாரி தோன்றுகிறதென்றும், தாங்கள் அதை மத்யம சுரத்தில்முடித்து பயிரவி தோன்றும்படியும், பஞ்சம சுரத்தில் முடிப்பதாகில் வேறு முறைகளைக் கையாண்டும் வந்தீர்களென்பதை உணர்ந்தேன்.அது போல முற்பகுதியில் அனைவரும் "ரி க ரி கசா" என்று இசைப்பதால் அது முகாரியை ஒலிக்கச் செய்தது. தாங்கள் அந்த ஷட்ஜ சுரத்திற்கு வந்ததும் வேறு திறத்தைப் பயன்படுத்தியதால் அது பயிரவியாகவே இருந்தது. இன்று தாங்கள் பாடிய இந்த ஒன்றரை மணி நேரமும் அந்தப் பயிரவியில் ஒரு சிறிது இடத் திற்கூட முகாரி இராகத்தின் சாயல் வருதல் போன்ற பாவத்தை நான் கேட்கவில்லை· எனவே இந்தப் பயிரவி இராகத்தின் முழுஉருவமும் உத்தமமான நிலை நின்று என்செவிகளில் வேரூன்றி நிலைத்துவிட்டது. யில் இனி இந்த இராகம் என்மனதைவிட்டு விலகாது.

என் உள்ளத்தில் எக்காலமும் ஒலித்துவரும். இனி யார் இதுபோல் பாடப் போகிறுர்கள். அவ்வாறு அவர்கள் பாடினுலும் அந்தப் பயிரவியை என் காது ஏற்காது என்றெண்ணுகிறேன் என்று அன்புடனும் மிகுந்த கனிவுடனும் கூறினுர்கள்.

எப்பொழுதையும்விட அன்று அரசரவர்கள் வெகு நேரம்வரை மகாவைத்தியநாத சிவனவர்களைப் பிரிதற்கு மனமின்றி இருந்தார்கள். மகாவைத்தியநாத சிவனவர்களுக்குக் கோமேதக மணியாலாகிய கழுத்து சங்கிலிமாலையொன்றும், இரண்டாயிரத்தெட்டுப் பணமும் (ஒரு பணம் என்பது ஒரு ரூபாயில் எட்டில் ஒரு பங்காகிய அரைக்கால் ரூபாய். இரண்டாயிரத்து எட்டு பணமென்பது இருநூற்று ஐம்பத்தொரு ரூபாய்கள்.) அந்த சதசிலேயே எல்லோருடைய முன்பும் தமது கையினுலேயே அணிவித்து மரியாதை செய்தார்கள். அதுகாறும் அங்கு நடந்த பல இசை நிகழ்ச்சிகளில் இந்த நிகழ்ச்சிநிரலையே யாவரும் பெரிதும் கொண்டாடுவார்களாம்.

மகாவைத்தியநாத சிவனவர்கள் பாடிய இப்பயிரவி இராகத்தைக் கேட்டபின்பு கோயம்புத்தூர் இராகவஐயரவர்கள் தாமும் பயிரவி இராகத்தை அவர்கள்போல் பாடி இசைத்தல் வேண்டுமென்றெண்ணி நாளெல்லாம் பயின்று வந்தார்கள். மகாவைத்தியநாத சிவனவர்களோடு தனித்த முறையிற் பேசிப்பழகி அவ்வப்போது அவர்களைப் பயிரவி இராகத்தைப் பாடச்செய்து அதில் வருவதான திட்ப

நுட்பங்களை ஒருவாறு அறிந்து தாமும் அவ்வாறே பயின்று வந்தார். அவ்வாறு பயின்றும் அவரது ஆயுட் காலம் முழுதும் பயிரவி இராகத்தை அழகுறப்பாடி அவரால் சிறப்பிக்க இயலவில்லை. மகாவைத்தியநாத சிவனவர்கள் கோயம்புத்தூர் இராகவஐயரவர்களின் இசைப்புலமையின் திறத்தை மேன்மைப் படுத்திக் கூறும்போது 'தங்களது செய்கைகள் இராட்சதச் செய்கைகளாக இருக்கின்றனவே' என்று கூறிப்புகழ்ந் துள்ளார்கள். இசையில் எதனையும் சாதிக்கக் கூடிய திறம்மிகுந்த இராகவ ஐயரவர்களுக்குப் பயிரவி இராகம் கைவரவில்லை என்ற செய்தியை இக்காலம் கேட்போர் இது ஓர் உண்மை செய்தியாகுமோ! என்று ஐயுறுவர். இது உண்மையான செய்தியே யாகும். இக்காலமும் சில இராகங்கள் சிலருக்கு வாய்க்காமல் இருப்பதை நாம் காண்கின்றோம் என்பதை நினைவு கூறுக.

# 8

# ஆயில்யம் திருநாள் அரசரவர்கள் விசாகம் திருநாள் அரசர் அவர்கள் மகாவைத்தியநாத சிவனவர்கள்

திருவனந்தபுரத்தை ஆண்டுவந்த அரசர்களிலே கருவிலே திருவுடையார் 'சுவாதித்திருநாள் அரசர் அவர்களும் அவர்களுக்கு அடுத்துப் பட்டத்திற்கு வந்த ஆயில்யம் திருநாள் அரசர் அவர்களும், அதன் பிறகு பட்டம் ஏற்ற விசாகம் திருநாள் அரசர் அவர்களும் இசை வளர்த்த பேரரசர்களாவர். இசைப் புலவர்களை நன்கு மதித்து ஆதரித்தவர்கள். இம்மூன்று அரசர்களி னும் சுவாதித்திருநாள் ஆயில்யம் திருநாள் ஆகிய இவ் விரண்டு அரசர்கள் காலத்தில் ஏராளமான இசைப் புலவர்கள் பயனடைந்தார்கள். புற்றீசல் புறப்படுதல் போல எங்கிருந்தேனும் இசைப் பெரும்புலவர்கள் அவர்களது அரச அவையை நாடி வந்துகொண்டே இருப்பர். அவ்விரு அரசர்கள் காலத்தில் இசையின்

சிறப்பு உயர் நிலைபெற்றிருந்தது.

ஆயில்யம் திருநாள் அரசரவர்கள் தமது முற்பிற வித்தவப் பேற்றால் நல்ல சாரீரவளம் பெற்றிருந்த தோடு இசையில் நல்ல ஞான பலத்தையும் அடைந் திருந்தார்கள். இசைப் புலவர்கள் எந்தப் பட்டி தொட்டிகளில் வசித்து வந்தபோதினும் அன்னவரின் இசைத் திறமைகளை அரசரவர்கள் எவ்வாறோ அறிந்து அவர்களைத் தமது அவைக்கு வரவழைத்து அன்னாருடைய இசை இன்பத்தைக் கேட்டறிந்து மகிழ்வது அவர்கள்பால் இயற்கையாகவே அமைந்த ஒரு நற்பண்பாகும். தன்னுடைய நாட்டிலுள்ள இசைப் புலவர்களன்றி, பாண்டிநாடு, சோழநாடு, கொங்கு நாடு, கன்னடநாடு, ஆந்திரநாடு, வங்காளநாடு, மகாராட்டிரநாடு, வடநாடு ஆகிய பல நாடுகளிலிருந் தும் இசைவித்துவான்களை வரவழைத்து அவர்களின் இசை விருந்தைக் கேட்டு மகிழ்ந்த அரசர் அவர்களைத் தவிர வேறு ஒருவருமில்லை என்றே கூறுகின்றனர்.

அவர்களது காலத்திலே சோழநாட்டின் தஞ்சை யைச் சேர்ந்த வையச்சேரி கிராமத்தில் வசித்து வந்த மகாவைத்தியநாத சிவனவர்களை முதன் முத லாகத் தமது அரச அவைக்குத் தருவித்தார்கள். மகா வைத்தியநாத சிவனவர்கள் ஆயில்யம் திருநாள் அரசர் காலத்தில் இரண்டு முறைகளும், விசாகம் திரு நாள் அரசர் காலத்தில் ஒரு முறையும் ஆக மூன்று முறைகள் திருவனந்தபுரம் சென்று மூன்று மாதங்களுக் கும் மேல் அங்கு தங்கி நாற்பது இசை நிகழ்ச்சிகள்

ஆற்றி மிகப்பெரும் பரிசில்களைப் பெற்றுள்ளார்கள். ஆயில்யம் திருநாள் அரசர் அவர்கள் அவரது இசை நிகழ்ச்சிகளைப் பன்முறையும் கேட்டுக் களித்தார்கள். அவர்களுடைய இசையில் ஈடுபட்டு அவர்கள் முதன் முறை வந்திருந்தபோது இரண்டு மாதங்கள் வரை தம்முடைய விருந்தினராக ஏற்றுப் பாராட்டினர். அவ்வரசர் மகாவைத்தியநாத சிவனவர்கள் தமது சமஸ்தானத்தில் தங்கியிருந்த இரண்டு மாத காலங்களில் இருபத்தைந்து இசை நிகழ்ச்சிகளைக் கேட்டுத் தமது மகிழ்ச்சியையும் அன்பையும் மகாவைத்தியநாத சிவனவர்கள்பால் வெளியிட்டிருக்கிறார்கள். அக்காலங்களிலே தமது சமஸ்தான இசைப்புலவர்களாகிய கோயம்புத்தூர் இராகவ ஐயரவர்களையும், வீணை கல்யாணகிருட்டின பாகவதரவர்களையும் மகா வைத்தியநாத சிவனவர்கள்கூடக் கானம் செய்யும்படியும் வீணை வாசிக்கும்படியும் ஏற்பாடு செய்து அளவிலாத களிப்பெய்தினர். அச்சந்தர்ப்பத்திலேதான் மகா வைத்தியநாத சிவனவர்களின் எண்ணத்தை நிறைவேற்றுவதற்கு அரசர் அவர்கள் உசேனி இராகம் பாடிய நிகழ்ச்சி நடந்தது. (இந்நிகழ்ச்சி நிரலை 5–ஆவது கட்டுரையிற்காண்க.)

மகாவைத்தியநாத சிவனவர்கள் அரசரின் விருந்தினராக வந்து இரண்டு மாதகாலங்கள் சென்றுவிட்டதால் அரசர் அவர்களிடம் விடைபெற்று ஊர்திரும்ப எண்ணினார்கள். அவர்களது எண்ணத்தை அறிந்த அரசரவர்களுக்கு அவர்களை ஊருக்கு அனுப்ப மனமில்லை. பின்பு தடுத்தற்கியலாமல் மகாவைத்திய

நாத சிவனவர்களுக்கு ஏராளமான அரசமரியாதை களைச் செய்து ஊருக்கு அனுப்பிவைத்தார்கள். அதன் பிறகு ஓராண்டு சென்றதும் மறுமுறையும் அவர்களது இசையைக் கேட்க வேட்கை மிக்கவர்களாகிய அரசர வர்கள் இரண்டாவது முறையாக மகா வைத்திய நாத சிவனவர்களைத் தமது அரச அவைக்கு வர வழைத்து இன்முகத்தால் அவர்களை எதிர் சென்றழைத் துத் தம்முடன் ஒன்றரை மாதங்கள்வரை இருக்கும் படி ஏற்பாடுகள் செய்து கொண்டார்கள்' இக்காலத் தில் மகாவைத்தியநாத சிவனவர்களின் இசைநிகழ்ச் சிகள் பன்னிரண்டுக்கும்மேல் நடந்துள்ளன. அவர் களின் இசைநயத்தை அரசரவர்கள் கேட்டுக்கேட்டு மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கினுர்கள்.

ஒருநாள் அரச அவையில் ஆயில்யம் திருநாள் அரசர் அவர்களோடு மகாவைத்தியநாதசிவனவர்கள், பரமேசுவர பாகவதரவர்கள், கோயம்புத்தூர் இராகவ ஐயரவர்கள், வீணை கல்யாணகிருட்டின பாகவதரவர் கள் ஆகிய சில இசைப்புலவர்களே வீற்றிருந்தனர். அன்று அவர்கள் அனைவரும் உலகியல் பற்றிய செய்தி கள், இசைபற்றிய செய்திகள் ஆகிய ஏதும் பேசாமல் அமைதியாக இருந்தனர். அப்பொழுது ஆயில்யம் திரு நாள் அரசரவர்கள் ஆனந்தபயிரவி இராகத்தை மெதுவாகப் பாடிவிட்டு மகாவைத்தியநாத சிவன் அவர்களையும், கோயம்புத்தூர் இராகவ ஐயரவர்களை யும் சிறிது சிறிது பாடும்படி ஏற்பாடு செய்தார்கள். அவ்விசைப்புலவர்களுடன் கலந்துகொண்டு அரசர வர்கள் தாமும் இசைத்து வந்தார்கள். இராகம்

தானம் ஆகிய இவைகள் நல்ல கற்பனைத்திறத்தோடு நெடுநேரம் இசைக்கப் பெற்றது.

அரசரவர்களின் சாரீரம் மிகவும் சன்னமானது. கீழிருந்து மேல்தாயிவரைக்கும் உருட்டித்திரட்டின ஓர் கொடிக்கம்பியானது எப்படி ஒன்றுபோலக் காணப்பெறுமோ அவ்வாறன அமைதியைப்பெற்றது அவர்களது குரல்வளம். மின்னற்கொடிபோல பளிச் சென்று விளங்கும் தன்மையது. அந்த இனிமை யான பண்ணைக்கேட்கும் யாவரும் அவ்விசையில் மயங் குவர் என்பதுறுதி. அரசரவர்கள் பாடும்போது தூய உள்ளமுடைய மகாவைத்தியநாத சிவனவர்களுக்கு ஆனந்தக்கண்ணீர் அடிக்கடித் துளிர்த்துவிடும். அரச ரவர்களின் நயமான இசை அவர்கள் காதில் ஒலித்து உள்ளத்தைத் தொடுந்தோறும் கடவுள் இசைவடி வினன் என்பதில் என்ன ஐயமிருக்கிறது என்றெண்ணி அவர்கள் மனம் கடவுள்பால் ஈடுபட்டுவிடும். இவ்வாறு அற்புதமாக, ஆனந்தமாக இசைச் சிறப்போங்க நற்றி றத்துடன் இம்மூவரும் இசைத்து வந்தார்கள். பின்பு அரசரவர்கள் மகாவைத்தியநாத சிவனவர்களை நோக்கி இந்த இராகத்தில் ஏதேனும் இசைப்பாடல் பாடிக்களிப்பியுங்கள் என்று கூறினார்கள். அப்பொழுது மகாவைத்தியநாத சிவனவர்கள் சியாமாசாஸ்திரிகள் இயற்றிய 'பாஹிஸ்ரீகிரிராஜஸுதே' என்ற கீர்த் தனத்தைப் பாடி அதற்குச் சுரமும் பாடினார்கள். கோயம்புத்தூர் இராகவஐயர் அவர்களுக்கு இக்கீர்த் தனம் பாடம் இல்லையாகையால் இக்கீர்த்தனத்திற்குக் கற்பனைதோன்றச் சுரம் மட்டும் பாடினார்கள். மகா

வைத்தியநாத சிவனவர்களுக்கும் கோயம்புத்தூர் இராகவ ஐயரவர்களுக்கும் உண்மையில் அதொரு இசைப்போட்டிதான். அவர்களிருவரும் சுரங்களைக் கற்பனை தோன்ற மாறிமாறிப்பாடிய செய்கைகள் அதனை உணர்த்திற்று. இருவரும் பாடிநிறுத்தினர். அரசரவர்கள் மகாவைத்தியநாத சிவனவர்களையும், கோயம்புத்தூர் இராகவ ஐயரவர்களையும் கட்டித் தழுவிக்கொண்டு மிகவும் போற்றிப் புகழ்ந்தார்கள். வித்துவான்களும் அரசர் அவர்களுடைய உண்மையான இசை அறிவையும் அவர்களின் திறத்தையும் உள்ளது உள்ளபடியே புகழ்ந்து கொண்டாடினுர்கள். இது ஒரு மறக்கமுடியாத மகிழ்ச்சியூட்டும் இசை நிகழ்ச்சியாகும். பின்பு யாவராலும் மதித்துப் போற்றப் படுவதான சிறப்பு மரியாதைகளெல்லாம் அவ்விரு புலவர்களுக்கும் அளிக்கப்பெற்றன.

மகாவைத்தியநாத சிவனவர்கள் அச்சிறப்புக் களைப் பெற்றுக் கொண்டதன்பின்பு அரசரவர்களை நோக்கி அரசரவர்கள் அன்புடன் பெருமையோடு செய்யும் இந்தப் பரிசில்களை நாங்கள் ஏற்றுக்கொள்ளு தல்தான் முறையாகும். ஆனுல் உண்மையில் அரசரவர் களின் இசைக்குத்தான் இதுபோன்ற சிறப்புப்பரிசில் கள் தகுதியாகும். என் செய்வது. நாங்களொரு நாடாளும் அரசர்களாகப் பிறக்கவில்லையே. எங்கள் மனமாற, தூயமனதுடன் புகழ்ந்துகூறும் சொற்களைத் தான் அரசரவர்கள் அன்பளிப்பாக ஏற்றுக்கொள்ளல் வேண்டும். மனிதராகப் பிறந்த ஒவ்வொருவரும் தம் அறிவு முதிர்ச்சியால் இனிவேறுபிறவி வேண்டாம் என்ற நிலைக்கு வருதல் வேண்டும். அதுபோல எனக்கு

இனிவேறுபிறவி வேண்டாம் என்றுதான் சிவபெருமானைத் துதித்து, அவனை வழிபட்டு, அவனுகை விளங்குகிற இசையில் ஈடுபட்டு எனது காலத்தைக் கழிக்கிறேன். ஆயினும் ஏதோ வகையில் மறுபிறவி எடுக்க நேரிட்டுவிட்டால் நாம் இருவரும் உடன்பிறந்தவர்களாகவே பிறவி எடுப்போம் என்று என் உள்மனம் கூறுகின்றது என்று தமது அளவிலாத கட்டுக்கடங்காத அன்புப் பெருக்கைப் பேருவகையோடு அரசரவர்களிடம் கூறினார்கள். பின்பு அரசரவர்களிடம் பிரியா விடைபெற்றுத் தமது ஊர்வந்து சேர்ந்தார்கள்

ஆயில்யம் திருநாள் அரசரவர்கள் காலத்திற்குப் பின் இதுபோலப் பெருஞ்சிறப்புடன் இசை நிகழ்ச்சிகள் மேலோங்கவில்லை என்றே யாவரும் கூறுகின்றனர். ஆயில்யம் திருநாள் அரசரவர்களுக்கு அடுத்து விசாகம் திருநாள் அரசரவர்கள் திருவனந்தபுரத்தை ஆண்டுவந்தார்கள். அவர்கள் காலத்திலும் வெளியிடங்களிலிருந்து நிறைய இசைப்புலவர்கள் வராவிடினும் அரண்மனையில் நடக்கும் விழாநாட்களில் தமது ஆஸ்தான வித்துவான்களின் இசைநிகழ்ச்சிகள் சிறந்தமுறையில் நடந்துகொண்டேயிருக்கும். அவர்கள் காலத்திலும் ஒருமுறை மகாவைத்தியநாத சிவனவர்களைத் தமது அரச அவைக்கு வரவழைத்து இசையமுதைப் பருகினார்கள். அரசரவர்கள் வேண்டுகோளை நிறைவேற்றுதலை முன்னிட்டு விசாகம் திருநாள் மன்னர் அவையில் மகாவைத்தியநாத சிவனவர்கள் சென்று பத்து நாட்கள் தங்கி இருந்தார்கள். அச்சமயம் மூன்று இசைநிகழ்ச்சிகள் நடந்தன.

அவர்களை முதன் முதல் பார்த்த விசாகம் திருநாள் அரசரவர்கள் வியப்படைந்தனர்.

மகாவைத்தியநாத சிவனவர்கள் பொன்னிற மான அழகிய வடிவமுள்ளவர். திருநீற்றைச் செவ் வனே அணிந்து உருத்திராக்கக் கண்டிகையைத் தரித்துள்ள அவரது சைவத் திருக்கோலத்தைக் கண் டவர்கள் வைத்த கண் வைத்தபடியே இருப்பர். வேறு எதனையும் நோக்கார். அவையோர் நடுவில் மகாவைத்தியநாத சிவனவர்கள் அமர்ந்திருந்தால் அவருடைய திருமேனிமட்டும் அவையிலுள்ளோர் அனைவரினும்விட 'கோடிசூரியப் பிரகாசம்' போல் ஒளிர்ந்து சுடர் விடும். மகாவைத்தியநாத சிவனின் குளிர்ந்த பார்வையும், அடக்கமான தோற்றமும், இனியவார்த்தையும், அவரது சிவபக்தி, நியமம், நிட்டை, அனுட்டானம் ஆகிய எல்லாம் அரசரவர் களைக் கவர்ந்துவிட்டன. அக்காலம் அவர்கள் சட்டை அணியார். நல்ல பட்டு அங்கவத்திரம் அல்லது மெல் லியதான சரிகை அங்கவத்திரம் இவற்றை 'யோக வேஷ்டி' யாகவே தரித்துக்கொண்டு கச்சேரி நிகழ்த்து வார்கள். குளிர்காலமாக இருந்தால் மெல்லியதான சல்லாப்போர்வை, மகமல்போர்வை இவற்றை மேலே போர்த்திக்கொண்டு இசைப்பார்கள். அவர்கள் கச் சேரி நிகழ்த்தும் போது அவ்விடம் 'கந்தர்வலோக' மாக மாறிவிடும். இவ்வளவு பக்தி நிரம்பிய அவர்களி டம் அரசரவர்கள் மனம் ஈடுபட்டு அவர்கள் தமது அவையில் என்றென்றும் இருத்தல் வேண்டுமென்று நினைத்ததுண்டு.

அரசரவர்களும் கடவுள் பக்தியில் சிறந்தவர்கள். காலந்தவருது கடவுள் வழி பாட்டைச் செய்பவர்கள். ஆதலால் அவர்களிடம் ஈடுபட்டதில் வியப்பில்லை. அவர்களது இசை இன்பத்தை மூன்று நாட்கள் கேட்டுக் களித்து அவர்களுக்கு அரச மரியாதைகளுடன் வேண்டிய பொருள்களையும் பெருமளவில் தந்து பெருமைப் படுத்தினர்கள். அவரது சைவத்திருக்கோலம் அரசரவர்கள் மனதில் நல்லபதிவைச் செய்து விட்டபடியால் சிவபூசை–சிவத்தியானம்–சிவக்கோலம் இவைகள் குடிகொண்டுள்ள மகாவைத்தியநாத சிவனவர்களுக்குச் சிவபூசை செய்தற்குரிய அனைத்துப் பொருள்களையும் வழங்க முற்பட்டார்கள். ஓவிய வேலைப்பாடுகளுடன் வெள்ளியினுல் அலங்கரிக்கப் பெற்ற ஆசனப்பலகை, நல்லவேலைப்பாடுகளமைந்த வெள்ளியாலான சிவலிங்கக் கவசம், சிவலிங்கப்பெட்டி, சிவலிங்கப்பூசை மண்டபம், சிவலிங்க அபிடேகப்பீடம், அபிடேகத்தீர்த்தம் விழும் ஒருசிறு கொப்பரை, பஞ்சபாத்திர உத்தரணி, அபிடேகத்தாராபாத்திரம், மூக்குவைத்தகெண்டி, ஜலபாத்திரச்செம்பு, பால்-தயிர்–நெய் இவைகளுக்குரிய கிண்ணங்கள், சந்தனம்-குங்குமம்-அட்சதை-கற்பூரம்-கற்கண்டு- திராட்சை ஆகியவைகள் வைத்தற்குரிய ஆறு குழியுள்ள சிறுதூக்கு, வெற்றிலை பாக்கு பழம் தேங்காய் வைத்துக்கொள்ளும் தாம்பாளம், கற்பூரத்தட்டு-தூபக்கால் – தீபக்கால், ஊதுவத்தி – அபிடேகச்சங்கு இவற்றைத்தாங்கும் உறுப்பு, குத்துவிளக்கு ஆகிய யாவும் தயார் செய்து அவற்றை வேதம் கற்றுணர்ந்த ஒரு பண்டிதரின் கையினுல் பஞ்சாதியாகிய வேதமந்

திரம் சொல்லி ஆசீர்வதிக்கும் வகையில் மகாவைத்திய நாத சிவனவர்களுக்கு அளித்து சிறப்புச் செய்தார்கள்.

அதனை எதிர்பாராத மகாவைத்தியநாதசிவனவர்கள் சிவபெருமானுக்காக அளிக்கப்பெற்ற அதனை பக்தி மேலீட்டால் ஏற்றுக்கொண்டார்கள். அரசரவர்களுக்குக் கடவுளிடம் உள்ள பக்திப் பெருக்கை எண்ணி மகிழ்ச்சியுற்றார்கள். யாருக்கும் தோன்றாத இவ்வருமையான செயலை எண்ணிமனம் கனிந்தார்கள். சிவபூசைக்குரியதான இந்த சம்மானத்தைதவிட வேறு சிறந்த சன்மானம் என்ன இருக்கிறது! இதைவிட வேறு எனக்கு என்ன வேண்டும். அரசரவர்கள் எவ்வளவு புண்ணியத்தைக் கைக்கொண்டுவிட்டார்கள் என எண்ணியெண்ணி ஆனந்தக்கண்ணீர் உகுத்து அரசரவர்களிடம் சிவபெருமானின் மேலாம் சிறப்புக்களை எடுத்து விளக்கி அவர்களைக் களிக்கச்செய்து பின்பு பிரியாவிடை பெற்றுத் தமது ஊர் திரும்பினார்கள்.

# 9

## வையை வைத்தியநாத ஐயருக்கு மஹாவைத்திய நாத ஐயர் என்ற பட்டம் வந்த வரலாறு.

திருவாவடுதுறை ஆதீனம் வடமொழிப்புலவர்களையும், தென்மொழிப்புலவர்களையும், இசைப்புலவர்களையும் பெரிதும் ஆதரித்துவந்தது. அவ்வாதீனத்தில் பெரியபட்டத்தில் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாணதேசிகர் என்ற சன்னிதானம் வீற்றிருந்தனர். திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த மற்றொரு முக்கியமானமடம் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள கல்லிடைக்குறிச்சி மடமாகும். அம்மடத்திலே மேலகரம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் என்பவர் சின்னப்பட்டம் வகித்து சந்நிதானமாக அமர்ந்திருந்தார். மேலகரம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரவர்கள் தமிழ் இலக்கிய இலக்கணத்திலும், வடமொழிப்புலமையிலும், கர்னுடக இசையிலும் பேராற்றல் உள்ளவர்கள். அக்காலத்திலே அந்தமடத்திலே சந்நிதானமாக விளங்கிய சுப்பிரமணிய தேசிகரவர்களின்

மனங்கனிந்த உள்ளன்பை சிவகெங்கை பெரிய வைத்தியநாதஐயர் சின்ன வைத்தியநாதஐயர் என்ற இருவர்களும் பெற்றிருந்தனர். அவ்விருவரும் ஒரு வகையில் அண்ணன் தம்பி முறையாவர். அவர்கள் இசைத்திறமையில் சிறந்த பேரும் புகழும் பெற்று விளங்கியவர்கள். அக்காலத்தில் அவர்களைப்போலப் பாடுவோர் எவருமிலர். பெரிய மேதைகளாகிற அவ்விருவர்களிடமும் அளவிலாத அன்புப்பெருக்கை சுப்பிரமணிய தேசிகரவர்கள் வைத்திருந்தார்கள். கல்லிடைக்குறிச்சி மடத்திலே நடக்கும் ஒவ்வொரு சிறப்பு விழாவிலும், சந்நிதானம் விரும்பும் காலத்திலும் தவருது மடத்திற்கு வந்து இன்னிசை விருந்தை நடத்தி அவ்வப்போது சந்நிதானம் அன்புடனளிக்கும் மரியாதைகளை ஏற்றுக்கொண்டு தமதூர் செல்லுவது அவர்களது வழக்கம். இம்மடத்திலே பெரிய வைத்தியநாதஐயர், சின்ன வைத்தியநாதஐயர் வீணைசின்னையாபாகவதர், 'ஸ்ரீவைகுண்டம் சுப்பையர் பிச்சுமணிபாகவதர், வெள்ளங்குழிசாமிபாகவதர் போன்ற இன்னும் புகழ்பெற்ற பல இசைவித்வான்களும் ஆதீனவித்துவான்களாக இருந்து சந்நிதானத்திஞல் ஆதரிக்கப்பெற்று வந்தார்கள்.

அக்காலத்தில் தஞ்சையைச் சேர்ந்த வையைச்சேரியிலிருந்து வைத்தியநாதஐயர் என்ற சிறுவயதுடைய ஒருவர் அழகுறப் பாடுகிருர் என்பதைச் சின்னப் பட்டம் வகித்துவந்த சுப்பிரமணிய தேசிகரவர்கள் கேள்வியுற்றிருந்தார்கள். அக்காலம் வையை வைத்தியநாத ஐயர் என்பவர் தமது தமையஞர் இராமசாமி

ஐயரவர்களோடு திருநெல்வேலிக்கு வந்து அங்கு பலப் பல இடங்களில் கச்சேரிசெய்து தமது இசைத்திறமை களை வெளிப்படுத்திவந்தார். இது விபரம் அறிந்த சந்நி தானம் அவர்கள் வையை வைத்தியநாத ஐயரைத் தம் பால் வரவழைத்து அன்னாரின் இசையமுதைப் பன் முறையுங்கேட்டு இன்பமுற்று தம்முடன் பல மாதங்கள் தங்கும்படி ஏற்பாடு செய்தார்கள். சிறு வயதினரான வைத்தியநாத ஐயரைப் பெரும் புகழுக்கு ஆளாக்கி விடல் வேண்டுமென்று சந்நிதானத்தின் அன்பு உள் ளம் எண்ணிற்று. அப்பொழுது வையை வைத்திய நாத ஐயருக்குப் பதினான்குவயது நடந்துகொண்டிருந் தது. இந்த இளம் வயதிற்குள் எவருக்கும் அமையா ததும், அதுகாறும் கேட்கப்படாததுமான ஒரு கவர்ச் சித்திறன் அவரது இசையில் சிறப்போங்க அமைந் திருத்தலையும், எவரிடமும் காணப்பெறாத உயர்ந்த அறிவும், சிறந்த குணமும், சிவபக்தியின் சிறப்பும், செவ்விதான உருவத்தோற்றமும் எல்லாம் அவர்பாற் பொருந்தியிருத்தலையும் அறிந்து சந்நிதானம் அவர் கள் வியந்தார்கள். வையை வைத்தியநாத ஐயரும் இராமசாமி ஐயரும் இசைமட்டுமின்றி தமிழறிவிலும் வடமொழி அறிவிலும் சிறந்து விளங்கியமையைக் கண்ட சந்நிதானம் அவர்கள் அவர்களைத் தம்முடைய சபைக்கு ஒரு சிறந்த கலைச்செல்வமாக்கிக்கொள்ளல் வேண்டுமென்றும் எண்ணினார்கள்.

திருவாவடுதுறை ஆதீனத்தை நிறுவிய ஸ்ரீ நமச் சிவாய மூர்த்தியின் குருபூஜை தை மாதம் அசுவினி நட்சத்திரத்தில் திருவாவடுதுறையில் வெகுசிறப்பாக

நடப்பதுபோல கல்லிடைக்குறிச்சி மடத்திலும் சின்னப் பட்டம் வகித்தசுப்பிரமணிய தேசிகரவர்களால் வெகு விரிவாக நடத்தப் பெற்றுவந்தது. அவ்வாறு வழக்கம் போல் நடைபெறும் குருபூசை விழாவை முன்னிட்டு பெரிய வைத்தியநாத ஐயர், சின்ன வைத்தியநாத ஐயர், வீணை சின்னையா பாகவதர், ஸ்ரீவைகுண்டம் சுப்பையர், பிச்சுமணி பாகவதர், வெள்ளங்குழிசாமி பாகவதர் ஆகிய ஆதீன வித்துவான்களும் இன்னும் பல இசைப் புலவர்களும், தென்மொழி வடமொழிப் புலவர் களும் பல பிரபுக்களும், சமீன்தார்களும் வந்திருந் தார்கள். அவ்வாறு சிறப்புறும் குருபூசை தினத்திற்கு முதல் மூன்று நாட்களும் பின்பு மூன்று நாட்களும் ஆக ஏழுநாட்களும் இசை நிகழ்ச்சிகள், கதாகாலட்சேபம், வட மொழிப் புராணச் சொற்பொழிவுகள், வேதாந்த பரமான பேச்சுக்கள், சைவ சித்தாந்தம் பற்றிய பேச் சுக்கள் ஆகிய இவைகள் நடந்து கொண்டிருக்கும்.

•

இதுபோன்ற நல்ல கலைநிகழ்ச்சிகள் நடந்து கொண்டிருக்கும்போது குருபூசை தினத்திற்கு மறு நாள் பெரிய வைத்தியநாத ஐயரும் சின்னவைத்திய நாத ஐயரும் அழகுற இசைநிகழ்ச்சி செய்து கொண்டி ருந்தனர். அவ்வின்னிசை எடுத்த எடுப்பிலேயே சுறு சுறுப்பும் விறுவிறுப்பும் கொண்டு அங்குள்ளோர் அனை வரையும் ஆட்கொண்டுவிட்டது. அவ்விசை நல்லபடி களைகட்டி அவை நிறைந்திருந்தது. சந்நிதானம் அவர் களின் உள்மனதில் ஏதோ ஓர் உயர்தரமான எண் ணம் எழுச்சிபெற்று வட்டமிட்டுக் கொண்டிருந்தது. சந்நிதானம் அவர்கள் பன்முறையும் வையை வைத்

தியநாத ஐயரின் இசையைக்கேட்டு அவ்விசையி லுள்ள நயங்களையும் திட்பநுட்பங்களையும் அறிந்து அவ்விசையில் ஈடுபட்டு அவ்விளவயதினரிடம் மிக்க அன்பு பூண்டு அவரை மேலாம் நிலைக்குக்கொணரு தல் வேண்டுமென்று எண்ணியவர்களாதலால் தமது அண்மையில் அடக்கமாக அமர்ந்திருந்த வையை வைத்தியநாத ஐயரை நோக்கி நீரும் இவர்களுடன் சேர்ந்துபாடுகிறீரா? என்று கேட்டார்கள். அப்பொழுது பக்கத்திலே தாண்டவராயத் தம்பிரான் அவர்களும் இராமசாமி ஐயரவர்களும் இருந்தனர். சந்நிதானம் வையை வைத்தியநாத ஐயரிடம் இவ்வாறு கேட்ட தும் உடனே வையை வைத்தியநாதஐயர் மிகவும் களிப்புற்று ஆஹா! அவ்வாறே செய்கிறேனென்ருர். உடனே சந்நிதானம் அவர்கள் நீர் இளம்வயதினரா யிற்றே சிறுபிள்ளையாகிய நீர் அவர்களுடன் சேர்ந்து பாட இயலுமா! இசை உலகிலே அவர்கள் சிறந்த புக ழும் நற்றிறமும் அறிவாற்றலும் முதிர்ந்த அனுபவமும் வாய்ந்தவர்களாயிற்றே. அவர்களிடம் இசையனுப வம் வயது முதிர்ச்சியால் சிறந்து இருக்குமே என்ருர் கள். இவ்வாறு கூறியதும் வையை வைத்தியநாத ஐயர் தமது படிப்பின் முதிர்வால் “மானிநேர்விழி மாதராய்வழு திக்குமாபெருந் தேவிகேள், பானல் வாயொரு பாலனீங்கிவ னென்றுநீபரி வெய்திடேல், ஆனைமாமலை யாதியாய இடங்களிற்பல வல்லல்சேர், ஈனர்கட்கெளி யேனலேன்திரு வாலவாயர னிற்கவே” என்ற தேவாரத்தை மிகவும் அடக்கமாகவும் மெது வாகவும் சந்நிதானம் காதில் படும்படியாகக் கூறி, எங்களால் பாட இயலுமா! என்று சந்நிதானம் சந்

தேகப்படல் வேண்டாம். நாங்கள் இளவயதினராயி னும் அவர்களைவிடச் சிறியவராயினும் சிவபெருமான் திருவருளும் சந்நிதானத்தின் பேரன்பும எங்களுக்குத் துணையாக இருக்கும்போது அஞ்சாமற் பாடுவேன். எனக்கும் அவர்களுடன் சேர்ந்து பாடல் வேண்டு மென்று அவா மிகுதியாகவே இருக்கிறது. இம்மாதிரி யான பெரியதொரு அவையிலே நானும் பாடி அனை வரையும் களிப்பிக்க வேண்டுமென்று என்மனம் எழுகின்றது. நானும் பெரியோர்களாகிய அவர்களு டன்சேர்ந்து பாடினால் இன்னும் இசையிலுள்ள சிறந்த நுட்பங்களைத் தெரிந்துகொள்ளுதற்கும் ஒரு வாய்ப்பாக இருக்கும். கடவுள் கிருபையால் எனக்குத் தெரிந்த மட்டும் நானும் சேர்ந்துபாடுகிறேன். இதற்குச் சந்நி தானம் உதவி செய்தால் நன்றாக இருக்கும் என்றார். சந்நிதானமும், தாண்டவராயத்தம்பிரானும் அவர்கள் கூறிய தேவாரத்தையும், துணிவான பேச்சையும் கேட்டு கலை வல்லுநருக்கு அச்சம் ஏது எக்காலத்தும் சிவபிரானின் எண்ணத்திலேயே மூழ்கிவரும் இச்சிறு வருக்கு தைரிய லெட்சுமி துணைசெய்யும் என் றெண்ணி மனதில் மிகக் களிப்புற்று விளங்கினார்கள்.

உடனே சந்நிதானம் அவர்கள் பெரிய வைத்திய நாத ஐயரவர்களை நோக்கி இச்சிறுபிள்ளையாகிய வையை வைத்தியநாத ஐயரும் தங்களுடன் சேர்ந்து பாடுதல் வேண்டுமென்று விரும்புகிறோம். இசை உல கில் மிகவும் பேரும் புகழும் பெற்ற தங்களிருவர்களு டன் இச்சிறுவரும் சேர்ந்து பாடினால் இன்னும் அதிகப் புகழுக்கு இவர் ஆளாகலாம். சேர்ந்து பாடியதின் பயனாகப் பெரியோர்களாகிய தங்கள் இருவர்களுடைய

நல்லாசிகள் இவ்விளைஞருக்குக் கிடைப்பது மிகச் சிறப்பாக இருக்கும். இனி வருங்காலத்து இவர் நன்ருகப் பேரும் புகழும் பெறவேண்டியவராக இருக்கிருர். இன்று ஒரு சுபதினமாகவும் இருக்கிறது. நல்ல கலைஞர்கள் கூடிய நிறைந்த அவையாகவும் இருக்கின்றது. எனது எண்ணம் தங்களுக்கும் மகிழ்ச்சியைத் தரும் என்றே எண்ணுகின்றேன் என்ருர்கள், சந்நிதானம். இளம் வயதினரான வையை வைந்தியநாத ஐயரிடம் பேரன்பு பூணுதலும் அவர்பால் உள்ள ஈடுபாடும்கண்ட அநேக இசை வித்துவான்கள் மனம் பொருதவர்களாக இருந்தார்கள். இச் சிறுபையனுக்கு என்ன தெரியும், இவன் என்ன பாடிவிடப்போகிருன், பண்டார சந்நிதிகள் இப்பையனிடம் என்ன திறங்கண்டு இவனைத் தூக்கிவைத்துக் கொண்டாடுகிருர். இசையில் மிக வல்லவராகிய பெரிய வைத்தியநாதஐயர் சின்ன வைத்தியநாதஐயர் ஆகிய இவ்விரு சிங்கங்களுடன் பூனைக்குச் சமமாகிய இச்சிறுவனையும் பாடச் செய்ய முயலுகின்ருரே. இவன் அவமானப்படுவதில் தமக்கு என்ன பயன். ஏதோ தெரியாமல் செய்கின்றனரே! என்று தாங்கள் ஒருவருக் கொருவர் பேசிக் கொண்டார்கள்.

பெரிய வைத்தியநாத ஐயரும், சின்ன வைத்தியநாத ஐயரும், வையை வைத்தியநாத ஐயர் நன்ருகப் பாடுவார் என்பதை நன்கறிந்தவர்கள். இராமசாமி ஐயர் ஒன்பது வயதாகவும், வைத்தியநாத ஐயர் ஏழு வயதாகவும் இருக்கும்போது அவர்களுக்கு நடந்த பூணூல் கல்யாணத்திற்குப் போயிருந்த இடத்தில், அவர்களுடைய தகப்பனுராகிய பஞ்சநத ஐயரென்ற

துரைசாமி ஐயரவர்கள் தம் குமாரராகிய அவ்விருவர் களையும் பாடச்செய்து தமது ஆப்த நண்பர்களாகிய பெரிய வைத்தியநாத ஐயரையும் சின்ன வைத்திய நாத ஐயரையும் கேட்கவைத்தார்கள். அப்பொழுது இச்சிறுவர்களின் பாட்டைக் கேட்டு வியந்து அவ்விரு வரையும் ஆசிகூறியுள்ளார்கள். அடுத்து குடியாலம் வாசுதேவ ஐயங்காரவர்களிடம் அவர்களை எடுத்துக் கூறி அவர் வீட்டுப்புதுநுழைவுவிழாவிலும் பாடச்செய்து தாங்கள் கேட்டு மகிழ்ந்துள்ளார்கள். அதன்பின்பு இப்பொழுது ஏழு ஆண்டு காலங்களாகின்றன. அப் பொழுதே யாவரும் வியக்கும்படி பாடிய இவ்வைத்திய நாத ஐயர் ஏழு ஆண்டு காலங்களுக்கு இப்பால் வெகு அழகாகவே பாடுதல் வேண்டும். ஏழு வயதாக இருக் கும்போது சிறுபிள்ளை. இப்பொழுது பதினுன்கு வய தாகிறபடியால் விபரமறிந்த இளம்பிள்ளை. இப்பிள்ளை யினுடைய இசை இன்னும் சிறப்பாகவே இருக்குமாத லால் அவ்விசையை இந்நன்னுளில் யாவரும் அறிதல் வேண்டியது அவசியம்தான் என்றெண்ணினுர். இன் னும் தமது நெருங்கிய நண்பரின் குமாரரான வைத்திய நாத ஐயர் சிறுவயதினராகையால் பிற்காலம் முன்ன ணிக்கு வரவேண்டியவரேயாகும் என்று எண்ணினுர். நமக்குப்பின் இசையுலகில் பெயர் சொல்லுவதற்குத் தகுந்த ஞானம் உள்ளவர்கள் இல்லையாதலாலும், தமது நண்பரின் குமாரன் நல்ல இசைஞானமும் குரல் வளமும் பெற்றிருப்பதாலும் இவ்விளைஞனைப் பாடச்செய்து அவையோர் களிக்கும் முறையில் இவனுக்கு உதவுவதும் நமது கடமையிலொன்ருகும் என்றும் எண்ணினுர். ஏனைய வித்துவான்களைப்போல

பிறரது ஆற்றலைக் கண்டு அழுக்காறு கொள்ளும் குணம் அவர்களிருவரிடமும் அறவே கிடையாது. அவர்கள் உண்மையான கலை நுட்பங்களைச் செவ்வனே அடைந்தவர்களாதலால் அழுக்காறு கொள்ளும் இயல்பு அவர்களிடம் இல்லாதொழிந்தது. எனவே வைத்தியநாத ஐயரிடம் உள்ளன்பு மிக்கவரானார்.

இச்சிறுபிள்ளையின் பாட்டைப் பன்முறைகேட்டு அவ்விசையின் உயர்தரத்தை நன்கு சுவைத்து மகிழ்ந்ததின் காரணத்தாலேயே சந்நிதானம் நம்மிடம் இவ்வெண்ணத்தை வெளியிடுகிறது என்று எண்ணினார். எனவே நம்முடன் இவ்விளைஞர் வைத்தியநாத ஐயரும் இன்று இந்த அவையிலே சேர்ந்து பாடி அவையோர் களிக்கும்படி செய்து நாமும் உதவினால் இவ்விளைஞருக்கு நல்ல புகழுண்டாதற்கு ஏது உண்டாகும். நல்ல மதிப்பிற்கும் உரியவராவார். இவரது இசைஞானத்தையும் வயதையும் முன்னிட்டு நாம் இவ்வாறு செய்து ஆதரவு தந்தால் நமது நண்பர் பஞ்சநத ஐயராகிய துரைசாமி ஐயருக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தரும். இச்சிறுவன்பால் இக்கடமையை நாம் செய்தலே நலம். இந்நிகழ்ச்சி கடவுளின் சித்தத்தால் நடைபெறுகின்றது என்றெண்ணிய பெரிய வைத்தியநாதஐயர் மிகவும் மகிழ்ச்சி கொண்டு சந்நிதானத்தின் எண்ணம் மிகவும் உயர்வானது, அவ்வாறு செய்தல் தகுதியானதேயாகும். சந்நிதானத்தின் எண்ணம் நிறைவேறும் என்று கூறி, தூய உள்ளமும் பரந்த மனமும் படைத்த பெரிய வைத்தியநாதஐயர் அவர்கள் வையை வைத்தியநாதஐயரை நோக்கி வா!

அப்பா, இங்கே உட்காரு என்று தமது அண்மையில் உட்காரவைத்துக்கொண்டார். குருபூசை தினத்தின் மறுநாள் ஆகையால் இந்நிகழ்ச்சியின்போது ஏராள மான கலையன்பர்கள் வந்திருந்தனர். திரளான கூட் டம். மூன்று வைத்தியநாத ஐயர்களும் பாடத் தொடங்கினர். பெரிய வித்துவான்களோடு ஒரு சிறு இளம் வித்துவான் உட்கார்ந்திருப்பது ஒரு வேடிக்கை யாக இருந்தது. யானை படுத்திருக்க பக்கத்தில் ஓர் ஆட்டுக்குட்டி நிற்பதுபோன்ற தோற்றம் இம்மூவர் களிடையே தோன்றிற்று. அனைவரும் இம்மூவரை யும் பார்த்து வியந்தார்கள். பெரிய வைத்தியநாத ஐயர் சின்ன வைத்தியநாதஐயர் ஆகிய இவ்விரு வர் தவிர ஏனைய வித்துவான்கள் அனைவரும் வையை வைத்தியநாதஐயர் பாட இயலாமல் தலைகவிழப் போகிறார். எனவே சந்நிதானம் அவர்கள் வையை வைத்தியநாத ஐயரிடம் பேரன்பு வைத்துள்ளபடியால் அவர்களே தலைகுனியப் போகிறார்கள் என்று எண் ணிக்கொண்டும் பேசிக்கொண்டுமிருந்தனர். இம்மூவ ரின் இசைத்திறனைக் கண்டுகளித்தற் பொருட்டு ஒவ் வொருவரும் தயாராக இருந்தனர். இளம் வித்துவா னைப் பற்றி சந்நிதானம் உள்பட ஒவ்வொருவரும், எப் படியிருக்குமோ? ஏதாயிருக்குமோ, என்று கலங்கிக் கொண்டிருந்தனர்.

வையை வைத்தியநாத ஐயர் பெரியவைத்திய நாத ஐயர் பக்கத்தில் அமர்ந்து கொண்டதும், பெரிய வைத்தியநாத ஐயர் கல்யாணி இராகத்தை அழகு தோன்ற சிறிது ஆலாபனை செய்துவிட்டு தமக்குக்

கைவரப்பெற்ற 'பிரானவராலிச்சி' என்ற சாமாசாஸ்திரிகள் கீர்த்தனையைப்பாடி அதன் சுவையை யாவரும் கேட்டுக்களித்து 'ஆகா' என்று சொல்லும்படி இசைத்து நிறுத்தினார்கள். அதன் பிறகு சின்ன வைத்தியநாதஐயர் காம்போதி இராகத்தை அழகுற இசைத்து அதில் தமக்குக் கைவரப்பெற்ற 'எப்படி மனம் துணிந்ததோ சாமி' என்ற அருணாசலக்கவிராயர் இயற்றிய இராமநாடகக் கீர்த்தனை ஒன்றைப்பாடி அவையோர் களிக்கும்படி பாடிநிறுத்தினார். அதன்பிறகு தமது பக்கத்தில் உட்கார்ந்திருந்த சிறுவயதினரான வையை வைத்தியநாத ஐயரிடம் பெரிய வைத்தியநாத ஐயர் அப்பா! இது ஒரு நல்ல அவையாகும். இந்த அவையிலே உனக்கு நன்றாகக் கைவரப்பெற்ற ஒரு இராகத்தைச் செழிப்புத்தோன்ற ஆலாபித்து அந்த இராகத்திலே உனக்கு நன்றாகவரப்பெற்ற ஒரு கீர்த்தனத்தைப்பாடி அவையோர் மகிழுவது போல செய் என்றார்கள்.

வையை வைத்தியநாத ஐயர் உடனே சக்கரவாகம் என்ற இராகத்தை ஆலாபித்தனர். சுமார் பத்து அல்லது பதினைந்து நிமிடங்கள் பாடி அவையிலுள்ளோர் மெய்சிலிர்க்கும்படி செய்துவிட்டார். இது பழக்கத்திலில்லாத இராகமாதலால் அங்குள்ள வித்துவான்கள் யாருக்கும் அது இன்ன இராகம் என்று புலப்படவில்லை. இசை அறிஞர்கள் யாவரும் இது என்ன இராகம் என்று ஆராயவும், வையை வைத்தியநாத ஐயர் அந்த இராகத்தை வெகு சுவையோடு நன்றாகப் பாடுதலை நுகர்ந்தும் இன்புற்றனர். இதுகாறும்

கேட்டிராத சுவை அந்த இராகத்திலே மிளிறிற்று. இசைப்புலவர்கள் யாவரும் ஒருவர் முகத்தை ஒருவர் மாறியாறிப் பார்த்துத் திகைத்தவண்ணமிருந்தார்கள். அந்த இராகம் அதிகம் பழக்கத்திலில்லாததால் புதுமையாகவும் சுவைமிக்கதாகவும் விளங்கிற்று. பெரிய வைத்தியநாத ஐயரும், சின்ன வைத்தியநாத ஐயரும் அந்த இராகத்திலே மெய்மறந்து தமது கைவிரலை மூக்கின் மேல்வைத்து அச்சிறு பிள்ளையின் இசையமுதத்தில் கருத்தூன்றி வைத்தகண் வைத்தபடியே இருந்து மிகவும் வியப்பு அடைந்து தமது மகிழ்ச்சியை முகபாவனையாலும் நயமான இடத்தை ஆமோதிக்கும் சொற்களாலும் ஊக்கிவந்தார்கள். அவ்வாறு இராகத்தைப் பாடி தியாகராஜசுவாமிகள் இயற்றிய 'சுகுணமுலே செப்புக்கொண்டி' என்ற கீர்த்தனையை வெகு அழகாகப் பாடி நிறுத்தினார்கள். இக்கீர்த்தனம் தஞ்சைமாவட்டத்தில் சிறிதே புழக்கத்திலிருந்தது. இது எங்கும் பரவவில்லையாதலால் இக்கீர்த்தனமும் புதிதாகவே விளங்கிற்று. இவ்வாறு பாடி முடித்ததும் பெரிய வைத்தியநாத ஐயர் வையை வைத்தியைப் பார்த்து "அப்பா நன்றாகப்பாடுகிறாய். பாட்டு நல்ல பக்குவமாக இருக்கிறது. இங்குள்ள எல்லோருக்கும் திருப்தியாக இருக்கிறது. ஈசுரார்ப்பணமாக அமைந்திருக்கிறது. தைர்யமாக இன்னும் வெகு நன்றாகப் பாடு என்று கூறிவிட்டு, இனி இராகம் தானம் பல்லவி சுரம் பாட வேண்டும். உனக்கு எந்த இராகம் நன்றாக வரும் என்று கூறினால் அதையே பாடலாம். ஏனெனில் நல்லதொரு அவையில் பாடும்போது வித்தைக்கு ஒரு குறைவும் ஏற்படலாகாது என்றுதான் கேட்கிறேன்" என்றார். அதற்கு வையை வைத்தியநாத

ஐயர் எனக்கு எது நன்ருக வரும் என்று கூறத் தெரிய வில்லை. தாங்கள் எந்த இராகம் வேண்டுமாயினும் பாடுங்கள். நான் அதைக் கவனித்து எவ்வாறேனும் முயன்று பாடிவிடுகிறேன் என்று கூறினர்.

இளைஞராகிய வையை வைத்தியநாத ஐயர் இவ்வாறு கூறியதும் பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் இவர் சிறுபிள்ளை. உலகம் அறியாதவர். இப்பிள்ளைக்கு நல்ல குரல்வளமும் இசையில் நல்ல அறிவும் இருக்கிறது. இவன் எவ்வாற்ருனும் முன்னணிக்கு வரவேண்டியவனேயாகும். இதை நன்கறிந்தே சந்நிதானம் நம்முடன் பாட ஏற்பாடு செய்திருக்கிறது. இவன் பல்லவி நிரவல் சுரம் பாடுவதில் தவறுவானேயாகில் பெரியோராகிய நாம் இச்சிறு பிள்ளையை அவமானம் செய்தல் வேண்டுமென்று கருதி பொருமையால் வஞ்சக எண்ணங்கொண்டு இச்சிறு பிள்ளையைப் பாட ஒட்டாத வகையினைச் செய்துவிட்டார் என்று எல்லா மக்களும் எண்ணி நம்மைத் தூற்றுவார்கள் என்று நினைத்து சாதாரணமாக அக்கால வழக்குப்படி கன இராகமாகவும், பல்லவி பாடுதற்குரியதாகவும், நல்ல முறையில் வித்தரித்துப் பாடுதற்குரியதாகவும், யாவருக்கும் இசைக்க எளிமைபெற்றதாகவுமுள்ள இராகத்தை எடுத்து ஆலாபம் செய்து பல்லவி நிரவல் செய்தலே உசிதமாகுமென்றெண்ணினர். உடனே சங்கராபரண இராகத்தை நன்ருக ஆலாபித்து மூவரும் பாடினர்கள். அதன் பின்பு தானம் முறைப்படி மூவரும் பாடினர்கள். இம்மூவரும் இராகம் தானம் இவை பாடும்போது அனைத்து மக்களும், பெரிய வைத்தியநாத

ஐயர் சின்ன வைத்தியநாத ஐயர் ஆகிய இவ்விருவரும் இளைஞராகிய வையை வைத்தியநாத ஐயர் பாடிவரும் ஒவ்வோர் இடத்திலும் களிகொண்டு 'ஆகா', 'பேஷ்' 'பலே' என்று சொல்லாத இடமே இல்லை. எல்லாம் முடிந்தபின் அக்காலம் மிகப்பரவியிருந்த "மந்தஹாஸவதனு-ஹரே ஸ்ரீகிருஷ்ணு" என்ற பல்லவியை நிரவல் செய்தார்கள். அப்பொழுது பெரிய வைத்தியநாத ஐயரும், வையை வைத்தியநாத ஐயரும் மாறிமாறிப் பாடினுர்கள். பெரிய வைத்தியநாத ஐயர் பாடும்போது அவ்வொலிகள் 'சிம்மகர்ஜனை' போன்று விளங்கும். அதைக்கேட்டவர்கள் வையை வைத்தியாகிய இச்சிறுபிள்ளை இதை எவ்வாறு பாடப் போகிருன் என்று கவலைகொள்ளுவர். வையை வைத்தியநாத ஐயர் பாடும்போது பெரிய வைத்தியநாத ஐயர் பாடியதெல்லாம் மறந்துவிடும். இவ்வாருக அவை முழுதும் ஆனந்தக்களிப்பில் இருந்தது. இவர்களுடைய சாரீரநலனை எழுத்துமூலம் விளக்குதல் இயலாதது. ஆயினும் இவ்விருவர்களது சாரீரங்களும் கனமும் நயமும் உள்ள கம்பீரமான சாரீரமேயாகும். பெரியவைத்தியநாத ஐயரின் சாரீரவளம் நாதசுர ஒலி போன்றது என்று கொண்டால் வையை வைத்தியநாத ஐயர் சாரீரவளம் புல்லாங்குழல் ஒலிபோன்றது, அல்லது முன்னவரின் சாரீரம் இடி முழக்கம் எனருல் பின்னவர் சாரீரம் சிம்மக் கர்ஜனை. முன்னவரது மயில்தொனி என்ருல் பின்னவரது குயில்தொனி. எனவே இருவரது சாரீரவளமும் உவமையால் எடுத்துக் கூற இயலாதது. ஆயினும் வையை வைத்தியநாத ஐயரின் சாரீரத்தைக் கௌளசாரீர மென்பர்.

தேங்காய் குடுக்கையினின்று வரும் ஒலி போல ஹூங் காரத் தொனியுடன் சங்க நாதம்போல ஒலிக்குமாம். இப்பல்லவியைப் பெரிய வைத்தியநாத ஐயர் பாடி விட்டதானது அவையோர்களைப் புல்லரிக்கும்படிக்கும் ஒரு சிம்மம் தன்னிச்சையாக நடந்து வருவதுபோன்ற ஒலி உடையதாகவும் விளங்கி அச்சபையே வியக்கும் படி இருந்தது.

அவையிலுள்ளோர் அனைவரும் (சந்நிதானம்உள் பட) பதினைந்து வயது நிரம்பாத மிக இளம் வயதுள்ள இச்சிறுபிள்ளை எவ்வாறு பாடப்போகிறன். அப்படிப் பாடினலும் பெரியவைத்தியநாத ஐயர் மதயானை நடந்து வருவது போலவும் மழை பெய்து ஓய்ந்தது போலவும் பலக்கப் பாடி நிறைசெலுத்தியுள்ளாரே. இதுபோல இச்சிறுபிள்ளையால் பாட இயலுமா? அவ வாறு பாடினலும் இந்த அவை நிறைந்து விளங்குமா! என்ன செய்யப் போகிருரோ என்று ஐயப்பட்டிருந் தனர். சந்நிதானத்திற்கும் இந்த ஐயம் எழுந்ததில் வியப்பில்லை. உடனே வையை வைத்தியநாத ஐயர் சங்கராபரண இராகத்தைத் தொடங்கும் போது 'சங்கரா' என்று சொல்லி மேல்தாயி ஷட்ஜசுரத்துடன் சுருதிலீனமாய் சிறிது கார்வை கொடுத்துத் தம்புரா சுருதியோடு ஒன்றிவிட்டார். அவ்வளவுதான். பெரிய வைத்தியநாத ஐயர் அவர்கள் அத்துணை நேரமும் பாடிய அடிச்சுவடே தெரியவில்லை. அவைமுழுதும் இன்பவெள்ளத்தில் சூழ்ந்தது. வையை வைத்திய நாத ஐயர் இராக ஆலாபனம் செய்யும் போதும், தானம் பாடியபோதும், பல்லவி நிரவல் செய்யும்

போதும் அவையோர் மெய்சிலிர்த்து வியப்புற்று ஆடிய தலைகள் ஆடியபடியே இருந்தனர். பெரிய வைத்திய நாத ஐயரும் சின்ன வைத்தியநாத ஐயரும் அவ் விசையைக் கேட்டுத் தளர்ந்து விட்டனர். அவ்வுன்னதமான இசையிலே ஈடுபட்டு உண்மையான முறையிலே தமது மகிழ்ச்சிப்பெருக்கைக் காட்டித் தக்க இடத்தில் தட்டிக்கொடுத்து அந்த இளைஞரை மேலும் ஊக்கப்படுத்தி வந்தார்கள். சந்நிதானத்தின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. இசையில் இவனொரு சிங்கக் குட்டிதான்.; சந்தேகமே இல்லை என்று வாய்விட்டு அடிக்கடி கூறிவந்தார்கள். அவர்களது இசையில் அவையே ஒன்றிவிட்டது.

பல்லவி நிரவல்கள் செய்து முடிந்ததும் பல்லவி சுரம்பாட வேண்டிய நேரம் வந்தது. பெரிய வைத்திய நாத ஐயரைவிட சின்ன வைத்தியநாத ஐயரவர்கள் சுரம் பாடுவதில் மிகுந்த திறம்பெற்றவர்கள். எனவே பல்லவி சுரம் பாடுதலைச் சின்ன வைத்தியநாதஐயரவர்கள் ஏற்றுக்கொண்டு தமது திறமை முழுவதும் காட்டிப் பல்லவி சுரம் ஆகியவற்றைப் பாடிவந்தார். உடனே வையை வைத்தியநாத ஐயர் தாமும் அதனை ஏற்றுத் தமது திறத்தினைச் செம்மையாகக்காட்டிச் சரப்பந்தல் போட்டது போலச் சிறக்கச்செய்து யாவரும் வியக்கும் படியும் 'அற்புதம்' என்று சொல்லும்படியாகவும் பாடினார். வையை வைத்தியநாத ஐயர் பாடும்போது அன்னாரின் உள்ளத்திலே பரமசிவனே அமர்ந்து கொண்டு இசைத்தார் என்றே கூறல் வேண்டுமேயன்றி மனித எத்தனத்தாலே பாடப்பட்டது என்று

கூறுதற்கு இயலாத சிறப்பம்சங்கள் அமைந்திருந்தன. கச்சேரி மிகவும் நன்கு புகழத்தக்கவிதத்தில் அமைந்தது. எல்லோருக்கும் மிக்க மகிழ்ச்சி. வையை வைத்தியநாத ஐயரைப் புகழ்ந்து கொண்டாடாதவர் எவருமில்லை. வையை வைத்தியநாத ஐயரைவிட பெரிய வைத்தியநாத ஐயர் இருபத்தோர் ஆண்டுகளுக்கும் சின்ன வைத்தியநாத ஐயர் ஆறு ஆண்டுகளுக்கும் பெரியவர்களாவார்கள். எனவே பதினன்கு வயதே நடந்துகொண்டிருக்கும் இவ்விளைஞராகிய வையை வைத்தியநாத ஐயர் தம்மிலும் மூத்தவர்களாகிய பெரிய வைத்தியநாத ஐயர் சின்ன வைத்தியநாத ஐயர் ஆகிய இவ்விருவர்களுக்கும் இணையாக இருந்து சிறப்புத்தோன்றப் பாடியதையும், மிகப் பெரியவர்களும் பேரும் புகழும் இசைத்திறனும் கொண்ட அவ்விருவர்களுடன் சிறிதும் களைக்காமல் சளைக்காமல் அநாயாஸமாக நல்லமுறையில் பாடி சமாளித்தாரே என்பதையும் யாவரும் வியந்து வியந்து பாராட்டினர்.

இசை நிகழ்ச்சி முடிந்ததும் பெரிய வைத்தியநாத ஐயர், சின்ன வைத்தியநாத ஐயர், வையை வைத்தியநாத ஐயர் ஆகிய இம்மூவரும் சந்நிதானத்தின் அருகில் வந்து அமர்ந்தனர். சந்நிதானம் அவர்கள் பெரிய வைத்தியநாதஐயரை நோக்கி 'இன்று அபாரமான கச்சேரி, வெகுநேர்த்தியாக இருந்தது. ஒவ்வொரு இடத்திலும் இசைச்சுவை குன்ருமல் தேனினும் இனிமையாக இருந்தது. இச்சிறுவராகிய வையை வைத்தியநாத ஐயர் தங்களுடன் சேர்ந்து பாடி சமாளிக்க

இயலாதென்றே எண்ணினோம். வெகு நேர்த்தி யாகப் பாடிவிட்டார். இவர் இசையுலகில் சிறந்து பெரும்புகழும் பெறுவார் எனபதில் ஐயமில்லை. பெரிய வித்துவான்களாகிய தங்களுடன் சேர்ந்து பாடும் பெரும் பாக்கியத்தை முதன்முதலாக இந்நன்னாளிலே பெற்ற இவர் தங்களுடைய அன்புமிக்க ஆசிகளைப் பெற்றுவிட்டார் என்று கூறி, பிறகு வையை வைத்திய நாத ஐயர் ஒரு இராகம் பாடினாரே அது என்ன இரா கம், புதிதாக இருந்ததே, இதுவரை நாம் கேட்டோ மில்லை.' என்று பெரிய வைத்தியநாத ஐயரிடம்கேட் டார்கள். உடனே அவர்கள்" எனக்கும் தெரியவில்லை. மிக அழகாக இருந்தது. பிள்ளையாண்டானின் அழகிய சாரீரத்திலே மெருகேற்றிய தங்க நகைபோல அந்த இராகம் பிரகாசித்தது. நாங்களும் அந்த இராகத்தை இதுவரையில் கேள்விப்பட்டதில்லை. கீர்த்தனமும் புதி தாகவே இருக்கிறது. இங்குள்ள ஏனைய வித்துவான் களுக்கும் இந்த இராகம், இன்னதென்று தெரிந்திரா தென்றே எண்ணுகிறேன்" என்றார். பக்கலிலிருந்த ஏனைய வித்துவான்களும் தங்களுக்கும் இது புரியாத தொன்று என்பதைத் தங்கள் தலையாட்டத்தின் மூல மாக உணர்த்திவிட்டனர். உடனே வையைவைத்திய நாத ஐயரை நோக்கி தாம் இசைத்தது என்ன இரா கம் என்று சந்நிதானம் கேட்டார்கள். "இது சக்கர வாகம் என்ற இராகம். 72 மேளகர்த்தா முறைப்படி இது பதினாறுவது மேளம். சுத்தரிஷப அந்தரகாந்தார சுத்தமத்யம சதுஸ்ருதிதைவத கைசிகிநிஷாத சுரங் களையுடையது. சுத்த இராகமெனப்படும். இந்தக் கீர்த்தனை தியாகராஜ சுவாமிகன் செய்தருளிய

‘சுகுணமுலே செப்புக்கொண்டி’ என்பதாகும். இது ஒரு உருக்கமான இராகம்’’ என்ருர்கள்.

சந்நிதானம் பெரிய வைத்தியநாத ஐயரை நோக்கித் தங்கள் போன்ற பெரிய வித்துவான்களுக்கும் தெரியாத இராகங்களும் இருக்குமோ! என்ருர்கள். அதற்குப்பெரிய வைத்தியநாதஐயரவர்கள் கலை, கடல் போன்றது. கடலிலுள்ள எல்லாம் நம்மால் அறிந்து விட்டனவாகா. அதுபோல கலையிலுள்ள அம்சங்களில் ஏதோ சிலச்சில ஒவ்வொருவரிடமும் அமைந்து அழகு பெறுகின்றன. இசைக்கலையில் கணக்கிலடங்காத எத்துணையோ அபூர்வ இராகங்கள் இருக்கின்றன. எல்லோருக்கும் எல்லாம் தெரிந்திருக்க நியாயமில்லை. நல்ல இசைக் கலைஞர்களுக்குச் சபைரஞ்சகமாகிற கன இராகங்களும், ரக்தி இராகங்களுமே கைவரப்பெற்றிருக்கும். இவைகள் சுமார் நாற்பது இராகம்வரை இருக்கலாம். பல புதிய இராகங்கள் ஆங்காங்கு அவரவர்கள் அப்பியாஸ பலத்திற்குத் தக்கவாறு தெரிந்து கொண்டிருப்பார்கள். இப்பிள்ளை தஞ்சாவூர் பக்கத்திலிருப்பதால் சமீபகாலமாகவே வியாபகத்திற்குவரும் இந்த சக்கரவாக இராகத்தையும் இந்தக் கீர்த்தனத்தையும் தெரிந்துவைத்திருக்கிருர். இந்த இராகமும் இந்தக் கீர்த்தனமும் நம் தேயத்தாருக்குப் புதிதேயாகும். இப்பொழுதுதான் வெளிவந்துகொண்டிருக்கிறது. இதுபோல இன்னும் ஏராளமாக உண்டு என்ருர்கள்.

சந்நிதானம் தொடர்ந்து எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. இந்தச் சிறுபிள்ளையான வையை

வைத்தியநாத ஐயர் பெரிய வித்துவான்களாகிற தங்களிருவர்களுடன் சேர்ந்து பாடி அனைவரையும் மகிழ்ச்சிகொள்ளச் செய்தார். இன்று ஒரு சுபதினமாக இருக்கிறது. இசைப்புலவர்கள், வடமொழிப் புலவர்கள், தென்மொழிப் புலவர்கள், ஏனையபிரபுக்கள் ஆகிய இவர்கள் இன்று இங்கு கூடி நிறைந்திருக்கிறூர்கள். இவ்வளவு சிறப்பான கூட்டம் அமைவது என்பது மிகவும் அரிது. எக்காலத்தும் வாய்க்காது. இவ்வளவு நிறைந்த அவையிலே தங்களுடன் சேர்ந்து பாடிய இவ்விளைஞருக்கு ஒரு பட்டம் கொடுக்கலாமென்று எண்ணுகிறேன். தங்களுடைய கருத்து என்ன என்று கேட்டார்கள். உடனே பெரிய வைத்தியநாத ஐயர் சந்நிதானத்திடம், அவசியம் பட்டத்திற்குத் தகக பாத்திரம். அவர் முகமண்டலத்தில் வித்தியாகளை சொட்டுகின்றது. கடவுள் பக்தியில் மிகச் சிறந்தவர். நல்ல இசை ஞானத்திறத்துடன் விளங்குகிறுர். சந்நிதானம் எண்ணியது இவ்விளைஞருக்குப் பெரும் பேராகும் என்றுர்கள். உடனே சந்நிதானம் அவர்கள் தங்கள் பெயர் பெரியவைத்தியநாத ஐயர் என்று வழங்குதலால் பெயருக்கு முன் அடையாக 'பெரிய' என்ற பட்டம் இவருக்குப் பொருந்தாது. தங்கள் தம்பிக்குச் சின்னவைத்தியநாத ஐயர் என்று பெயர் வழங்குதலால் பெயருக்கு முன் அடையாகச் 'சிறிய' 'சின்ன' என்ற பட்டமும் இவருக்குப் பொருந்தாது. இவருடைய வித்துவத் திறமைக்குத் தக்கதாக இருந்தால் நலம். இவ்வளவு பெரிய வித்துவான்கள் நிறைந்த சதசிலே ஏதோ ஒரு பட்டத்தைக் கொடுத்தலும் சிறப்பாகாது. இவரது திறமையைவெளிப்

படுத்துவது போன்ற நல்லதொரு பட்டம் கொடுத்தல் வேண்டும். இப்பொழுதே இவர் இப்படிப் பாடும் போது தங்களது வயது வரும்போது எவ்வளவோ சிறந்து விளங்குவார் என்று தோன்றுகிறது. இவரது கீர்த்தி பரவுவதற்கும் எக்காலத்திலும் இந்தச் சபையையும் உங்களைப்போன்ற பெரிய வித்துவான் களுடைய ஆசிகளை இவர் மறவாமல் இருப்பதற்கும் ஏற்றபடி பெரிய பட்டமாக இருத்தல் வேண்டும். அப்படி எந்தவிதமான பட்டம் அளித்தால் சிறப்பாக வும் இவருக்குப் பொருத்தமாகவும் இருக்கும் என்று கேட்டார்கள்.

பெரிய வைத்தியநாத ஐயரும் சின்ன வைத்திய நாத ஐயரும் பிறருடைய வித்தையில் அழுக்காறு உடையவர்களல்லர். சூது, வாது, பொய், புரட்டு, வஞ்சனை ஆகிய தீய எண்ணங்களும் தீய செய்கை களும் அவர்களிடம் அறவே கிடையாது. சங்கீத வித்தையைத் தம்முள் நிறைத்து இசைக்கலையில் நிறை குடமாக விளங்குபவர்கள். பெரியவைத்தியநாத ஐயர் திறந்த உள்ளம் படைத்தவர். உண்மையான வித்தைக்கு மதிப்புக்கொடுக்கும் மனப்பாங்கு உள்ள வர். எனவே சந்நிதானத்தை நோக்கி எங்களுக்குப் பிறகு இசையில் நற்றிறம் வாய்ந்தவர்கள் ஒருவரும் இல்லையே என்று கவலையுற்றிருந்தோம். அக் கவலையை வையை வைத்தியநாதன் என்ற இந்த இளை ஞர் மூலமாகக் கடவுள் நிறைவு செய்து விட்டார்கள். முந்திய பிறவியில் பண்ணிய பூசாபலத்தின் பலனால் இப்பிறவியில் ஏழுமுதல் பதினைந்துக்குள்ளாக உள்ள

இந்த இளம் வயதிலேயே வெகு அற்புதமாகப் பாடு கிறார். இவரது இசை கடவுளருள் பெற்றதாகவே விளங்குகிறது. இவரது இசையைக் கேட்ட ஒவ் வொருவரும் மெய்சிலிர்த்து மயிர்க்கூச்செறிந்து சித்திரப் பாவை போலவே ஆனார்கள். மன மெய் மொழிகளால் அளவிட்டுக் கூற இயலாதவாறு இவரது இசைத்திறம் மேம்பட்டு விளங்குகிறது. சிறு பிள்ளையாக இருந்தா லும் இராகம் தானம் பல்லவி நிரவல் ஆகியவற்றை என்னிலும் பன்மடங்கு சிறப்புத் தோன்றுமாறும், திட்பநுட்ப மிகுந்த கற்பனைகளோடும், நற்றிறத் தோடும் பாடுகிறார். எனது தம்பி சின்னவைத்திய நாத ஐயரைவிட பல்லவி சுரம் பாடுவதில் சிறப்பான முறையைக் கையாண்டும், எவராலும் செய்ய இய லாத திறத்தினைக் காட்டியும் வெகு அற்புதமாகப் பாடினார். எங்கள் இருவர்களைப் பார்க்கிலும் இசை அம்சத்தின் நற்றிறங்கள் வெகு சிறப்பாக இவ்விளைஞர் பால் விளங்குகிறது. இவரது சாரீரவளம், குரல்நயம், இசை ஞானம், இசை ஞானத்திறன், இசைப்பகுதி களில் செயலாற்றும் கற்பனை நயம் ஆகிய இவைகளால் நாங்கள் மட்டுமின்றி எங்கள் போன்ற இசைப்புலவர் கள் எல்லோரும் தளர்ந்து போய்விட்டோம். அத் துணைச்சிறப்பாக இவரது இசை இருக்கின்றது. எனவே எங்களுக்குள்ள பட்டப்பெயரைவிட மிகவும் மேலான பட்டப் பெயரிருந்தால்தான் சிறக்கும். ஆகையால் இவருக்கு 'மகாவைத்தியநாத ஐயர்' என்ற பட்டப்பெயரால் அழைப்பது சிறப்பாக இருக் குமோ என்று எண்ணுகிறேன். சந்நிதானத்தின் எண்ணம் எப்படியோ! என்றார்.

இவ்வாறு பெரிய வைத்தியநாத ஐயரவர்கள் கூறியதும் சின்னப்பட்டம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் அவர்களுக்கு அளவில்லாத மகிழ்ச்சி. பெரிய வைத்திய நாத ஐயரின் தூய்மையான திறந்த உள்ளத்தையும், இவ்விளைஞரிடம் மிக அன்புகொண்டு விளங்குதலையும் நினைக்க நினைக்க அவர்களுக்கு மட்டில்லாத மகிழ்ச்சி. இவ்வாறு களிப்புமிகப்பெற்ற சந்நிதானம் அவர்கள் பெரிய வைத்தியநாத ஐயரவர்களை நோக்கி 'மிகவும் சரி, தங்கள் அன்புகனிந்த உள்ளத்தில் தோன்றிய இம் 'மஹத்' சப்தம் வேதவாக்கு என்றே கருது கிறேன். இது கடவுள் சம்மதமுமாகும். தங்களுடைய வும், மற்றும் இங்கு குழுமியுள்ள கலைஞர்களுடையவும் ஆசியாகவும் தங்கள் வாக்கினின்று உதித்த இந்த 'மஹத்' என்ற பட்டப்பெயரே இவ்விளைஞருக்கு மிக வும் ஏற்றதாக இருக்கும் என்றார்கள். அவையிலிருந் தோர் எல்லோரும் ஆனந்தக்குறிப்பைத் தங்களது கையொலியினால் வெளிப்படுத்தினார்கள்.

உடனே சுப்பிரமணிய தேசிகரவர்கள் வையை வைத்தியநாத ஐயரை நோக்கி "இன்று இவ்வளவு பெரியோர்கள் நிறைந்த அவையில் உங்களுடைய இசைத்திறத்தினையும் அரியபெரிய ஆற்றல்களையும் கண்டு யாவரும் வியந்ததற்கு அறிகுறியாக 'மகத்' என்ற சிறப்புப்பட்டத்தை உமது பெயருக்கு முன் சிறப் படையாகவைத்து "மகா வைத்தியநாத ஐயர்" என் னும் பெயரைத் திருவருள் துணையை முன்னிட்டும், இங்கு குழுமியுள்ள பெரிய வித்துவான்களின் ஆசியை முன்னிட்டும் உமக்கு வழங்குகிறோம். உம்முடைய

இசையாற்றல் நாளுக்கு நாள் வளர்ச்சியுற நடராசப் பெருமான் அருள்புரிய வேண்டும். என்று கூறி வையை வைத்தியநாத ஐயராகிய மஹா வைத்திய நாத ஐயருக்கு ஒரு உருத்திராக்கக் கண்டி அணி வித்து, கல்லிழைத்த தோடாக்களை அவர் கையில் அணிவித்து, பட்டு வேஷ்டி அங்கவஸ்திரம் இவைகளை அணிவித்து ஆசி செய்து உள்ளங்களித்தார்கள்.

அதேதருணத்தில் பெரிய வைத்தியநாத ஐயருக்கும் சின்ன வைத்தியநாத ஐயருக்கும் தாம்பாளம் நிறைய பழம், வெற்றிலைபாக்கு, கற்கண்டு முதலியவைகளுடன் மடத்தின் சம்பிரதாயப்படி அளிக்கும் பணத்துடன் அதிகப்படியான சம்பாவனைத் தொகைகளும் வைத்து, அத்துடன் சரிகை வேட்டி அங்கவஸ்திரம் வைத்து மகாவைத்தியநாத ஐயரவர்களின் கையினால் கொடுத்து வணங்கச் செய்தார்கள். இருவரும் அவ் விளைய வித்துவானை மனமார வாழ்த்தி உளம் மகிழ்ந் தனர். சந்நிதானம் அவர்கள் கையினால் பெரிய வைத் தியநாத ஐயரவர்களுக்கும் சின்ன வைத்தியநாதஐய ரவர்களுக்கும் வைரக்கல் பதித்தமோதிரம் பரிசளித் துச் சிறப்புச் செய்தார்கள். ஏனைய வித்துவான்கள் அனைவரும் அவரவரது சன்மானங்களைப் பெற்றுக் கொண்டு இக்கச்சேரியின் சிறப்பைப் பலகாலும் பேசிப் பேசி மகிழ்ந்தனர். சிறுபிள்ளையாகிய வையை வைத் தியநாதஐயர் அன்றுமுதல் மகாவைத்தியநாத ஐயர் என்ற சிறப்பான பெயருடன் திகழ்ந்தார்கள்.

பிறகு ஓர் ஆண்டுசென்று அதாவது மகாவைத் தியநாத ஐயருக்குப் பதினைந்து வயது முடிந்து

பதினாறாவது வயது தொடக்கத்திலே அதிவர்ணாசிரம தர்மத்தை ஏற்றவரும், சூதசம்ஹிதை முதலியவற்றைப் பிரசங்கம் செய்து யாவருக்கும் சிவபக்தியை வளரச் செய்தவரும் ஏக உருத்திராக்கத்தைப் பட்டுக் கயிற்றில் கோர்த்துக் கழுத்தில் கட்டிக் கொள்ளும் வழக்கத்தைப் பலர் பால் உண்டாக்கிய வரும் 'மனோன் மணீயம்' என்னும் நூலின் ஆசிரியராகிய திருவனந்த புரம் சுந்தரம்பிள்ளை முதலியவர்களின் குருவும் ஆகிய கோடகநல்லூர் சுந்தரசுவாமிகளால் சிவபூசையும் சூதசம்கிதையும் பாராயணமும் சில மந்திர உபதேசமும் பெற்றுக்கொண்டபிறகு மகாவைத்திய நாத சிவன் என்ற பெயரடைந்து அச்சிறப்புப்பெயராலும் அழைக்கப் பெற்றனர்.

குறிப்பு:- இந்நிகழ்ச்சிகள் இராமசாமி சிவனவர்கள் எழுதிய மகாவைத்தியநாத ஐயர் விஜய சங்கிரகம் என்ற நூலிலும், உ. வே. சாமிநாத ஐயர் எழுதிய மகா வைத்தியநாத ஐயர் என்ற நூலிலும் வெவ்வேறுகக் காணப்படுகின்றன.

# 10

# மகாவைத்தியநாத சிவனவர்களும் வேணுநாயுடு அவர்களும்

திருவாவடுதுறை ஆதீனத் தலைவராகிய மேலகரம் சுப்பிரமணிய தேசிகரவர்கள் கல்லிடைக்குறிச்சி மடத்திலே சின்னப்பட்டம் வகித்த காலத்தில் தஞ்சையைச் சேர்ந்த வையை வைத்தியநாத சிவனவர்களின் இசையில் ஈடுபாடு உடையவர்களாக இருந்தார்கள். வைத்தியநாத சிவனவர்களுடைய இசையின் பெருந் திறனை நன்கறிந்த மடாதிபதியவர்கள் தமது முழு அபிமானத்திற்கும் பாத்திரரான சிவகங்கை பெரிய வைத்தியநாத ஐயரவர்களின் திருவாக்கினின்று வெளிப்பட்ட 'மஹத்' என்ற சிறப்புச் சொல்லை முன்னடையாகச் சேர்த்து 'மகாவைத்தியநாத ஐயர்' என்ற பட்டத்தை நல்லதொரு அவையிலே அவர்களின் பதினைன்காவது வயதிலே அளித்துச் சிறப்புச் செய்தார்கள். அந்நாள் முதல் வையை வைத்தியநாத ஐயர் மகாவைத்தியநாத ஐயர் என்ற சிறப்புப் பெய

ராலே எங்கும் எப்பொழுதும் வழங்கிவரப்பெற்றார்.

இப்பட்டத்தை மகாவைத்தியநாத ஐயரவர்கள் பெற்றபிறகு பற்பல இடங்களிலும் சென்று பேரும் புகழும் எய்தி அளவிடற்கரிய சன்மானங்களை எல்லாம் பெற்றார்கள். பிறகு பற்பல சமீந்தார்கள், பிரபுக்கள், அரசர்கள், ஆகிய அனைவர்களாலும் பெரிதும் மதிக்கப் பெற்றார்கள். பிறகு திருவனந்தபுரம் சென்று ஆயில்யம் திருநாள் அரசரவர்களாலும், விசாகம் திருநாள் அரசர் அவர்களாலும் சிறப்பு ஓங்கிய புகழைப்பெற்று மதித்தற்கரிய சன்மானங்களை எல்லாம் பெற்றார்கள். அதன் பிறகு மைசூர் சென்று மைசூர் அரசரவர்களாலும் அங்குள்ள வீணை வித்துவான்களாலும் இசை அறிஞர்களாலும் சன்மானிக்கப்பெற்று ஈடு இணையில்லாத புகழைப் பெற்றார்கள். மகா வைத்தியநாத சிவனவர்கள் மூன்றும்முறை மைசூர் சென்று திரும்பி வரும் வழியில் சென்னை மாநகரில் ஓரிருமாதங்கள் தங்கி இருந்தார்கள். அவர்களுடைய அளவு கடந்த புகழைக் கேள்விப்பட்ட சென்னைநகரமக்கள் அவர்களுக்குப் பற்பல இசைக்கச்சேரிகளுக்கும், சிவகதை செய்தற்கும் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து மிகவும் மகிழ்ந்து வந்தார்கள். அவர்களது சிவகதைச் சொற்பொழிவுத் திறனும், குரல் நயத்தால் வெளிவரும் இன்னிசையின் நற்றிறமையாலும் மக்களனைவரும் அவர்களைக் கொண்டாடி மகிழ்ந்தார்கள். சென்னைநகரம் முழுவதும் ஆரவாரம் மிகுந்து இருந்தது. அவர்களுடைய பெரும்புகழை அனைத்து மக்களும் வெகுமகிழ்ச்சியுடன் ஒவ்வொரு நாளும் ஒருவருக்கொருவர் பேசி மகிழ்ந்த

வண்ணம் இருந்தனர். அம்மகிழ்ச்சி மிக்க புகழ்ச் சொல்லானது சென்னை நகரம் முழுவதிலும் வெகு. விரைவாகப் பரவி ஒலித்தது.

அவ்வாறு மகா வைத்தியநாத சிவனவர்களும் அவர்களது தமையனர் இராமசாமி சிவனவர்களும் தங்கியிருந்த சமயத்திலே சென்னையிலுள்ள பல பெரிய மனிதர்களெல்லாம் சேர்ந்து கவர்னருக்கு ஒரு விருந்தைச் சிறப்பாக நடத்தினர்கள். அந்த விருந்தில் ஒரு கர்னடக இசைக்கச்சேரியை எற்பாடுசெய்து கவர்னரை மகிழ்வித்தல் வேண்டுமென்று எண்ணிய சில கனவான்கள் ஒவ்வொவரும் தத்தமக்குத் தெரிந்த இசைப்புலவர்களைக் கூறிவந்தார்கள். முடிவாக எல்லாக் கனவான்களும் இசையைச் சோபிக்கச் செய்யும் ஆற்றலுள்ளவர் மகா வைத்தியநாத சிவனே ஆவர் என்று முடிவுசெய்தனர். அதன்படி அவ்விருந்தில் அச்சபைக்கு ஏற்றவாறு அனைவரும் பெருமை கொள்ளும் வகையில் மகா வைத்தியநாத சிவனவர்கள் பாடி மகிழ்வித்தார்கள். அந்த விருந்து எல்லா வகைத்தானும் சிறந்திருந்தாலும் அவர்களுடைய இசைவிருந்து மகுடம் வைத்தமாதிரி மிகச்சிறந்து விளங்கிற்று. கவர்னருடைய விழாவிலே கர்னடக இசை நிகழ்ச்சி அதுவரை நடந்ததில்லை. ஆகையால் அவர்கள் கவர்னரும் மகிழும்படி இங்கிலீஷ் நோட்டுக்கள் போன்று பலபாடினர்கள். அதனல் அவர்களுக்கு இன்னும் அதிக மதிப்பும் புகழும் ஏற்படலாயிற்று.

அக்காலத்தில் சென்னையில் வேணு நாயுடு என்

ஒரு பேர்பெற்ற இசைப்புலவர் ஒருவர் இருந்தார். இசைத்திறத்தினை நன்கறிந்த பல புலவர்களுள் இவர் மிகவும் சிறந்த இசைப்புலவரென்று அனைவராலும் மதிக்கப்பெற்றவர். இவரை "சுரவீர, வீரசூர, கண்டாமணி, வேணுகோபாலதாஸு நாயுடு" என்றழைப்பார்கள். இவர்சுரம்பாடும்போது வீரம் செறிந்து வெகு தாட்டியாய் வரும் காரணத்தால் "சுரவீர" என்றும், இராகம் தானம் பல்லவி இவைகள் பாடுவதில் இவரை யாரும் வெல்லுதல் இயலாது. ஆதலால் "வீரசூர" என்றும் பட்டம் பெற்றார். இவர் சிவகங்கை சமஸ்தானத்தில் நடந்த சங்கீத பரீட்சையில் வெற்றிபெற்றதால் "கண்டாமணி" என்ற விருது பெற்றார். இவரது வலதுமுழங்கைக்கு மேலே தங்கத் தாலாகிய ஒரு கடகத்தில் மூன்று தங்கமணிகள் தொங்கிக் கொண்டிருக்கும். அதுவே வீரகண்டாமணி என்ற விருதாகும். அவர் அதை அணிந்துகொண்டே வெளியிற்புறப்படுவார். இவர் மிடற்றிசையிலும்வீணைக் கருவியிலும் சிறந்தவரென்று மதிக்கப்பெற்றவர். பல்லவி சுரம் பாடுவதிலும், நூதனமான தாள வின்னியாசங்களிலும் நல்ல அறிவு உள்ளவரென்பர். "யானைவரும் பின்னே, மணியோசைவரும் முன்னே" என்ற பழமொழிக்கேற்ப வேணு நாயுடு ஓரிடம் செல்லுவாராயின் அவருக்கு முன்னால் சில பரிவாரக்காரர்கள் முன் கூட்டியே சென்றுவரும் ஆடம்பரமானது வேணு நாயுடு வருகின்றார் என்பதை உணர்த்திவிடும். வேணு நாயுடு வாயசைத்தால் போதும். ஆயிரக் கணக்கான மக்கள் கூட்டம் சேர்ந்துவிடும். வேணு நாயுடு அவர்களிடம் மக்களுக்கு அத்துணை அன்பு

இருந்தது. அத்துடன் அவரிடம் அனைவருக்கும் ஒரு வித அச்சமும் இருந்தது. வேணு நாயுடு அவர்கள் நல்ல செக்கச் சிவந்த நிறம் உடையவர். வெற்றிலை பாக்குப் போட்டு விழுங்கும்போது அந்தச்சாறு தொண்டை வழியே உள்ளே செல்லுவது வெளியே தெரியும். ரோசாப்பூவை அவர் மேலே விட்டெறிந் தால் அது விழுந்த இடம் கன்றிவிடும். அத்துணை மென்மையான உடல்வாகு. அவர் நல்ல மெல்லிதான தூய ஆடை, அணிகலன்கள் அணிந்து கொள்வார். அனைவரும் தமது ஆடை ஆபரண அலங்காரத்தில் விருப்பங் கொண்டு தம்மைநாடி இருத்தற்கு வேண் டிய தோற்றத்தில் விளங்குவார். எங்கு செல்லுவதானு லும் இரட்டைக் குதிரைபூட்டிய பீட்டனிலேயே (PHEATON) செல்வது அவரது வழக்கம். தோற்றத் தில் ஓர் அரசர் போலவே விளங்குவார். அவரைப் பார்ப்போர் இவரொரு பெரிய பிரபு என்றே எண்ணி விடுவர். நல்ல உடல் மினுமினுப்பும், எடுப்பான தோற்றமும் உடைய இவரிடம் யாவரும் இயல்பாகவே கட்டுப்பட்டுவிடுவர் என்பதில் ஐயமில்லை.

வேணு நாயுடு இசைக்கலையிற் சிறந்தவர். லய சுத்தமான செய்திகளை வெகு நன்றாக அறிந்தவர். இசை சம்பந்தமாக எதனையும் செய்ய வல்லமையுள்ள வர். தாள சம்பந்தமான செய்திகளை இவரைப்போல் அறிந்தவர் அக்காலத்தில் யாருமில்லை. தாள சம் பந்தமான புதுப்புதுப் பல்லவிகளைத் தயார்செய்து பாடுவதில் மிகவும் திறமையாளர். எந்த இசைப் புலவர்களும் இவரிடம் தாள சம்பந்தமாகவும்

பல்லவி சம்பந்தமாகவும் பயந்து விலகியே இருந்து விடுவார்கள். வேணு நாயுடு அவர்களின் குழுவின ரில் சில கனவான்கள் இருந்தார்கள். அவர் களுக்குக் கவர்னர் விருந்திலே மகா வைத்திய நாத சிவன் அவர்களை ஏற்பாடு செய்தது பிடிக்க வில்லை. தங்களால் கூறப்பெற்ற வேணுநாயுடு அவர் களைப் பாடச் செய்யவில்லை என்பதில் மிகவும் மனம் நொந்து இருந்தனர். இதைக் காரணமாகக் கொண்டு அக்குழுவினரில் பலர்சேர்ந்து வேணுநாயுடு அவர்களி டம் கவர்னர் விருந்திலே தங்களது இன்னிசை நடத் தல் வேண்டுமென்று நாங்கள் எடுத்துக் கூறியும் அவ் வாறு நிகழாமல் மகா வைத்தியநாத சிவனர்களின் நிகழ்ச்சியை நடத்தினார்கள். மகா வைத்தியநாத சிவனவர்கள் நல்லதொரு சிறந்த இசைப்புலவர் என் பதில் ஐயமில்லை. ஆனால் "தங்களைவிட அவர் எந்த வகையில் சிறந்தவர். அவருக்கு மகா வைத்தியநாத ஐயர் என்ற சிறப்புப் பட்டம் எவ்வகையில் வந்தது. அப்பட்டம் யாரால் அவருக்கு அளிக்கப்பெற்றது. அச்சிறப்புப் பட்டம் அவருக்குத் தகுதிதானா என்றறி தல் வேண்டாமா! எந்த வித்துவான்களை வென்று இப்பட்டத்தை அவர்பெற்றார். அல்லது உயர்ந்தவர் யாரால் இப்பட்டம் வழங்கப்பெற்றது. இசையிலுள்ள எந்தத் திறமையை ஏனைய வித்துவான்களை விட அவர் செய்து காட்டி இப்படிப் பட்டத்தைப் பெற்றார் என்ப தெல்லாம் சோதித்து நாம் அறிதல் வேண்டியது முக்கியமல்லவா! எனவே இச்சென்னை மாநகரில் நாம் அனைவரும் சேர்ந்து அவர்களை ஒரு கச்சேரி செய்யும் படி செய்து நாம் எடுத்துத்தரும் ஒரு பல்லவியை

அவர் பாடி அதனை நிர்வகித்தல் வேண்டும். அவ்வாறு அவர் பாடிச் சிறக்கச்செய்தால் அவர் மகாவைத்திய நாதஐயர் என்ற 'மகத்' பட்டத்திற்குத் தகுதியுள்ளவரென்பதையும், கையிலும்காலிலும் வீரகெண்டை அணிதற்குத் தகுதி உடையவரென்பதையும் நாம் அனைவரும் ஒத்துக்கொள்ளலாம். அவ்வாறு அப்பல்லவியை அவர் இசைக்கத் திறமற்றவராக இருப்பின் பொய்ப்பட்டம் பெற்று உலக மக்களையெல்லாம் ஏமாற்றுகிறார் என்ற செய்தியை அம்பலப்படுத்திவிடுதல் வேண்டும். எனவே தாங்கள்தான் நூதனமான தாள அமைப்பில் இசைத்திறன் மிக்க ஒரு பல்லவியைத் தயாரித்து மகா வைத்தியநாத ஐயருக்கு எடுத்துக் கொடுத்தல் வேண்டும். இம்முறையைக் கொண்டு அவர்களைச் சோதித்தறிதல் வேண்டும் என்று வேணு நாயுடு அவர்களை வேண்டிக்கொண்டனர்.

வேணு நாயுடு பொதுவாக பரந்த உள்ளம்படைத்தவர். இவ்வாறான வாதப்போருக்கு உடன் படுபவரன்று. வித்துவான்களை அவை நடுவில் அவமானப் படுத்துவது நற்றிறமாகாது என்றறிந்தவர். பல வித்வான்கள் மட்டும் கூடி இசை பற்றிய செய்திகளைப் பேசி வருங் காலத்து இசையில் அவ்வாறான நுண் அமைதிகள் ஆழ்ந்துகிடக்கின்றன என்று எடுத்து விளக்குவார். ஒவ்வொரு இசைப்புலவரும் எவ்வித நுண் அறிவை அடைந்துள்ளார் என்பதை தமது கூட்டத்தின் இடையே மட்டும் கூறுவரேயன்றி பொது அவைகளில் குற்றங் குறைகளை எடுத்துக் காட்டுபவரல்லர். ஆயினும் தமக்கு மிகவும் நெருங்கிய நண்பர்கள் பலரும்

வேண்டிக் கொள்ளுவதைச் செவிமடுத்த அவர், அவர்களுடைய வேண்டுகோளை மறுக்கமாட்டாதவ ராகி ஒருவாறு தமது சம்மதத்தைத் தெரிவித்தார். அத்துடன் தமது நெருங்கிய உண்மைத் தோழரான "ஷட்காலப்பிடி, போட்டோகிராப்" மாசிலாமணி முதலியார் அவர்களிடமும் நன்றாக ஆலோசித்துக் கலந்தார். அவர் பிடில் வாத்தியத்தில் ஷட் (ஆறு) காலம் வாசித்துப் புகழடைந்தவர். அவ்விருவரும் நன்றாக யோசனை செய்தார்கள். பின்பு ஒருவாறு தேறி ஆம்! இவ்வாறு செய்தல் நல்லதுதான். மகாவைத்தியநாத ஐயரின் இசைத் திறத்தை அறி தற்கு நல்லதொரு வாய்ப்பாகவும் இருக்கும். அவரது உண்மையான புலமையும் வெளிப்படுதல் வேண்டிய யது அவசியமேயாகும். தமக்குக் கைவரப்பெற்றதை இசைப்பது ஒரு நல்ல புலமையாகாது. மற்றொரு புலவர் எடுத்துத்தரும் இசைத்திறத்தை உடனே ஏற்று அதில் தமது திறமையைக் காட்டுதலே கலைத் திறமாகும். எனவே இவ்வாறு நாம் செய்வது குற்றமு மாகாது என்று ஒருவருக்கொருவர் கலந்து பேசிக் கொண்டனர். பிறகு தமது குழுவினர் அனைவரிடமும் செய்தியைத் தெரிவித்து அவர்களிடம் பணம் வசூல் செய்தார்கள். அக்காலத்திலேயே இதற்கு இரண்டா யிரம் ரூபாய்கள் சேர்ந்தன.

அந்தப் பணத்தில் பொன்னாலான ஒரு வீரசங்கிலி, இரண்டு தோடாக்கள், நடுவிலே தங்கம் பதிப்பித்த பெரிய வெள்ளித் தாம்பாளம், பொன்னுடைகள் ஆகிய இப்பொருள்களுடன் ஆயிரத்து ஒன்று ரூபாய்கள்

ரொக்கம் ஆகிய இத்தனை உயர்ந்த மதிப்புள்ளவற்றைப் பரிசளிப்பதற்கென்று ஏற்பாடு செய்தனர். இந்த இசைவாதப்போரை நடுவராக இருந்து தலைமை தாங்கி கவனித்தற்கு ஷட்காலப்பிடி போட்டோக்கிராப் மாசிலாமணி முதலியாரவர்களையும் ஏற்பாடு செய்தனர்· இக்குழுவினர் அனைவரும் மகாவைத்தியநாத ஐயரவர்கள் அனைத்துக் கச்சேரிகளும் செய்வதுபோலவே அவர்களது விருப்பம் போலப் பாடிக்கொள்ளலாம். ஆனால் பல்லவி மட்டும் வேணுநாயுடு எடுத்துக்கொடுப்பதைப் பாடுதல் வேண்டும். அவர்கள் அப்பல்லவியை இசைக் குற்றம் இன்றி, தாளக்குற்றம் இன்றி நற்றிறத்துடன் பாடிவிட்டால் இப்பரிசுப் பொருள்களை அவர்களுக்கு வழங்கிச் சிறப்பிப்பதுடன், இசையின் எல்லா திட்ப நுட்பங்களையும் அறிந்த மகாமேதை என்றும், இசைப் புலமையில் அனைத்து வித்துவான்களினும் இவர் சிறப்புற்றவராவர் என்றும், மகா வைத்தியநாத ஐயர் என்ற இச்சிறப்புப்பட்டம் இவரது தகுதிகளுக்கு ஏற்றது தான் என்றும் ஏற்றுக்கொண்டு இவையனைத்தும் இசை உலகிற்கு வெளிப்படுத்திப் போற்றுதலும் வேண்டுமென்றும் கலந்து பேசி முடிவு செய்து கொண்டனர்.

வேணு நாயுடு அவர்கள் எடுத்துத்தரும். பல்லவியை மகாவைத்தியநாத சிவனவர்கள் பாடவில்லையாயின் இச்சன்மானத்தையும் ரொக்கம் ஆயிரத்தொன்று ரூபாய்களையும் வேணுநாயுடு அவர்களே அடைதல் வேண்டுமென்றும், வேணுநாயுடு அவர்கள் இப்பரிசுகளை இசைக்கச்சேரி செய்து பெறல் வேண்டுமென்ற நியதி இல்லை என்றும் முடிவாகத் தீர்மானம் செய்து

கொண்டனர். இப்பல்லவியை மகாவித்துவான் என்று பட்டம் பெற்ற மகா வைத்தியநாத ஐயர் சரிவரப் பாட வில்லையாயின் இசைப்புலமையில் திறக் குறைவு உடைய அவருக்கு மகாவைத்தியநாத ஐயர் என்று அவருக்கு வேண்டிய சிலர் தம் விருப்பத்தால் சூட்டி யுள்ளார்களே தவிர இசைவாதப்போரில் வென்று, 'மஹா' என்ற சிறப்புப் பட்டத்தை அவர்கள் பெற்ற வர்களல்லர். அப்பட்டத்திற்கு அவர் அருகரல்லர் என்பது இச்சபையின்மூலம் வெளிப்பட்டுள்ளது என்று வெளி உலகத்திற்குத் தெளிவாகத் தெரிவித்தல் வேண்டுமென்றும், இன்றுமுதல் மகாவைத்தியநாத ஐயர் என்ற பொய்யானப் பட்டப்பெயரால் மக்களை ஏமாற்றி இசைநிகழ்ச்சிகள் செய்தலாகாது என்று அவர்களிடமிருந்து கையொப்பம் அடங்கிய ஒப்புதல் கடிதம் வாங்கி அதனையும் உலகிற்குத் தெரிவிப்பது டன் அவர்களது கையிலும் காலிலும் கட்டியுள்ள வீர கெண்டையை (வீரக்கழல் என்றும் கூறுவர்) கழற்று தலும் வேண்டுமென்று அவர்களுக்குக் கண்டிப்பான ஒரு கட்டளையை இச்சபை அறிவித்தல் வேண்டுமென் றும் தீர்மானம் செய்துகொண்டனர்.

வேணுநாயுடுவின் குழுவினர் இவ்வாறு தீர்மானம் செய்துகொண்டதும் அதிலுள்ள சிலர் சென்னையில் தங்கியிருந்த மகாவைத்தியநாத சிவனவர்கள்பால் வந்து இவ்விபரங்களைத் தெரிவித்தனர். அப்பொழுது இராமசாமிசிவன் மகாவைத்தியநாதசிவன் ஆகிய சிவன் சகோதரர்களிருவரும் வந்திருந்த குழுவினர் களிடம் நாங்கள் இன்னும் ஒருமாதகாலம்வரை இங்கு

தங்கியிருக்க எண்ணியுள்ளோம். இன்னும் ஒருவாரத் திற்குள் இதனை யோசித்து எங்களுடைய பதிலை உங் களுக்குத் தெரிவிக்கிறோம் என்று கூறி அவர்களை அனுப் பினார்கள். இச்செய்தியை அறிந்ததுமுதல் சிவன் சகோதரர்கள் மனநிம்மதி அற்றவர்களானார்கள். அவர்கள் ஈசுவர ஆணைக்கும் சிந்தனைக்கும் கட்டுப் பட்டவர்கள். சிவத்தியானத்திலே சதா மூழ்கித் திளைப் பவர்கள். ஈசுரார்ப்பணமாகவே கச்சேரி செய்பவர் கள். அவ்வாறு நிகழ்த்திய கச்சேரிகளிலே தமக்குத் தாமே கிடைக்கின்ற தொகைகளையே பெறுபவர்கள். போட்டிபோன்ற ஆர்ப்பாட்டங்களில் அவர்களது மனம் எவ்வாறு நாடும்? அவ்வாதப் போரில் ஈசுரத் தன்மை யோடுகூடிய இசை எங்ஙனம் வரப்பெறும். அதுவே அவர்களது மனக்கவலைக்குக் காரணமாகும். இன்னும் தங்களிடம் ஏதோ பொருமைக் காரணத்தினாலே நம்மை இழிவு படுத்துதல் வேண்டுமென்றே இவ்வாறு இசைவாதப்போருக்கு அழைக்கிறார்கள் என்றெண்ணி வருந்தினார்கள். எல்லாம் அவன் செயல் என்று அடிக் கடி சிவத்தியான பரராய் இருந்து மன அமைதியை அடைந்துவந்தார்கள்.

அவர்கள் அவ்வாறு இருக்க சிவன் சகோதரர் களுக்கு மிகவும் நெருங்கிய நண்பர்களில் சிலர் இவ்விப ரங்களை அறிந்து அவர்களின் வருத்தத்தை உணர்ந்து அவர்களிடம் இதற்கெல்லாம் தாங்கள் கவலைப்பட லாமா? இந்த வாதப்போரைப் பற்றித் தாங்கள் யோசித்தல் கூடாது. தாங்கள் இவ்வாறு வாளா இருப்பின் அவர்கள் நீங்கள் இக்கீதவாதப் போருக்கு

அழைத்ததைக் கேட்டதும் பயந்துவிட்டார்கள் என்ற அபகீர்த்தியை உண்டாக்கிவிடுவார்கள். அவர்கள் ஏதோ வாய்வீச்சு வீசினால் அதற்குத் தாங்கள் அஞ்சலாமா? உலகமெல்லாம் புகழ்ந்து கொண்டாடும் உங்களை அவர்கள் அழைத்துப் பாடும்படி கூறினால் தாங்கள் அதை ஏற்றுக் கொள்ளுதலே முறையாகும். தவிர தாங்கள் மனதால் வணங்கும் சிவானுக்கிரகமும் தங்கள் தமையனார் வணங்கும் அந்தக் கணபதி மூர்த்தமும் உங்களுக்குத் துணை நிற்கும். ஈசுரானுக்கிரகம் இருக்கும்போது இசை சம்பந்தமாக உங்களுக்கு வாராதது என்ன இருக்கின்றது. அவர்கள் எடுத்துத்தரும் பல்லவி தங்களுக்கு எம்மாத்திரம்? தங்களுடைய அபாரத்திறமைக்குப் பல்லவி எடுத்துக்கொடுக்கத்தக்க வித்துவானும் இசையுலகிலே இருக்கிறார்களா? அப்படி ஒருவர் இருக்கிறார் எனில் அதையும் அறிதல் வேண்டாமா? தைரியமாக இந்த கீத வாதப் போரை ஏற்றுக் கொண்டு அதனைப்பாடி உங்களது அபாரமான புகழ், பட்டம், இசைத்திறம் ஆகிய அனைத்தையும் காப்பாற்றுதலே சிறந்தது என்று சில நாட்களாக எடுத்துக் கூறி வந்தனர்.

இவற்றைச் செவிமடுத்த சிவன் சகோதரர்கள் நாங்கள் பாடுவதற்காகத் தயங்கவுமில்லை, மயங்கவுமில்லை. ஈசுரார்ப்பணமாக இசைக்கப் பெறும் இவ் விசையைக் கேவலம் புகழ், பட்டம், பணம் இவற்றைப் பேணுதல் முன்னிட்டு ஏதோ சண்டை, குஸ்தி போடுவது போலப் பாடவும், வாதப்போரில் விட்டேனா, தொட்டேனா என்று ஆர்ப்பாட்டம் பண்ணி இசையைத்

தரக்குறைவாகச் செய்தலும் வேண்டுமா! இது முறை யாகுமா! என்றுதான் யோசனை செய்தோம். இருந்தா லும் இவ்விசை வாதம் பொது மக்களின் முன்னிலையிலே நடப்பதால் ஈசுரத்துவம் பொருந்திய இவ்விசையின் மேன்மையை அனைத்து மக்களுக்கும் உணர்த்துதல் வேண்டுமென்று எண்ணி இந்த இசைவாதப்போரை நாங்கள் ஏற்றுக் கொள்ளுவதாகத் தீர்மானித்து விட் டோம் என்று கூறி வேணுநாயுடுவின் குழுவினருக்குத் தமது சம்மதத்தைத் தெரிவித்து விட்டார்கள்.

போட்டோக் கிராப் மாசிலாமணி முதலியாரும் வேணுநாயுடுவும் அவர்களது குழுவினரும் சேர்ந்து ஒரு நாளைக் குறிப்பிட்டு மகாவைத்தியநாத சிவனவர் களுக்கு அறிவித்து விட்டனர். கச்சேரியானது சென்னை மாநகரில் சண்முகம் பொடிக் கடைக்கு எதிர்த்த சந்தி லுள்ள சாத்தாணித் தெருவில் வசித்து வந்த சங்கீத ரசிகரும் இசைப் புலவருமாகிய பிடில் இராமையாப் பிள்ளை அவர்களது வீட்டிலே நடந்தது. (இராமையாப் பிள்ளை பிடிலில் நற்றிறம் வாய்ந்தவர். பிடில் வாசிப்பின் நற்றிறத்தால் இருகைகளுக்கும் தோடாசம்மானம் பெற் றவர். பெரிய செல்வர்.) தெருவில் மக்கள் அமருவதற்குப் பெரிய ஒரு பந்தலும் போடப்பட்டது. கச்சேரி செய்வ தற்குரிய நாட்களுக்குள் வேணுநாயுடு அவர்கள் ஏதோ ஒரு புதுத்தாளத்தைக் கற்பனை செய்து அதிலே நூதன மான ஒரு பல்லவியை அமைத்துத் தயார் செய்து கொண்டார். அக்காலம் பல்லவி என்பது வெகுவித் தாரமாகப்பாடி நிர்வகிக்கத் தக்கதான தோடி, பைரவி, கல்யாணி, காம்போதி, சங்கராபரணம் என்ற

ஐந்து இராகங்களையே எடுத்துக்கொண்டு கையாளு தல் வழக்கம். வேணுநாயுடு அவர்கள் இந்த இராகங் கள் ஒவ்வொன்றிலும் அந்த நூதனமான பல்லவியை இராகச்சுவை கெடாமல், தாளக்கட்டுப்பாடு குலையா மல் எங்கிருந்து தொடங்குதல் வேண்டும், அறுதியா கிற இடைநிருத்தல் எங்கு அமைதல் வேண்டும், முடிவு எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதை முறைப்படுத்தி பாடிக்காட்டுதற்குத் தயார்செய்து வைத்திருந்தார்.

முன்ஏற்பாட்டின்படி கச்சேரிக்குரிய நாளில் இரா மசாமி சிவனவர்களும், மகாவைத்தியநாத சிவனவர் களும், அவர்களுக்கு வழக்கமாகப் பக்கவாத்தியம் வாசித்துவரும் பிடில் வெங்கோபராவ் அவர்களும், மிருதங்கம் சாமாரா அவர்களும், வாதப்போர் கச் சேரிக்காக அமைந்திருக்கும் இடத்தில் உட்கார்ந் தார்கள். கச்சேரி ஆரம்பமாயிற்று. எல்லோரையும் கணநேரத்திலே மெய்சிலிர்த்து மயிர்க்கூச்செறிந்து தம்மை மெய்மறக்கச் செய்யும் குணநலன்களை உடைய அவர்களது சாரீர இனிமையிலே அங்கு குழுமி இருந்த இசைப்புலவர்களும், ஏராளமான மக்களும் அயர்ந்து செயலிழந்து இருந்தார்கள். கச்சேரி செய்யு மிடத்தில் மக்களின் எண்ணிக்கை கணக்கிலடங்கா மல் இருந்தது. தவிர இது கீதவாதப்போர் கச்சேரி யானதால் அதனை வேடிக்கை பார்ப்பதற்கென்றும் அதிகமான மக்கள் கூடிவிட்டனர். தெருவெல்லாம் நெரிசலான சனபெருக்கம். ஒரு தொங்குபலகையில் சில எழுத்துக்கள் பொறிக்கப்பெற்று வாசல் முகப்பில்

கட்டித் தொங்கவிடப்பட்டிருந்தது. முக்கியமான சில கனவான்களிடமும் இசைப் புலவர்களிடமும் அச்சடிக் கப்பெற்ற சிறுதாள் ஒன்று கொடுக்கப் பெற்றது. அத் தாளிலும் தொங்குபலகையிலும் உள்ள செய்தி வருமாறு:—

"வையை வைத்தியநாத ஐயரவர்களின் பெயருக்கு முன்னால் 'மகத்' என்ற சிறப்புச்சொல்லை முன்னடை யாகச்சேர்த்து மகாவைத்தியநாத ஐயர் என்ற சிறப் புப் பட்டம் அளிக்கப்பெற்றிருக்கின்றது. இந்த உன் னதமான பட்டத்திற்கு அவர்கள் தகுதி உடைய வர்கள்தானா என்பதைச் சோதித்துப் பார்ப்பதற்கே இக்கச்சேரி இந்தப் பெரியதொரு அவையிலே நடை பெறுகின்றது. 'மகா' என்ற இந்த 'மகத்' ஒலிக்கு இசைகலையிலுள்ள எல்லா நுட்பங்களையும் அறிந்து செயலாற்றும் திறம் படைத்தவர் என்பது பொருள். எனவே இசைக்கலையை அவர்கள் ஐயம்திரிபறக் கற்று உணர்ந்திருத்தல் வேண்டும் இன்றையக் கச்சேரி யில் இசைமேதை 'சுரவீர, வீரசூர, கெண்டாமணி வேணுகோபாலதாசநாயுடு அவர்கள் ஒரு பல்லவியை எடுத்துக் கொடுப்பார்கள். அதனை மகாவைத்திய நாதஐயர் அவர்கள் ஏற்றுத் தமது புலமையின் சிறப் பினால் அப்பல்லவியைத் திறம்படப் பாடி இசைத்து அவையிலுள்ளோர்களைக் களிப்பித்தல் வேண்டும். அவ்வாறு அவர்கள் பாடி இசைத்துத் தமது திறனைச் செவ்வனே விளக்குவார்களாயின் அவர்களுடைய இருகைகளுக்கும் தோடாக்களும், வீரசங்கிலியும், நடுவிலே தங்கம் பதிப்பித்த பெரிய வெள்ளித் தாம்

பாளமும், பொன்னுடையும், ரொக்கமாக ஆயிரத் தொரு ரூபாய்களும், ஆக இரண்டாயிரம் பெறுமான இச்சன்மானத்தை இச்சபையில் குழுமியுள்ள உங்கள் அனைவரின்முன்பு அவர்களுக்கு அளித்துத் தக்கமுறை யிலே சிறப்புச் செய்யப்பெறும். அவ்வாறு அவர்கள் இப் பல்லவியைத் திறம்பட பாட இயலவில்லையாயின் அவர்களுடைய பெயருக்கு முன்னுல் சிறப்புச் சொல் லாகிய 'மகா' என்ற பட்டத்தை எடுத்துவிடல் வேண் டும். அவர்கள் இனியும் மகாவைத்தியநாத ஐயர் என்ற பெயரால் மக்களை ஏமாற்றி இசை உலகில் நடமாடல் ஆகாதென்று அவர்களிடமிருந்து ஒப்பந்தக்கடிதம் ஒன்று உங்கள் முன்னிலையில் வாங்கப் பெறும். இது வரை மகாவைத்தியநாத ஐயர் என்ற பொய்ப் பட்டத் தால் இசைஉலகில் உலவிவந்தார்கள் என்பதை உலகமக்கள் அறியும்படி விளம்பரப்படுத்தப் பெறும். அவர்கள் வேணுநாயுடு அவர்கள் எடுத்துத்தரும் பல்ல வியைப் பாடஇயலாமல் திறமற்று இருப்பரேல் இச் சன்மானம் முழுதும் வேணுநாயுடு அவர்களே அடையப்பெறுவார்."

மேடையில் அமர்ந்திருந்த மகாவைத்தியநாத சிவ னவர்களிடமும் இத்தாள் ஒன்று கொடுக்கப் பெற்றது. அதைப்பார்த்த சிவன் சகோதரர்கள் இருவரும் மனம் வருந்தி எல்லாம் உன் செயலென்று சிவபெருமானிடம் மனத்தைச் செலுத்தி இசையில் நாட்டம் உடையவர் களானுர்கள். அங்கிருந்த எல்லாக் குழுவினரும் வேணு நாயுடு எடுத்துத் தரும் பல்லவியை மகாவைத்தியநாத சிவனவர்களால் பாட இயலாதென்றும், அவர்கள் இச்

சபையில் அவமான முறுவது உறுதி என்றும் எண்ணி இருந்தார்கள். இன்னும் சிலர் பரபரப்பு அடைந்து இசையை ஊன்றிக் கவனித்தனர். அவர்கள் பாடும் போது தலைமை தாங்கும் போட்டோக்கிராப்மாசிலாமணி முதலியாரும் வேணுநாயுடுவும் அவ்விசை நயத்திலே மனது ஊன்றி ஆகா! இப்படிப்பட்ட சிறப்பு வாய்ந்த ஓர் இசை மணியை மனம் வருந்திப் புண்படும் படியாகத் தரக் குறைவான வழியில் இறங்கி விட்டோமே என்று அடிக்கடி உள்ளபடி மன வருத்தமடைந்து வந்தனர். இவ்வாறு வருந்துகிறார்கள் என்பதை அவர்களின் முக பாவத்திலிருந்து யாவரும் உணர்ந்தனர்.

மகாவைத்தியநாத சிவனவர்கள் வாதப்போரேற்று இசைக்கும் அந்த அவையிலே அக்காலம் இசை ஞானத்தில் மிக்க திறமையுடையவர்கள் என்று மதிக்கத்தக்க பல்லவி சேஷய்யர், உருத்திரஐயா, பிடில் கோட்டப்பநாயுடு, ஆர்மோனியம் கந்தசாமி முதலியார், பொன்னுசாமிநட்டுகர், பிடில் கிருஷ்ணசாமி முதலியார், பிடில் பட்டினம் சுப்பிரமணியஐயர் போன்ற பிரபல இசை வித்துவான்கள் அமர்ந்திருந்தனர். மற்றும் பல இசைப் புலவர்களும் உண்டு அனைவரும் அன்று நடந்த அக்கச்சேரியில் மிகுந்த கவலையுற்றவர்களாகவே காணப்பட்டார்கள்.

மகாவைத்தியநாத சிவனவர்கள் வழக்கம்போல "வாதாபிகணபதிம் பஜேஹம்" "எக்காலத்திலும் மறவேனே" என்ற இரண்டு கீர்த்தனைகளை மட்டிலும் பாடி விட்டு வேணுநாயுடுவை நோக்கிப் பல்லவிக்கு

என்ன இராகம் பாடுதல் வேண்டுமென்று கேட்டார்கள். மகாவைத்தியநாத சிவன் அவர்கள் கேட்கும் போது பல்லவிக்குரிய ஐந்து கன இராகமாகிய தோடி, கல்யாணி, காம்போதி, சங்கராபரணம், பைரவி ஆகிய இவைகளே வரப் பெறும், இவையன்னியில் வேறு எந்த இராகமாயினும் தாம் பாடுவதில் தடையில்லை என்றெண்ணியே கேட்டார்கள். ஆனால் வேணு நாயுடு அவர்கள் ஒரு குறிப்பிட்ட இராகத்தைக் கூருமல் தங்களுக்கு விருப்பமான ஒரு இராகத்தைப் பாடுங்கள். பின்பு பல்லவியைமட்டும் நான் எடுத்துத் தருகிறேன் என்ருர். ஏனெனில், வேணுநாயுடு அவர்கள் மகாவைத்தியநாத ஐயரின் விருப்பம் போலவே எல்லாவற்றையும் பாடச்செய்தார். இசையில் எத்துணையோ திறத்தில் ஒன்ருகிய பல்லவி மட்டும் வாதப் போருக்கு அவர் எடுத்துக்கூறினுர். அதைக்கூட மகாவைத்தியநாத ஐயர் திறம்பட இசைக்கவில்லை என்பதை மக்கள் தமக்குத் தாமே அறிந்துகொள்ளட்டும் என்பது வேணுநாயுடுவின் எண்ணம். மற்றும் அக்கால முறைப்படி பல்லவிக்குரிய ஐந்து கன இராகங்ளில் ஒன்றையே அவர்கள் இசைப்பார்கள் என்றும், அப் பல்லவியை ஐந்து கன இராகங்களிலும் எடுக்கும் இடம், இடையில் நிறுத்தும் இடம், முடிக்கும்இடம் ஆகிய முறைகள் அனைத்தும் தாம் தயார் செய்து வைத்துள்ள படியால் அதில் அதிகக் கவலை கொள்ளாமலும் இருந்தார்.

மகா வைத்தியநாத சிவனவர்களும் அவர்களது தமையனும் எங்குசென்ருலும் ஒவ்வொரு செய்தியை

யும் ஒருவிதப் புதுமொழியிலேயே பேசிக் கொள்ளு வது வழக்கம். அக்குறிப்புமொழி இன்னதென்று ஒருவருக்கும் விளங்காது. அதைப் 'பாண்டவ பாஷை' என்பர். இராமசாமி சிவனவர்கள் நுட்ப புத்தி உடையவர். அவருக்கு உச்சிஷ்ட கணபதி உபாசனை உண்டு. அவ்வுபாசனையினால் எக்காரியமும் வெற்றி அடையுமேயன்றி கேடுகள் நேராது. வேணு நாயுடு தங்கள் விருப்பம் போல் ஓர் இராகம் பாடுங் கள் என்று கூறிய அக்கணமே இராமசாமி சிவனவர் கள் உபாசனை மூர்த்தியாகிய உச்சிஷ்ட கணபதியைத் தியானித்துவிட்டு மகா வைத்தியநாத ஐயரிடம் தாங் கள் ரகசியமாகப் பேசிக்கொள்ளும் பாண்டவ பாஷை யிலே "மாஷாஙரு ஔக்ஷை தாசு" என்று கூறினார் கள். அப்பாஷையின்படி "நாராயணகௌளை பாடு" என்பது பொருள். உடனே நாராயண கௌளை இராகத்தை ஆலாபனை செய்தார்கள். கேட்போர் யாவரும் வியக்கும்படி தோடி, பைரவி, காம்போதி, கல்யாணி, சங்கராபரணம் ஆகிய இவைகள் எவ் வாறு எளிமைபெற்றும் வெகுநேரம் வித்தரித்தும் பாட இயலுமோ, அதுபோலவே நாராயணகௌளை இரா கத்தையும் மிக நயம்பட எளிமைதோன்ற கேட்போர் உள்ளம் உருகும்படி வெகுவித்தாரமாகப் பாடினார்கள். முக்கால் மணிநேரம் இந்த இராகம் ஆலாபனை செய் யப்பட்டது. அதுவரை யாவரும் இந்த இராகத்தை இவ்வளவு நேரம் வித்தாரம் செய்து கேட்டதில்லை. இது கீர்த்தனை மட்டும் பாடுதற்காகும் ஒரு இராகமே யொழிய பல்லவிக்கு எவராலும் எடுத்துக் கையாள இயலாததொன்று. பின்பு இந்த இராகத்தில் தானம்

பாடலானூர்கள். மகாவைத்தியநாத சிவனவர்கள் நாராயண கௌளையை அதிவித்தாரஞ் செய்து பாடி வருஞ் சமயத்திலே வேணுநாயுடு அவர்கள் பல்ல வியை மனத்துக்குள் இந்த இராகத்தில் அமைத்துப் பார்த்தார்கள். ஏராளமான மக்கள் கூட்டத்தின் நடுவிலே இருந்தபடியால் பல்லவியின் அமைப்புத் தமக்குக் கைவரவில்லை. அவர்கள் தானத்தைப்பாடி முடித்து விட்டால் உடனே பல்லவி எடுத்துக் கொடுக் கும் முறை வந்து விடும். இந்த இராகத்தில் பல்ல வியை எவ்வாறு எடுத்து எவ்வாறு முடிப்பது என்று திட்டமிட வில்லை. எனவே வேணுநாயுடு மெது வாக எழுந்து சிறிது அப்பாற் சென்று தனித்த ஓர் இடத்தில் இருந்து இந்த நாராயண கௌளை இராகத் தில் பல்லவியை அமைத்தற்கு முயன்று வந்தார். நாராயண கௌளை என்பது சுத்த சுரங் கொண்டது. 28–ஆவது மேளமாகிய அரிகாம் போதி சுரத்தானங் களையுடையது. 'சரிம பநிதநிசா'–'சநித நிதப தப மகரி கரிச சநிதநிசா' என்ற ஆரோகண அவரோ கணங் கொண்டது. இது வக்கிரமமான சுர வரிசை கொண்டது. இந்த வக்கிர சுரமே திரும்பத்திரும்ப வந்து இந்த இராகத்தின் சுவையைக் காட்டி நிற்கும். எனவே வேணுநாயுடு எவ்வளவு முயன்றும் அப் பல்ல வியின் எடுப்பு, இடைநிலை, முடிவு ஆகிய இவைகள் இராக சொரூபம் தோன்றும்படி தாளக்கட்டுத் தளரா மல் சொற்கள் செம்பாகமாய் வருவது போலப் பல்ல வியை அமைக்க இயலவில்லை. அதற்குக் காரணம் மகாவைந்தியநாத சிவனவர்கள் எடுத்துக்கொண்ட புதுமையான இராகமேயாகும். இராகம் தானம் இவற்

றைச் சுமார் ஒரு மணி நேரம் வரை மகாவைத்திய நாத சிவனவர்கள் பாடி முடித்தார்கள். அதன் பிறகு பல்லவி பாடத் தொடங்க வேண்டியதாக இருந்ததால் தலைமை தாங்கிய போட்டோக்கிராப் மாசிலாமணி முதலியாரவர்களை நோக்கி என்ன பல்லவி பாடுதல் வேண்டுமென்று கேட்டார்கள்.

உடனே மாசிலாமணி முதலியாரவர்கள் வேணு நாயுடுவைச் சுற்றும்முற்றும் பார்த்தார். அவர் அங் கில்லை. அவரது குழுவினர் அவரைத் தேடினர். அவர் கிடைக்கவில்லை. அதற்குள் பத்துநிமிடங்களுக் கும் மேல் ஆயிற்று. அவை முழுவதும் ஒரு சலசலப்பு உண்டாயிற்று. மாசிலாமணி முதலியார் வேணு நாயுடு தக்க சமயத்திலே அங்கு இல்லாது வெளி யேறியதுபற்றி மிகுந்த வருத்தமும் கோபமும் அடைந் தார். அவர் நடுவராதலால் மகாவைத்தியநாத சிவ னவர்களை நோக்கி இந்த இராகத்திலே தாங்களே ஒரு பல்லவியைப் பாடிவிடுங்கள் என்று கூறினார். வேணு நாயுடுவின் இச்செய்கையால் தாமே அவமான முற்ற தாக மாசிலாமணி முதலியாரவர்கள் எண்ணிப் பெரி தும் கோபமும் ஆத்திரமும் அடைந்தார். ஆயினும் அவர் நடுநிலைமை பிறழவில்லை. தாங்களே ஒரு பல்ல வியைப் பாடிவிடுங்கள் என்றதும் இராமசாமி சிவன வர்கள் மகாவைத்தியநாதஐயரிடம் தமது புதுவிதமான பாண்டவப் பாஷையிலே காபிபாக்ஷப்பிஸ், கமாஅப கெசுத்திஸ், ''யந்தோ யிஹ யந்அஷ ஹிதோ-லாந்த லபாயிஹ கோந் வஷவஷ ''யந்தோ-நும் ஆஸ்கிசந், ஹிதோ-கிசைமிஷ ஒப்பஸ், கோந்வஷவஷ-தஸ்ஸஹி

நுசிப்பஸ்'' என்று வெகு வேகமாகத் தட்டுத் தடங் கலின்றிக் கூறினர். அதாவது ஆதிதாளத்தில், அநா கத எடுப்பில், ''சம்போ சிவ சங்கரவிபோ, ஸாம்ப ஸதாசிவ ஓம் ஹரஹர'' சம்போ-முக்காலிடம், விபோ- இடைநிறுத்தல், ஓம் ஹரஹர-பல்லவி முடித்தல் என்று பொருள். இவ்வாறு பல்லவிக்குரிய சொற்களையும் எடுப்பு, இடைநிறுத்தல், முடிவு ஆகியவற்றை தமது குறிப்பு மொழியின்மூலம் அறிந்த உடனே அப்பல்ல வியை மகா வைந்தியநாத சிவனவர்கள் பாட ஆரம் பித்தார்கள். (பக். 146–147ல் காண்க)

மேலேகூறிய முறைப்படி பல்லவியை நான்கு களைச் சவுக்கத்தில் வெகு வித்தாரம் செய்து பாடிய பிறகு இதனை மத்தியமகால நடையாக்கி முறைப்படி வித்தரித்துப் பாடி அதன்பின்பு கற்பனையாகச் சுரங் களைப்பாடி அனைவர்களும் புகழ்ந்து கொண்டாடும்படி சரமாரியாக மழை பொழிவதுபோலப்பாடி நிறுத்தி ஞர்கள். இதற்குமுன் அவர்களது இசையைக்கேட்ட இசை நிகழ்ச்சிகளைவிட இந்த இசை நிகழ்ச்சியானது எல்லாவகைத்தானும் மக்கள் அனைவருக்கும் மகிழ்ச்சி யையும் வியப்பையும் அளித்தது. கச்சேரி முடிவுற்ற தும், வேணுநாயுடு அவர்கள் திடீரென்று தோன்றி ஞர்கள். அவர் மகாவைத்தியநாத சிவனவர்களையும், நடுவராகயிருந்து தலைமைதாங்கிய மாசிலாமணி முத லியாரவர்களையும் நோக்கி இக்கச்சேரியை ஒத்துக் கொள்ளுவதற்கில்லை. பல்லவிக்குரிய இராகமாகிய தோடி, கல்யாணி, காம்போதி, பைரவி, சங்கராபர ணம் ஆகிய இவற்றில் ஒன்ருக இல்லை. வெகுநேரம்

பாடுதற்கும், கற்பனைகளைச் செலுத்துதற்கும் இயலாத அற்ப சஞ்சாரமுள்ள நாராயணகௌளை என்ற இராகம் கீர்த்தனைக்குரிய ஓர் இராகமாகும். பல்லவிக்குரிய இராகமன்று. எனவே இது ஒத்துக்கொள்ளத் தக்கதாகாது. இதை ஏற்றுக்கொள்ளலாமா? என்பதை நன்கு எண்ணித் தீர்மானித்தல் வேண்டும். இது பல்லவிக்குரிய இராகமாக இல்லாத காரணத்தாலேயே நான் பல்லவியை எடுத்துக் கூருமல் வெளியே சென்றேன். இவ்விபரம் நன்கு கவனித்துத் தீர்ப்புச் சொல்ல வேண்டிதொன்று. இதை நடுவர் அவர்கட்கே விட்டுவிட்டேன் என்று கூறினர். நடுவர் மாசிலாமணி முதலியாரவர்கள் மகாவைத்தியநாத சிவனவர்களை நோக்கி இதில் தங்களுக்கு மறுப்பு ஏதும் உண்டா? என்று கேட்டார்.

மகா வைத்தியநாத சிவனவர்கள், சிவபரத்திலேயே இசையை ஈடுபடுத்தும் நான் பொதுமக்கள் விருப்பத்தை முன்னிட்டு இந்த இசைவாதப் போரை ஏற்றுக்கொண்டேன். பல்லவிக்கு என்ன இராகம் பாடுதல் வேண்டுமென்று கேட்டேன். அதற்குத் தங்கள் விருப்பம்போல் பாடுங்கள் என்று கூறியதற்கிணங்கவே நான் நாராயணகௌளை இராகத்தைப் பாடினேன். இந்த இராகம் ஓர் அற்ப சஞ்சாரமுடைய இராகம் என்ற எண்ணத்தை மாற்றி கன இராகங்களாகிற தோடி, கல்யாணி, பைரவிபோல வெகு நேரம் சஞ்சரித்து இசைத்துள்ளேன். சில நிமிட நேரங்கூடப் பாட இயலாத இந்த இராகத்தை முக்கால்மணி நேரத்திற்கும்மேலே பாடி வித்தரித்துள்

ளேன். இந்த இராக இன்பத்திலே தாங்கள் மட்டு மின்றி இங்குள்ள இசைப்பெரும் புலவர் பெருமக்களும் ஆயிரக்கணக்கான பொதுமக்களும் கேட்டுமகிழ்ந் துள்ளார்கள். எவ்விடத்தும் அவர்கள் குறைகாண வில்லே. இத்துணை நேரம் நான்பாடிய இந்த இராகத் திலே இலக்கணக்குற்றங்கள், சுவைக் குறைவான இடங்கள் ஆகிய இவை இன்ன இடத்திலே இருந்தது என்று சுட்டிக்காண்பித்தால் இந்தவாதப்போரில் தோல்வியுற்றவனுகக் கருதி கையிலும்காலிலும் உள்ள வீரகெண்டையைக் கழற்றி விடுகிறேன். அத்துடன் கச்சேரி செய்தலேயும் நிறுத்திவிடுகிறேன் என்றும் கூறினர். இராகம் தானம் பாடியபிறகு என்ன பல்லவி பாடுதல் வேண்டுமென்றுகேட்க அதனையும் என்னைக் கொண்டே பாடும்படி கூறியதற்கு மாருக நான் ஏதுஞ் செய்யவில்லை என்பது தங்களுக்கு நன்ருகத் தெரியும் என்றும் கூறிநிறுத்தினர்கள்

உடனே வாதப்போர் கச்சேரிக்குத் தலைமை வகித்த மாசிலாமணி முதலியாரவர்கள் எழுந்து " இன்று இந்த அவையிலே மகாவைத்தியநாத சிவ னவர்கள் அதிஅற்புதமாகக் கானம் நிகழ்த்தினர்கள். இது ஒரு வாதப்போர் கச்சேரியாக முதலில் அமைந்த தாயினும் இது ஒரு சிறப்புமிக்க தெய்வீகக் கச்சேரி யாகவே முடிந்தது. சாமான்னியமாகக்கூடப் பாடு தற்கு இயலாத இந்த நாராயணகௌளை இராகத்தை வெகுவித்தாரமாகப்பாடி தானம் பல்லவி சுரம் ஆகிய இவைகளை நல்லமுறையில் நிர்வகித்து எந்த இடத் திலும் யாராலும் குற்றங்குறை காண இயலாத

படி அவர்களுடைய அபாரத்திறமையை நமக்கு எடுத்துக்காட்டினார்கள். அவர்கள் இசையில் நற்றிறம் அமைந்து சிறந்து விளங்குவதுடன் கடவுளின் அருள்துணையும் அவர்கள்பால் நிரம்பி இருக்கிறது என்பதை இக்கச்சேரி தெளிவு படுத்துகிறது. நண்பர் வேணுநாயுடு அவர்கள் கீதவாதப் போருக்குத் தயார் செய்த பல்லவியை இந்த இராகத்தில் இசையமைத்து எடுத்துக்கொடுக்க இயலாத காரணத்தால் வெளியேறிவிட்டார் என்பதுதான் உண்மை என்பது அவர்கள் கூறிய வார்த்தைகளினால் புலனாகின்றது எனவே இதே இராகத்தில் பல்லவி சுரத்தைச் சிறக்கப்பாடி அனைவரையும் மகிழ்வித்த அவர்களை மகா வைத்தியநாத ஐயர் என்றழைப்பது பொருத்தமேயாகும். 'மகத்' என்ற சிறப்புப்பட்டம் அவர்களுக்குத் தகுதியேயாகும். இசையில் எல்லா வகைத் தானும் சிறந்தவர்கள். உயர்ந்தவர்கள். எனவே உங்களுடைய சார்பிலும்' இசைப்புலவர்களுடைய சார்பிலும் இந்த அவையில் இப்பொன்னுடையை அவர்களுக்குச் சாற்றி இரண்டாயிரம்ரூபாய் பெறுமான சன்மானங்களை மனமுவந்து அவர்களுக்கு அளிக்கிறேன் என்றுகூறி அன்பளிப்பாகத் தந்தார்கள். இந்த உண்மைநிகழ்ச்சிகளை சென்னை மக்களனைவரும் நன்கறிவர். பின்பு பலநாட்கள் சென்னையில் தங்கியிருந்து சிவன் சகோதரர்கள் தமதூர் வந்து சேர்ந்தார்கள்.

இராமசாமி சிவனவர்கள் தமது பிரதம மாணாக்கர் வாசுதேவ நல்லூர் பல்லவி சுப்பையா பாகவதரவர்களிடம் கூறியபடி அப் பல்லவியின் சுரக்குறிப்புக்களும், பல்லவி முறைகளும் வருமாறு:—

நாராயணகௌளை — ஆதிதாளம் - நான்குகளைச்சவுக்கம் - அநாகதஎடுப்பு

; ; ; ✳ ச'ா; நி த பா — த ப ம க ரி — க ரி ச — ச நி, சா — பா, நி த நி |
. . . சம் . . . போ . . . . . . சி . வ சங் க ர வி

ச'ா ; ; — ச'ா ; — ச நி' த நி ச'ா | ; — நி த நி த — பா; — ம க ரி க ரி ச ||
போ . . ஸா . . . . ம் ப . ஸ . . . தா . சி . . வ . .

சா ரி ம ப நி — ✳ ச'ா நி த - நி த பா - ம நி த ப - ம க ரி க ரி ச - ரி ம பா, நி த நி |
ஓம்ஹரஹர சம் . . . . . . போ . . . . . . . . சிவசங்கரவி

ச'ா ; ;- ப நி த நி ச'ா - ம ப நி த | நி த பா — பா ம க ரி — க ரி ச நி, த, நி, ச ||
போ . . ஸா . . . ம் ப . . . . . . ஸ தா . . . . . சி . வ .

ரி ம ப நி த நி — ✳ ச'ா, — ச' ரி' ச' நி த — பா, ப த ப ம க — ரீ சா — ம ப ம — ப ச'நி |
ஓம் ஹர ஹர சம் . . . . . . போ . . . . சி வ சங். க ர வி

ச'ா ; ; – ப நி த நி ச'ா – ரி ம ப நி | த நி ச'ா - சா ரி ம - ப நி த நி ச'ா – நி, ச ||
போ . .    ஸா . . ம்    ப . . .    . . .    ஸ தா .    . . . . .  சி   வ .

ரி ம ப நி த நி * ச' ரி' ம' க' ரி'–க' ரி' ச'–நி த நி த பா-ம க ரி க ரி ச-ம ப ம-ப ச' நி |
ஓம்ஹரஹர    ச ம் . . . . . . .  போ . . .  சி . . வ . . ச ங் . க ர வி

ச'ா ; ; – ம'க'ரி'க'ரி'ச'–நி த ப நி | த ப –ம க ரி க ரி ச–நி, த, ப, நி,த, ப,–ச நி, ||
போ . .  ஸா . . . ம்  ப . . .    . . ஸ . . தா . . சி . . வ . . ஓ .

சா ரி ம ப நி - * ச'ா ரி' ம' க' ரி' ச'ா – ப நி த ப ம க ரீ - க ரி சா – ம ப ம –ப ச' நி |
ம்  ஹரஹர    சம் . . . . .  போ . . . . . .  சி . வ   ச ங் . க ர வி

ச'ா ; ; – ப நி த நி ச'ா ; – ரி' ச' | ச' நி நி த த ப – நி த த ப ப ம க ரி - ச நி, ||
போ. . ஸா . . ம்  ப . ஸ .    . . தா . . .  சி . . . வ . . .  ஓ .

சா ரி ம ப நி * ச' நி ச' நி த நி ச'ா-நி த நி த ப ம க ரி–நி' ச ரி ம - பா, ப ச' நி | ச'ா
ம் ஹரஹர   ச ம் . .   . . போ . . . . . . . . சி . வ . சங் க ர வி போ

' இது சுரத்தின் மேலிருந்தால் தாரத்தாயியையும், கீழிருந்தால் மந்தரத் தாயியையும் குறிக்கும்.

# 11

## வாசுதேவநல்லூர் பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் ஆன்மறைநாடு திருமலை ஐயங்காரவர்கள் ஆகிய இவ்விருவரின் சந்திப்பும் இசைநிகழ்ச்சிகளும்.

இராமநாதபுரம் மாவட்டத்தைச்சேர்ந்த ஸ்ரீவில்லிபுத்தூரின் அண்மையில் ஆமரநாடு (ஆன்மறைநாடு) என்ற கிராமம் உண்டு. அக்கிராமத்தில் திருமலைஐயங்கார் என்ற இசைப்புலவர் ஒருவர் இருந்தார். அவர் இராமநாதபுரம் பூச்சி ஸ்ரீனிவாச ஐயங்கார் என்ற புகழ்பெற்ற இசைவித்துவானிடம் பயின்று இசையில் நல்ல தேர்ச்சி பெற்றுர். திருமலை ஐயங்காரவர்களுடைய இசை அக்காலத்தில் திருநெல்வேலி, இராமநாதபுரம், மதுரை ஆகிய மாவட்டம் வரை பரவி இருந்தது. அவர் திறமைமிக்க இசைப்புலவராக இருந்தபோதிலும் பெரிய நகரங்களிலே தமது வாழ்க்கையை நடத்தவில்லை. திருமலை ஐயங்

கார் அவர்கள் தாம் இசைகற்று வந்த நாள் முதல் சில காலம்வரை ஸ்ரீவில்லிபுத்தூரிலேயே வாழ்ந்து வந்தார்கள்.

அக்காலத்தில் திருநெல்வேலி மாவட்டம் சங்கரன் கோயிலைச் சார்ந்த வாசுதேவநல்லூர் என்ற கிராமம் சற்றுச் சிறிய ஊராக இருந்தபோதிலும், அங்குள்ள அக்கிரகாரத்தில பல செல்வர்கள் இருந்தார்கள். அங்கு சைவப்பிள்ளைமார் என்ற இனத்தாரின் வீடுகள் அதிகம் உண்டு. அவர்களில் பெரும்பாலோர் நல்ல செல்வர்கள். வாசுதேவநல்லூரில் பல்லவி சுப்பையா பாகவதர் என்ற ஒரு பிரபலமான இசைவித்துவான் இருந்தார். அவர் தஞ்சையைச் சேர்ந்த வையை மகாவைத்தியநாதசிவன் அவர்களிடம் ஏழாண்டுகள் குருகுலவாசம் செய்து நற்றிறத்தோடு இசையில் தேர்ச்சிபெற்று பல்லவி சுரம் பாடுவதில் பெரும்புகழ் பெற்றிருந்தார். பல்லவி நிரவல் சுரம் ஆகிய இவற்றைப் பாடுவதில் நல்ல பாண்டித்தியம் உடையவராதலால் அவரது பெயருக்கு முன்னால் 'பல்லவி' என்ற அடையைச் சேர்த்துப் பல்லவி சுப்பையா பாகவதர் என்ற பெயரால் அழைப்பது வழக்கம்.

வாசுதேவநல்லூர் பல்லவி சுப்பையா பாகவதரவர்களுக்குப் பல மாணவர்களுண்டு. எல்லோரும் இசை உலகில் பெரும் புகழ்பெற்றவர்கள். எனவே பல்லவி சுப்பையா பாகவதரவர்களின் இசையையும், வெளியூர்களிருந்து வரும் இசைப் புலவர்களின் இசையையும் அடிக்கடிக் கேட்டுவந்த காரணத்தால் வாசு

தேவ நல்லூரிலுள்ள மக்களனைவரும் இசை ஞானத்திலும் இசைப்புலவர்களை ஆதரிப்பதிலும் சிறந்தவராக விளங்கினர். வாசுதேவநல்லூர் பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் தமது முப்பத்தைந்தாவதுவயதிலேயே கச்சேரிகளுக்குப் போவதை நிறுத்திக்கொண்டு, தம்பால் வரும் மாணவர்களைத் திறம்படச் செய்து வரும் முயற்சியையே மேற்கொண்டிருந்தார். அக்காலமெல்லாம் அவர் தமிழிலக்கணம், சோதிடம், வேதாந்தம் ஆகிய கலைகளை நன்கு கற்று அதிலும் தேர்ச்சியுடையவரானார். எப்பொழுதும் கலைகளின் நுட்பம் பற்றியே பலரிடமும் அளவளாவுதலும் இக்கலைகளில் பலமாணவர்களைத் தயாரித்து வருதலும் அவரது முக்கிய குறிக்கோளாக இருந்தது.

அவர் சற்று வயதானவராதலால் ஊரிலுள்ள அனைவரும் அவரை மாமா - பாகவதர்மாமா என்றழைப்பதே வழக்கமாகிவிட்டது. வாசுதேவநல்லூரின் அண்மையிலுள்ள கிராம மக்கள் அனைவருக்கும் மாமா என்றால் அது பல்லவி சுப்பையா பாகவதரையே நினைவிற்குக் கொண்டுவரும். அவரைத் தவிர அவ்வட்டாரங்களில் வேறுஎவரையும் 'மாமா' என்றழைப்பது இல்லை. 'மாமா' ஒரு வார்த்தை கூறினால் போதும்! அதனை யாரும் மீறமாட்டார்கள். மாமாவின் சொல்லே அவர்களுக்கு வேதவாக்கு என எண்ணி மதித்தனர்.

வாசுதேவநல்லூர் பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் ஒரு சிறந்த இசைவித்துவான். ஆதலால் அவருக்குத் தலைவன் கோட்டைச் சமீன், வாசுதேவநல்லூர்

தேவஸ்தானம், சேத்தூர் சமீன், சிவகிரி சமீன், சங்க ரன் கோயில் தேவஸ்தானம் ஆகிய ஐந்து இடங்களி லும் ஸ்தலவித்துவான் என்ற முறையில் ஆண்டுப் பதிவுத்தொகை (வருஷாசனம்) அளித்தல் உண்டு. தலைவன்கோட்டைச் சமீன்தாரவர்களும், இளவரச நந்தல் சமீன்தாரவர்களும், சேத்தூர் போன்ற இன் னும் பல சமீன்தார்களும், மற்றுமுள்ள பல செல் வர்களும், கலையில் ஆர்வமுள்ள அனைவரும் மாமா அவர்களோடு சிறிது நேரமாவது அளவளாவிப் பேச வில்லையாயின் அவர்களுக்குப் பொழுதுபோவது கடினமாக இருக்கும். மனம் ஒரு நிலைகொள்ளாது அலைபாயும் மாமா அவர்கள் யாவரிடமும் பற்றுதலு டையவர்களாகி அவர்களுக்கு வேதாந்தம், இயற் புலமை, இசை ஞானம், புராண இதிகாசம் போன்ற பலகலைகளிலும் பற்றுதலும் அறிவு வளர்ச்சியும் உண் டாகும்படி அறிவுரைகள் நிகழ்த்துவார்கள். மாமா அவர்கள் வீட்டில் எக்காலமும் பலரும் ஒன்றுகூடி நல்ல பயன் அளிப்பதான வேதாந்த விசாரணை களைச் செய்துகொண்டிருப்பார்கள்.

ஆமரநாடு திருமலை ஐயங்காரவர்கள் ஸ்ரீ வில்லி புத்தூரில் சிலகாலம் இருந்து பிறகு வாசுதேவநல்லூர் வந்து வாழ்க்கை நடத்திவந்தார். வாசுதேவநல்லூ ரில் இசையில் ஈடுபாடு உடையவர்களும், இசைப் புலவர்களை ஆதரிப்பவர்களும் இருந்தபடியால் திரு மலை ஐயங்காரவர்களுக்குச் சற்று ஆதரவு இருந்தது. பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் வீட்டிற்கு மேற்கி லுள்ள மூன்ருவது வீட்டிலேயே ஆமரநாடு திருமலை

ஐயங்காரவர்கள் வசித்துவந்தார். திருமலைஐயங்கார வர்கள் நல்ல இசைவித்துவான். அவரது சாரீரம் சன்ன மாக சில்வண்டின் ஒலிபோல இருக்கும். அனைவரும் விரும்பிக் கேட்கத் தகுந்ததாக இருக்கும். இராகம் தானம் பல்லவி நிரவல் சுரம் இவற்றை நன்றாகப் பாடும் திறன் உண்டு. இளம் வயதினராயினும் அக் காலம் அவர்போல் பாடுவார் இல்லையென்று கூற லாம்.

திருமலை ஐயங்காரவர்கள் வாசுதேவநல்லூரில் வாழ்ந்துவந்த காரணத்தாலும், அவரது இசையை அடிக்கடிக் கேட்டுவந்த காரணத்தாலும் அக்கிரகா ரத்திலுள்ள செல்வர்கள் பலரும் அன்னாரின் இசையில் விருப்பமுற்றவர்களானார்கள். உள்ளூர் வித்துவானா கிய பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் கச்சேரி செய் வதை வெகுகாலங்களாக நிறுத்திக் கொண்ட போதி லும் சைவப் பிள்ளைமார் தெருவிலுள்ள செல்வர்கள் அனைவரும் தமதூர் இசைப்புலவராகிய பல்லவி சுப் பையா பாகவதரவர்களிடமும் அவரது இசையிலும் மிகப் பற்றுள்ளவர்களாக இருந்தனர். அவ்வாறு இருக்கும் தருணத்தில் அக்கிரகாரத்திலுள்ள பெரிய செல்வர்களும், சைவப் பிள்ளைமார் தெருவிலிருக்கும் பெரிய செல்வர்களும் சந்தித்து அடிக்கடிக் கூடி அள வளாவி வருதல் வழக்கம். அது போன்றொரு நாள் அச்செல்வர்கள் பலரும் கூடிப் பற்பல செய்தி களையும் அளவளாவி வரும் நேரத்தில் உள்ளூர் வித்து வானாகிய பல்லவி சுப்பையாபாகவதரவர்கள் இசை பற்

றியும், புதிதாக வாழ்க்கை நடத்த வந்த ஆமர நாடு திருமலை ஐயங்காரவர்கள் இசை பற்றியும் பேச லாயினர். இவ்விருவரின் இசைத்திறன் பற்றி ஒரு வருக்கொருவர் வெவ்வேறு எண்ணமுடையவர்களா னார்கள். இவ்விருவரின் இசைத்திறத்தை உள்ளது உள்ளபடி அறிய வேண்டுமாயின் இவர்களிருவரும் சேர்ந்து பாடிய பிறகே அதன் நுட்பங்களும் திறனும் அறிதற்காகும் என்றெண்ணினர். பல்லவி சுப்பையா பாகவதர் அவர்கள் கச்சேரி செய்தலைப் பல ஆண்டுக ளாக நிறுத்திவிட்டபோதிலும் அவர்களின் இசைத் திறன், ஞானவளம் இவைகளைக் காணல் வேண்டி அதற்கொரு ஏற்பாடு செய்ய முனைந்தனர்.

வாசுதேவநல்லூர் அர்த்தநாரீசுரர் கோயில் கொண்டுள்ள சிவத்தலம். ஆனிமாதத்தில் பத்து நாள் திருவிழா நடக்கும். அது ஒரு பெரிய தேவஸ்தானமாத லாலும், நிரம்பிய வருமானமுள்ள கோயிலாதலாலும் திருவிழா வெகு சிறப்பாக நடைபெறும். நல்ல புகழ் பெற்ற நாதசுரவித்துவான்கள், சங்கீத வித்துவான் கள், கதாகாலட்சேப வித்துவான்கள், பரதநாட்டிய வித்துவான்கள் ஆகியோரின் கலைநிகழ்ச்சிகள் வெகு சிறப்பாக நடைபெறும். அக்காலத்தில் அக்கோயிலின் நிர்வாகத்தை நல்ல முறையில் அனைவரும் போற்றும் படி நடத்தி வந்தவர் பெரும் செல்வராகிய பெரிய ஐயாப்பிள்ளை என்ற பெரிய சொக்கலிங்கம் பிள்ளைய வர்கள் ஆவர். இவர் தர்மகர்த்தாவாக இருந்து கோ யிலைப் பேணி நடத்தி வந்த நிர்வாகத்திறமை இன்று வரை யாவராலும் போற்றப் பெறுகின்றது. ஆனி

மாதம் வழக்கம் போல் நடைபெற வேண்டிய அர்த்த நாரீசுரசுவாமி திருவிழா அண்மையில் இருந்ததால் அக்கோயில் தருமகர்த்தாவும், பல்லவி சுப்பையா பாகவதரிடம் மிகவும் அன்புடையவரும் ஆகிய பெரிய சொக்கலிங்கம்பிள்ளை அவர்கள் பல்லவி சுப்பையா பாகவதரவர்களிடம் "மாமா! தாங்கள் கச்சேரி செய்வதை நிறுத்திப் பல ஆண்டுகள் ஆகிவிட்டன. ஆயினும் எங்களைப் போன்ற இன்னும் பலரும் தங்களது கச்சேரியைக் கேட்க வேண்டுமென்ற ஆவல் மிகுதியுள்ளவர்களாக இருக்கிருர்கள். நீங்கள் வெகுநேரம் தனியாகப் பாடவேண்டாம். முதல் நாள் ஆமரநாடு திருமலை ஐயங்காரவர்கள் பாடட்டும். அதன் பிறகு தாங்களும் அந்த இராகத்தை ஆலாபித்துத் தானம் பல்லவி சுரம் முதலியவைகளைப் பாடுங்கள். ஒருவர்க்கொருவர் மாறிமாறிப் பாடுவதால் தங்களுக்குக் களைப்பும் சிரமமும் தோன்ருது. கேட்பதற்கு வெகுசுவையாக இருக்குமென்று நாங்கள் விரும்புகிருேம். இருவரும் மாறிமாறிப் பாடுவதிலே ஒரு தனி இன்பமும் காணலாம். இருவரும் இதை ஓர் இசைப்போட்டி நிகழ்ச்சி என்று எண்ணுமல், வித்துவத்தின் நுட்பத் திறமையை எங்கள் போன்றவர்களுக்கு எடுத்துக்காட்டுதற்கு உரிய ஒரு செயலாக எண்ணியே பாடல் வேண்டும். இதுபோல் மறுநாள் தாங்கள் முதலில் ஒரு இராகம் தானம் பல்லவி சுரம் பாடுதல் வேண்டும். அதனையும் இருவரும் மாறிமாறிப் பாடுதல் வேண்டும். இவ்வாறு பாடி நாங்கள் எல்லோரும் கேட்க விருப்பமுற்றிருக்கிருேம். தங்கள் விருப்பம் தெரிந்து நமது கோயில் திருவிழாவில் இரண்டு நாள் கச்சேரி

யைத் தங்களுக்கும் ஆமரநாடு திருமலை ஐயங்கார் அவர்களுக்கும் ஒதுக்கிவிட்டு ஏனைய நாட்களுக்கு வேறுஏற்பாடு செய்கிறேன். தங்கள் சம்மதம் தெரிந்து நல்லதொரு பிடில், மிருதங்கத்திற்கு ஏற்பாடு செய்கிறேன்'' என்று கூறினார். இவ்வாறு இரு இசை வித்துவான்களும் சேர்ந்து பாடுதல் ஒரு போட்டிக்குரிய நிகழ்ச்சி என்று கருதாமல் இசைக்கலையின் நுட்பங்களை ஒருவருக்கொருவர் கலந்து அதன் உண்மைகளை எடுத்துவிளக்கி கொள்ளுதல்போன்ற ஒரு நிகழ்ச்சியாகவே எண்ணியதால் இருவரும் ஒத்துக் கொண்டனர். இதன் பிறகாரம் முதல்நாள் திருமலை ஐயங்காரவர்கள் பாடலானார்கள்.

இந்த இசை நிகழ்ச்சி ஒரு முக்கிய அம்சம் பெற்றதாலும், தமக்கு இன்னும் பேரும் புகழும் வரல் வேண்டுமென்ற எண்ணத்தாலும், தாம் புதிதாக ஒரு பல்லவியைத் தயார்செய்து பாடினால் இளமையிலேயே அமைந்த தம் இசைத்திறமையை அனைவரும் மதிப்பதற்கு நல்ல வாய்ப்பாக இருக்கும் என்பதாலும் ஆமரநாடு திருமலை ஐயங்காரவர்கள் தோடி இராகத்தை ஆலாபனை செய்து அதில் தானத்தை வித்தரித்துப் பாடி பின்பு பல்லவியைத் தொடங்கினார்கள். அப்பல்லவி அக்காலத்து வித்துவான்கள் கையாண்டுவரப் பெறும் வழக்கத்திலுள்ள பல்லவியன்று. தாமே புதிதாக அமைத்த சொற்றொடர். அது வருமாறு:- ''ஆழ் கடலின் ஆலிலைமேல் பள்ளிகொண்ட பெருமான், ஊழ் வினையால் அல்லல் படும் மக்கள் துன்பம் துடைப்பான்.'' என்பது பல்லவியின் சொற்கள்.

இப்பல்லவியைத் தோடி இராகத்திலே மிசிரசாதி திருபுடைத்தாளத்திலே சுர சாகித்தியத்தோடு குறித்துள்ளதைக் காண்க.

தோடி. மிசிரசாதிதிருபுடை. ஒருலகு இரண்டுதிருதம். பதினொரு அட்சரம். நாற்பத்துநான்கு மாத்திரைக் காலங்கள். சமத்தில் எடுப்பு:-

தா மா – தா நீ ச'ா ; – ச'ா ; ரீ' ச'ா ச'ா ; – ரீ' ச'ா
ஆ ழ் க ட லின் ஆ . லி லை மேல் ப ள்

ரீ' ச'ா ; நீ | தா நீ ச'ா ; ‖
ளி கொ ண் ட பெ ரு மா ன்

ச'ா நீ – க'ா ரீ' ச'ா ; – ச ா ; ரீ' – ச'ா ச'ா நீ தா மா
வா ழ் வி னை யா ல் அ ல் லல் ப டு ம் ம க்

தா – நீ தா நீ | க'ா ரீ' ச'ா ; ‖
கள் து ன் ப ம் து டைப் பா ன்

பொதுவாகப் பல்லவி என்பது சுருக்கமான சொற்களைக் கொண்ட சொற்றொடராக இருத்தல்வேண்டும். சொற்கள் எளிமையும் பொருளும் கொண்டு மனப்பதிவையும் மனம் நெகிழும்படியான நைவளத்தையும்

தருதல் வேண்டும். பல்லவியின் சொற்றொடர்களை ஒரு இராகத்திலே தாளத்துடன் இணைத்துப் பாடும போது அது பலவிதமான இசை வின்னியாசங்களைச் செய்தற்கு இடந்தருதல் வேண்டும். இன்னும் பல்ல வியும் அதன் நிரவல்களும் தெளிவாகப் புலப்படுதற்கு உரிய ஆதிதாளத்தின் முக்காலிடமாகிற அநாகதஇடத் திற்கு அமைத்துப் பாடுதலே அக்காலத்து முறையா கும். ஆமரநாடு திருமலை ஐயங்காரவர்கள் இளம் வயதினரானபடியால் தம்முடைய இசைத்திறமை யைக் காட்டுதற்கு இது ஒரு சந்தர்ப்பம் கிடைத்த தென்றெண்ணி நீண்ட சொற்றொடர்களைச் சேர்த்தும் அக்காலம் பல்லவிநிரவல் செய்து பாடுதற்குக் கையா ளப்பெருத மிச்சிரசாதித் திருபுடைத்தாளத்தையும் எடுத்துக்கொண்டார். இப்பல்லவியைப் பாடுதல் வேண்டுமாயின் பலநாட்கள் முயன்று பயின்றிருத்தல் வேண்டும். பல்லவி சுரம் பாடுவதில் பெரும் புகழ் பெற்றிருந்த பல்லவி சுப்பையா பாகவதவரர்கள் பல் லவி சுரம் பாடுதற்குரிய தாளம் அல்லாது வழக்கிலில் லாத தாளத்தை ஏன் எடுத்துக் கையாளுகிருர் என்று சிந்தித்தார். பல்லவி சுப்பையா பாகவதவரவர் களுக்கு இத்தாளத்தைப் பற்றிச் சிறிதும் ஐயமில்லை. இதுபோன்ற எந்தத்தாளத்தையும் அவர் கையாண்டு தமது திறத்தை வெகு நன்ருக விளக்கிவிடுவார். இது அவர்களுக்கு மிக எளிமை. அவர் புதுப்புதுத் தாளங் களையே உருவாக்கிவிடுவார். ஆனால் ஆமரநாடு திரு மலை ஐயங்கார் அவர்கள் எடுத்துக்கொண்ட நீண்ட சொற்களையுடைய வரியை மனதில் பதியச்செய்தல் அவசியமாயிற்று.

ஆமரநாடு திருமலேஐயங்கார் அவர்கள் இவ்வாறு பல்லவியைப் பாடியதும், அப்பல்லவியைப் பல்லவி சுப்பையாபாகவதவர்கள்ஏற்றுப் பாடவேண்டியநேரம் வந்தது. உடனே பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் திருமலே ஐயங்காரவர்களே நோக்கி இப்பல்லவியின் சொற்றொடரை மட்டும் ஒருமுறை கூறும்படி கேட்டார்கள். அச்சொற்றொடரின் வரி நீண்ட வடிவமாதலால் ஒரு முறைக்கு இரு முறைகள் கூறச்செய்து அதைத் தம் மனதில் நிறுத்திக் கொண்டு அதன் பிறகு அப்பல்லவியை மிக அழகாக நிரவல் செய்து அவையோர் களிக்கும்படிப் பாடினார்கள். அன்று பக்க வாத்தியமாக திருநெல்வேலி சியாமளபாகவதர் பிடிலும், திருநெல்வேலி கோமதியின் மிருதங்கமும் ஏற்பாடாகி இருந்தது. மிருதங்கம் கோமதி அவர்கள் மிக இளம் வயதினர். அப்பொழுதுதான் அவர் மிருதங்க வாத்தியத்தில் தேர்ச்சி பெற்று கச்சேரிகளுக்கு வாசித்துப் புகழ்பெற்று வரக்கூடிய சமயம். அவருடைய மிருதங்க வாசிப்பானது "மீட்டு, சாபு, மோரா, புரட்டல், டேகா, பரண்" ஆகியவை சுநாதத்துடன் கணகணவென்று ஒலித்து விறுவிறுப்பாகவும் சுருசுருப்பாகவும் பேசும். அவருடைய மிருதங்க வாசிப்பில் அனைவருக்கும் ஈடுபாடு உண்டு. அன்றைய தினம் நடந்த கச்சேரி மிகவும் நன்றாகவே இருந்தது. அனைவரும் மிக்க மகிழ்ச்சியுற்றனர். ஆனால் மாமாவாகிய பல்லவி சுப்பையா பாகவதரவர்களிடம் அபிமான முள்ளவர்கள் சிறிது வருத்தமடைந்தனர். ஏனெனின் ஆமரநாடு திருமலே ஐயங்கார் அவர்கள் பாடிவிட்டவுடன் அப்பல்லவியை மாமா அவர்கள் உடனே

தாம் ஏற்றுப் பாடாமல் அதன் சொற்றொடர்களை இரு முறை கேட்டபடியால் அது ஒரு திறக் குறைவுபோல எண்ணிவிட்டனர். உடனே பல்லவி சுப்பையா பாகவதரவர்களிடம் மிகவும் பற்றுதலுடைய சைவப் பிள்ளைமார்களில் சிலர் மாமா அவர்களை நோக்கி "மாமா! நாளை நீங்கள் யாரும் கேள்விப்படாத நூதனமான ஒரு தாளத்திலே பல்லவி யொன்றைப் பாடி அனைவரும் வியக்கும்படி செய்தல் வேண்டும். அப்பொழுது தான் எங்கள் மனது சமாதானம் அடையும். இன்று திருமலை ஐயங்கார் அவர்கள் பாடிய அப்பல்லவியை இருமுறை கூறும்படி கேட்டீர்கள். எங்களுக்கு அது ஒரு குறைபோலத் தோன்றுகிறது" என்று கூறினர்.

பொதுவாகப் பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் தம்முடன் சேர்ந்து பாடுவோரை அல்லது வாசிப்போரைக் குறைவுபடுத்துவதோ, அல்லது அவருக்குக் கிடைக்கும் மதிப்பின் தரத்தைக் குறைப்பதோ, தாம் போட்டிப்போட்டுக்கொண்டு தமது திறனை அனைவரும் அறிதல் வேண்டுமென்று நினைத்து செயல் படுத்தும் குணத்தையோ உடையவரல்லர். ஆதலால் அவர்கள் கூறிய சொல்லைக் காதில் வாங்கிக்கொள்ளவில்லை. மறுநாள் பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் முதலிற் பாடவேண்டிய முறை வந்தது. இசையன்பர்களனைவரும் மாமா அவர்கள் இன்று என்ன பல்லவி பாடப்போகிறார்களோ! புதுமை தோன்ற ஏதேனும் ஒரு தாளத்தை எடுத்துக் கொள்கிறார்களோ! அல்லது சாதாரணமாகவே பாடிவிடுகிறார்

களோ தெரியவில்லை என்று அவர்கள் பாடுவதை மிகவும் கூர்ந்து கவனிக்கலானார்கள். அவ்விருவரும் பாடும்போது இசை அன்பர்கள் அனைவரும் தங்களுக்குள் போட்டிப் போட்டுக்கொண்டு இசை நிகழ்ச்சியை நடத்துவதுபோன்றே எண்ணினர். பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் தம்முடன் பாடும் இளைஞரான திருமலை ஐயங்கார் இன்னும் நல்ல பேரும் புகழும் அடைய வேண்டியவராதலாலும், இசையன்பர்கள் அனைவரும் அவர்பால் நல்லெண்ணங்கொண்டு அவரை நன்கு மதித்தல் வேண்டும் என்ற காரணத்தாலும், எளிதான முறையிலேயே பல்லவி இருத்தல் வேண்டுமென்றெண்ணி எழுத்துக்கள் மிகச்சுருக்கமாய் வருவது போன்றும், சொற்கள் மனதில் எளிமையாகப் பதிவு செய்ய உதவுவது போலுமுள்ள "கூடார கிரிவேலன் - குஞ்சரி மணவாளன்" என்ற பல்லவியைப் பைரவி இராகத்திலே பாடினார்கள்.

இப்பல்லவியானது "கண்டசாய்ப்பும் மிச்சிர சாய்ப்பும்" ஆகிய இவ்விரண்டு தாளங்களும் கலந்து வரும் உருவம் ஆகும். முதலில் 'தக - த - கிட' என்ற இரண்டரை அட்சரங்களும், பின்பு 'தகதக - தகிட' என்ற மூன்றரை அட்சரங்களும் சேர்ந்து முறையே வரிசைபெற்று ஆறு அட்சரங்களாகியும், இருபத்து நான்கு மாத்திரைக் காலங்களாகியும் இது உருப்பெற்றது ஆகும். இத்தாளம் கண்டசாய்ப்பு மிச்சிர சாய்ப்பு ஆகிய இரண்டு தாளங்களின் கூட்டு ஆகையால் இதற்குத் "துவிஜம்" என்ற பெயரைப் பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் பின்பு இட்டனர். 'துவி

ஜம்' என்றால் இரண்டிலிருந்து பிறந்தது. அதாவது இரண்டு தாளங்களின் கூட்டு எனப்பொருள்.

பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் பாடிய பல்லவியின் சொற்றொடர்களும் அதன்தாளமும் அப்பல்லவியின் இசைஅமைப்பும் வருமாறு:-

"இராகம்: பைரவி" "தாளம்: துவிஜம்"

தகதக = தக - தகதக |
தகதக - தகதக = தக - தகதக ||

; ரீ' = ச'ா ; நீ ||
. கூ டா . ர

; தா பா ; = பா , நி த ப ||
. கி ரி . வே . . ல ன்

மா பா = த+ா நீ நி த+ |
. குஞ் ச . ரி .

தா + த + நி ச'ா, ரி = ச' நி த ப ம ப || த + நி
. ம . ண. அ வா . . . ள ன் . .

வாசுதேவ நல்லூரின் வடபால் ஏழாவது மைலில் சிவகிரி என்ற ஓர் ஊருண்டு. அக்காலத்தில் அது ஒரு சமீன். அங்கு கூடாரப் பாறை என்ற ஒரு பறம்பு உண்டு. அப்பறம்பின் மேல் முருகன் கோயில் இருக்கிறது. அக்கோயிலில் ஆண்டுதோறும் சிறப்பாகத் திருவிழா நடைபெறும். அவ்வூரில் கோயில்கொண்டிருக்கும் முருகன் பேரில் இப்பல்லவியானது எளிமையான சொற்களால் அமைத்ததாகும். "கூடாரகிரி வேலன் - குஞ்சரிமணவாளன்" என்ற இச்சொற்

ருடரை ஒருமுறை கேட்டாலும் ஒரு குழந்தைக்கும் மனப்பதிவு ஆகிவிடும். இச்சொற்ருெடர் எளிமை பெற்றது போலத் தாளமும் எளிமையாக இருத்தல் வேண்டும். அத்தாளமும் புதிதான முறையில் இருத்தல் வேண்டுமென்று பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் எண்ணிஞர்கள். முன்தினம் ஆமரநாடு திருமலை ஐயங்காரவர்கள் வழக்கிலில்லாத பதிஞெரு அட்சரங் கொண்ட மிசிரசாதி திருபுடை என்ற தாளத்தை எடுத்துக்கொண்டபடியால் அதுபோன்று தாமும் புதிதான தாளமாகவும் ஆனல் அத்தாளம் வழக்கிலுள்ளதாகவும் எடுத்து ஆளுதல் வேண்டுமென்று தீர்மானித்தார். இசை உலகிலே 'தக - தகிட' என்ற ஐந்தட்சரங்கொண்ட கண்டசாய்ப்பு (ஜம்பை) என்ற தாளத்தை யாவரும் அறிவர். இதுபோல 'தகிட - தகதக' என்ற ஏழு அட்சரங்கொண்ட மிச்சிர சாய்ப்பு என்ற தாளத்தையும் யாவரும் அறிவர். இசைவித்துவான்களுக்கு இவ்விரண்டு தாளமும் நன்கு கைவரப் பெற்றனவேயாகும். எனவே இவ்விரண்டு தாளத்தையும் சேர்த்து மேலே கூறிய பல்லவியைப் பாடிஞர்கள். ஆனல் இத்தாளத்தில் மிச்சிரசாய்ப்பு ஆகிற அதன் ஏழு அட்சரங்களை 'தகிட - தகதக' என்று (3+4=7) ஏழாகப் போடுதலே மரபு, இங்கு பல்லவியின் எளிமை பற்றி 'தகதக - தகிட' என்று (4+3=7) ஏழாக மாற்றிப் போட்டு பல்லவி பாடப்பெற்றது. இரண்டு தாளத்தையும் கலந்து முறைப்படுத்தி வரப்பெற்றதால் இத்தாளத்திற்குத் 'துவிஜம்' என்ற பெயரிடலாயிற்று.

மேலேகூறிய 'துவிஜம்' என்ற தாளத்தில் இந்தப் பல்லவியை இராகபாவம் ததும்பத்தாளக்கட்டுத் தளராமல் கனநய மார்க்கத்தை அனுசரித்து வெகு நன்ருக இப்பல்லவி நிரவல் செய்யப் பெற்றது. மிரு தங்க வித்துவான் கோமதி என்பவர் நன்கு வாசிப்ப வராயினும் இசை உலகிற்குப் புதிது ஆகையால் இத் தாளத்தின் வகை புரிவதற்கியலாமல் சற்றுத் திகைத் தார். இதை அறிந்த பல்லவி சுப்பையா பாகவதரவர் கள் மிருதங்கம் கோமதியிடம் சற்று நெருங்கி ரூபக தாளமாகிற ஆறு அட்சரத்திற்குத் தக்கவாறு கதிகளை யும் நடைகளையும் பேதம் செய்து வாசிக்கலாமே எனக் கூறினர். இவ்விபரங் கூறியதும் மிருதங்கம் கோமதி அவர்கள் தமது கையின் சுநாதத்தால் மிரு தங்கத்தில் பற்பல கதிகளும் நடைகளும் செய்து அனை வரும் வியக்குமாறு வாசித்தார். பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் பாடிவிட்டதும் ஆமரநாடு திருமலை ஐயங்கார் அவர்கள் பாடவேண்டிய முறை வந்தது. ஆனல் அவர்களுக்குத் தாளத்தின் வகையும் அதன் விபரமும் புரிந்து கொள்ள இயலவில்லை. இத்தாளம் வழக்கத்திலுள்ளதே ஆயினும் ஐந்தட்சரத்தையும் ஏழட்சரத்தையும் முறையே மாறிமாறிப் போடுதற்குக் கையில் தாளம் நிற்கவில்லை. இத்தாளம் போடுவதில் பெரிய குழப்பம் அடைந்துவிட்டார். அவரால் பாட இயலவில்லை. உடனே பல்லவி சுப்பையா பாகவத ரவர்களைப் பார்த்து இது என்ன தாளம்! புரிய வில்லையே! இத்தாளம் கையில் நிற்கவில்லையே என் ருர். அவரது முகம் வாட்டமுற்றதை அறிந்த பல்லவி சுப்பையா பாகவதரவர்களின் மனம் இளகி விட்டது.

இத்தாளம் சாதாரணமாகப் போடாலாமென்றுஎண்ணின் ஞேமே, இது எளிதாக அவருக்குக் கைவரவில்லேயே என்று சிறிது இரக்கமுற்ருர்கள். உடனே திருமலே ஐயங்கார் அவர்களே நோக்கி முதலில் கண்டசாய்ப்பும் (சம்பை) பின்பு மிச்சிரசாய்ப்புமாகப் போடல் வேண் டும். இது எளிமைதானே. சற்று நிதானப்படுத்திக் கொண்டு போட்டுப் பாடிஞல் இது ஒன்றும் பிரமாத மில்லேயே என்று கூறிஞர்கள். திருமலே ஐயங்காரவர் கள் எவ்வளவு முயன்றும் இப்பல்லவியைப் பாடுதற்கு இயலவில்லே. ஆயினும் கச்சேரி நன்ருகவே இருந்தது. கச்சேரி நடந்து முடிந்ததும் மாமா அவர்களிடம் அனே வருக்கும் அளவிட முடியாத அன்புப் பெருக்கு ஏற் பட்டது. பல ஆண்டுக்காலங்களாக மாமா அவர்கள் பாடுந் தொழிலே விட்டுவிட்டாலும் அன்று அவர்கள் பாடியதில் நல்ல விறுவிறுப்பும், சாரீர நயமும், கணீ ரென்ற குரலும், இசை நுட்பத்திறனும் சிறந்து விளங் கின. அன்பர்களனேவரும் மாமாவிடம் தங்களுக்குச் சற்று வயதாகிவிட்டதே யன்றி தங்களது சாரீரம் இன் னும் இளமையாகவே இருக்கின்றது. தங்களது பாட் டுச் சிறுதும் தளரவில்லே. கன நயப் பகுதிகள் பிகுசிகு வாக இருந்தன. சாரீரம் துரிதமாகப் பேசுவதில் சற் றும் தளர்ச்சியில்லே. தங்களுடைய இசைத்திறன் மிகவும் வியக்கத்தக்க முறையில் உள்ளது. இன்னும் தாங்கள் கச்சேரி செய்வதை ஏற்றுக்கொண்டு எல் லோரையும் களிப்பிக்கலாம். தாங்கள் பாடுதலே அறவே நிறுத்திக்கொண்டு விட்டீர்களே என்று வருந் தினர்.

எல்லாம் முடிந்து வீட்டிற்கு வந்ததும் திருமலை ஐயங்கார் அவர்கள் பல்லவி சுப்பையா பாகவதரவர் கள் வீட்டிற்கு வந்து வணக்கம் தெரிவித்து தாங்கள் பல ஆண்டுக் காலங்களாகப் பாடுந்தொழிலை நிறுத்தி விட்டீர்கள். நான் நடைமுறையிலுள்ள வழக்க மான பல்லவிக்குரிய தாளத்திலே பல்லவி பாடாமல் வழக்கத்தில் இல்லாத தாளத்தை எடுத்துக்கொண்டு பல்லவியை அமைத்து விட்டேன். அதனுல் எனது திறன் நல்ல முறையில் விளங்கி அனைவரும் என்னை மதித்தற்கு ஓர் இடமுண்டாகுமென எண்ணிவிட் டேன். அது எனது பெரும் பிழையாகும். தாங்கள் பாடிய பல்லவி எளிமையாயினும் அத்தாளத்தைக் கையில் நிலைநிறுத்திக் கொண்டு பாட இயலவில்லை. எனது கலைக் கர்வம் அடங்கிற்று, இனி எப்பொழுதே னும் இம்மாதிரியான நிகழ்ச்சிகள் ஏற்பட்டு அதில் கலந்துகொள்ள வேண்டி வந்தால், பெருமை தேடிக் கொள்ள வேண்டும் என்பதற்காக அவசரப்பட்டு புதுமுறைகளைக் கையாள மாட்டேன். நான் இவ் வாறு பாடிய தவறுதலைத் தாங்கள் மன்னித்து ஆசி கூறுங்கள் என்று நாக்குழறத் தட்டுத் தடுமாறிய சொற் களுடன் வருந்தி வணங்கினுர்கள்.

பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் திருமலை ஐயங்காரவர்களுக்குப் பலவிதமாக ஆறுதல் மொழிந்து இசைபற்றிய பல நுணுக்கங்களையும் எடுத்து விளக்கி னுர்கள். திருமலை ஐயங்காரவர்கள் வாசுதேவ நல்லூ ரில் இருந்த நாள்வரை ஒவ்வொருநாளும் பல்லவி சுப்பையா பாகவதரவர்களிடம் அளவளாவி இசை

சம்பந்தமான இராகம் பாடும்வகை, தானம் பாடும் வகை, பல்லவி, நிரவல் செய்யும்வகை, சுரங்கள் பாடும்வகை இவ் வொவ்வொன்றின் பலப்பல நுட்பங் கள் ஆகியவற்றை அறிந்து கைவரப் பெற்றூர். அத் துடன் இசை சம்பந்தமாய் இராகம், தானம், பல்லவி, சுரம் இவைகளில் எது தனக்குக் கைவரப்பெற்றதோ அதை வித்தாரம் செய்து அதிலுள்ள நுட்பப் பகுதி களையே வெளிப்படுத்துதல் வேண்டுமென்றும், புதிது புதிதாக ஏதோ கற்பனைசெய்து அது பூரணமாகாத நிலையில் ஒன்றை இசைசம்பந்தமாய்ச் செய்வது நல்ல தல்லவென்றும், அப்படிச் செய்வதனுல் தனக்கும் கேட்பவருக்கும் யாதொருபயனும் கிட்டாது என்றும் அவருக்குக்கூறி ஆசி வழங்கினுர்கள். பல்லவி சுப் பையாபாகவதரவர்கள் கூறிய இவ்விபரங்களைத் திரு மலை ஐயங்காரவர்கள் கருவூலம் போல் பாதுகாத்து அம்முறைப்படியே இசையை நன்முறையிற் பயின்று அவரிருக்குமட்டும் அவ்வாறே செயலாற்றி வந் தார்கள்.

# 12

## வாசுதேவநல்லூர் பல்லவி சுப்பையா பாகவதர் அவர்கள் காரைக்குடி வீணைசகோதரர்கள் ஆகிய இவ்விருவர்களின் சந்திப்பும் இசை நிகழ்ச்சி பற்றிய செய்திகளும்.

முப்பது ஆண்டுகளுக்கும் முன்பு வீணைக்கச்சேரி என்றால் காரைக்குடி வீணை சகோதரர்களே முன்னணியில் நிற்பார்கள். அவர்களை அறியாதார் யாருமில்லை. மூத்தவரின் பெயர் சுப்பராம ஐயர். அவரை ஐயன் என்றும் அழைப்பதுண்டு. இளையவரின் பெயர் சாம்பசிவ ஐயர். அவர்கள் காலத்தில் அவ்விருவரும் சேர்ந்து வீணைவாசித்துக் கேட்போரை மெய் மறக்கச் செய்துவிடுவர். அவர்களைப் போல அதுவரை யாரும் வீணை வாசித்ததில்லை 'யென்று ரசிகப் பெருமக்கள் அனைவரும் அவர்களைக் கொண்டாடினர். அவர்கள் ஏழு தலைமுறையாகவே சங்கீதப் பரம்பரையின் வழியில் வருபவர்கள். சங்கீதமென்பதும் கருவியில்

வீணையும் அவர்களின் பரம்பரைசொத்து. அவர்களின் தகப்பனார் காலம்வரை யாவரும் புதுக்கோட்டை சமஸ்தானத்தின் ஆஸ்தான வித்துவான்களாக இருந்து அலங்கரித்தவர்கள். அவர்களது பூர்வீகம் புதுக்கோட்டையின் சமீபத்துள்ள திருக்கோகர்ண மாகும். அவர்களது வீணை இசையில் மயங்காதோர் யாருமில்லை. அவர்களது கச்சேரிகளுக்குப் பெரும் பாலும் புதுக்கோட்டை தக்ஷிணாமூர்த்திப் பிள்ளையவர் களே பக்கவாத்தியமாக மிருதங்கம் வாசித்து வருதல் வழக்கம். அடுத்தபடியாக அழகநம்பியா பிள்ளையவர் கள், சிறுபான்மை காரைக்குடி முத்துவய்யர், மதுரை ராஜு, மதுரை துரைச்சாமிபிள்ளை, திருநெல்வேலி பைரவம் பிள்ளை முதலியவர்களாவர்.

மூத்தவரான திரு. சுப்பராம ஐயரவர்கள் வீணை வாசிக்கும்போதே வீணையுடன் சேர்ந்து அற்புதமாய்ப் பாடுவார்கள். அது தேனும் பாலும் கலந்தாற்போல காதிற்கு மிகச்சுவையாக இருக்கும். இசைக்குச் சிகர மான இராகம் - தானம் — பல்லவி - நிரவல் - சுரம் என்ப தனை வீணையில் வாசித்து நிர்வாகம் செய்வதில் அவர் களைப் போல் அவர்கள் காலத்தில் யாருமில்லை. அக் கம் பக்கத்திலுள்ள எல்லா இசைவித்துவான்களும் அவர்களது வீட்டிலேயே தங்கி எப்பொழும் இசை சம்பந்தமான சொற்களே பேசப்பட்டுவரும். ஒவ் வொருதினமும் அவர்கள் வீடு வித்துவத்சதசாகவே காட்சி பெற்றுவரும். அக்காலத்தில் அவ்விரு வீணை சகோதரர்களின் கியாதி எங்கும் பரவி இருந்தது. வீணைவாசிப்பில் மகாவித்துவானும் அபாரக்கியாதியும்

பெற்ற திரு. சுப்பராம ஐயரவர்களிடம் நான் (V. S. கோமதிசங்கரஐயர்) சில ஆண்டுகள் குருகுல வாசம் செய்யநேர்ந்தது. 1928 ஆம் ஆண்டு முதல் 1930ஆம் ஆண்டுவரை மூன்றுண்டுகள் அவர்கள் வீட்டிலேயே தங்கி வீணை பயின்று வந்தேன்.

எனது தகப்பஞராகிய வாசுதேவநல்லூர் பிரம்மஸ்ரீ சுப்பையா பாகவதவரவர்கள் சங்கீதவித்வைதயில் நற்றிறம் வாய்ந்தவர். கச்சேரி செய்வதிலும், போதஞசக்தியிலும், கற்பனைத்திறத்திலும் அவரை வெல்லுதல் இயலாது. அவர் இராகம் தானம் - பல்லவி - நிரவல் – சுரம் பாடுவதில் வெகு திறமைசாலியாகையால் அவரைப் பல்லவி சுப்பையா பாகவதரென்றே அழைப்பர். அவர் வையை மகாவைத்தியநாத சிவனவர்களின் பிரதம மாணுக்கர். அவர் வாய்ப்பாட்டு மட்டுமின்றி பிடில் வாசிப்பிலும் தேர்ந்தவர். சிறுவயது முதலே இசையின் நுட்பங்களை எனக்குப் போதித்து ஏழு(7) வயது முதல் என்னைக் கச்சேரிக்குத் தயார் செய்தவர். கல்லிடைக்குறிச்சி வேதாந்த பாகவதர் ஸ்ரீவில்லிபுத்தூரைச் சேர்ந்த மடவிளாகம் முத்தையா பாகவதர், (இவர் சேற்றூர் ஜமீன்தாராகச் சிறிதுகாலம் விளங்கிஞர்.) செங்கோட்டை சுப்பையா பாகவதர், அரிகேசவநல்லூர் முத்தையா பாகவதர், கரிவலம் வந்தநல்லூர் பொன்னம்மாள் ஆகிய அவர்களுக்குப் "பல்லவி – நிரவல் – சுரம்" பாடுவதின் திறமைகளைப் போதித்தவர். அக்காலத்தில் இசை வித்துவான்கள் யாவருக்கும் அவர்களிடம் அதிக மதிப்பும் பயபக்தியுமுண்டு. திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள எல்லா இசை

தனர். அப்பொழுது எனது தகப்பனாராகிய பல்லவி சுப்பையாபாகவதரவர்கள் அக்காலத்திய வித்துவான் களின் இசைக்கலைத் திறமைகளைப்பற்றி வெகுவாக எடுத்துரைத்து வந்தார்கள்.

அக்காலத்திலுள்ள வாய்ப்பாட்டு வித்துவான்கள் அவர்களுடைய திறமைகள், பிடில் வித்துவான்கள் அவர்களுடைய திறமைகள், நாதசுர வித்துவான்கள் அவர்களுடைய திறமைகள் முதலியவற்றைக் கூறியது டன் வீணையில்வல்லுநர்களான திருவனந்தபுரம் வீணை கல்யாணகிருஷ்ணபாகவதர், அவரின் தம்பி வீணை இராமச்சந்திர பாகவதர், மைசூர் வீணைசேஷண்ணா, மாயூரம் வீணை வைத்தியநாதஐயர் ஆகிய அவர் களது வீணைவாசிப்பைத் தான் பன்முறையும் கேட்டிருப்பதாகவும் அவர்களின் செயலாற்றல்களை யும், அற்புதமான கற்பனைத் திறங்களையும், வீணை வாசிப்பதின் கை இலாகவங்களையும், இசையினுள் பொதிந்துள்ள பல நுட்பங்களையும் எடுத்து விளக்கிக் கூறிவந்தார்கள்.

அப்பொழுது வீணைசகோதரர்களில் இளையவரான திரு. சாம்பசிவ ஐயரவர்கள் சிறிது படபடப்போடு கேலிகலந்த புன்னகையுடன் பல்லவி சுப்பையாபாக வதவர்களை நோக்கி நாங்கள் சிறுவயதாக இருக்கும் காலத்து எங்களது தகப்பனார் அவர்களும் அக்காலத் திய வித்துவான்கள் இசை சம்பந்தமாக அப்படிச் செய்தார்கள் இப்படிச்செய்தார்கள் என்று வானளாவப் பேசி வர்ணிப்பார்கள். இன்னும் வயதுவந்த பல

இசை வித்துவான்களும் அவ்வாறே கூறிவருதலை நாங்கள் அடிக்கடி கேட்டிருக்கிறோம்! ஆனால் முன்னோர்களின் கற்பனைத்திறனின் வகைகளென்ன! அவர்கள் செய்த சாகஸச் செயல்கள் யாவை? எங்கெங்கு அவர்களின் அரிய பெரிய செயல்கள் வெளிப்பட்டன என்பதைத் தாம் பாடி நிரூபித்துக் காட்டியதில்லை. இவ்வாறு கூறுபவர்களிடம் எங்களுக்கு விளங்குவது போலப் பாடிக் காண்பித்து இவ்விஷயங்களை விளக்குங்கள் என்று கூறினால் அவர்கள் அதற்குப் பதிலே துங்கூறுது அப்படியப்படியே நழுவிவிடுகின்றனர். தாங்களும் அதுபோலவே நமது காலத்திற்கு முந்திய இசை வித்துவான்களைப் பற்றிப் புகழ்ந்து பேசுகிறீர்கள். அக்காலத்திய வித்துவான்கள் இக்காலத்திய வித்துவான்கள் செய்யாத எதனைத் திறம்படச் செய்து விட்டனர் என்பதைப் பாடிக் காண்பித்து அதனை நிரூபித்தால் அவர்கள் இசை சம்பந்தமாகச் செய்த திறங்களை நம்புவதற்கு ஏது உண்டாகும். இப்பொழுது பேசி வரப்பெறும் இசைசம்பந்தமான இவ்விஷயங்களை எடுத்து விளக்கிக் கற்பனைத் திறத்தின் அபாரமான சக்தியைப் பாடிக்காண்பித்து நிரூபிக்காவிடில் தங்களது பேச்சும் ஒருபொழுதுபோக்குப் பேச்சாகவே இருக்கும். எனவே முன்னோர்கள் இசைசம்பந்தமாகச் செய்த வெகு சாமார்த்தியமான அம்சங்களில் ஏதேனும் ஒன்றை எடுத்து நிரூபித்துக் காட்டுங்கள். அதன் மூலம் எங்களுக்கு ஓர் நல்லெண்ணம் முன்னோர்கள்பால் உண்டாகுமென்று கூறினார்கள்.

வீணை சகோதரர்களில் இளையவரான திரு. சாம்ப சிவஐயர் அவர்கள் அவ்வாறு கூறியதும் பல்லவி சுப் பையாபாகவதராகிய எனதுதகப்பனுரவர்கள் ஆஹா! தாங்கள் கூறுவது மிகவும் சரி. அவ்வாறு பாடி நிரு பித்துக் காண்பித்து அதனை விளக்குவதுதான் உசித மாகும். முன்னோர்கள் எதைச் செய்தார்கள், எப்படிச் செய்தார்கள், அவர்கள் செய்த கற்பனைத்திறத்தின் சிறப்பு யாது இசையில் எங்கெங்கு அதுவெளிப்பட்டது என்றுஅதனைக்கூறுவதைவிட நானே எனது கற்பனைத் திறத்தினை எடுத்து விளக்குகிறேன். இதிலிருந்தாவது முன்னோர்களின் செயலாற்றல்கள் எப்படி இருந்திருக் கும் என்பதை ஊகித்துப்பார்க்கலாம் என்று கூறிவிட்டு, உடனே அந்த இடத்திலேயே சங்கராபரண இரா கத்தை விரிவாக ஆலாபனை செய்து அதில் தானத் தைப் பாடிவிட்டுப் பிறகு ஒரு பல்லவியைப் பாடினுர் கள். அப்பல்லவியை வெகு வித்தாரமாக நிரவல் செய்துவிட்டு சுரங்களை அஜதாட்டி, கஜதாட்டி, அசுவதாட்டி என்ற எட்டுவகை நடையிலும் கற்பனை பொழியப் பாடினுர்கள். இவ்வாறு கானம் செய்வதைக் கேட்ட வீணை சகோதரர்கள் இருவரும் உண்மையில் பிரமித்து மிரண்டுவிட்டார்கள். அதுவரை என் தகப் பனுராகிய பல்லவி சுப்பையா பாகவதரவர்களின் பாட்டை நன்ருக நான் கேட்டவனில்லை. எனக்கு அவர்கள் பாடப்பாட வெகு ஆச்சிரியமாக இருந்தது.

காரைக்குடி வீணை சகோதரர்களுக்குப் பல்லவிக் குரிய தாளம் பிடிப்படவில்லை, புரியவில்லை. தாளம் போடுதலை நேரில்கண்டும் அதைத்தொடர்ந்து போட

இயலவில்லை. பல்லவி சுப்பையாபாகவதரவர்களின் சாரீரம் ஐந்துகட்டை (5) சுருதியுடையது. கணீ ரென்றகுரல், தாளக்கட்டு, பாட்டில் கனநயம், ஒவ் வொரு இடமும் பிருசிருவான அமட்டல், நற்றிறம் அமைந்த வேலைப்பாடு ஆகியவற்றால் கேட்போரைத் தலையாட்ட வைத்துவிடும். பல்லவி, சுரம், பாடும்போது கடல்மடை திறந்துவிட்டாற்போல தட்டுத் தடங்க லின்றி யோசனையாதுமின்றி மழைபொழிவதுபோல் வெகு கம்பீரமாக இசையொலியானது இன்பத்துடன் காதில் ஒலிக்கும். எனவே அவர்கள் பாட்டிலே யாவரும் மயக்குறுவர் என்பதில் ஐயமில்லை. அவர் கச்சேரிக ளுக்குச்செல்லுவதை நிறுத்தி பலஆண்டுகள் ஆகிவிட் டாலும் அன்றையதினம் அவர் பாடுவதின் திறமானது தொடர்ந்து சாதகம் செய்பவர்களின் எளிமையைப் பெற்று இருந்தது. பாட்டு பிரமாதமாய்க் களைகட்டி விட்டது. ஊரே கூடிவிட்டது. காலை எட்டரை ($8\frac{1}{2}$) மணி முதல் பதினொரு (11) மணிவரை தம்புராவின்றி, பக்கவாத்தியமாகிய பிடில் மிருதங்கமின்றி, இரண் டரை மணிநேரக் கச்சேரியே நடந்துவிட்டது. (இக் காலம் நல்ல பக்கவாத்தியங்களில்லையென்றால் அவர் களது இசை எடுபடுவதில்லை. கச்சேரி வாய்க்கவில்லை யாயின் பக்கவாத்தியம் போதாது என்று அவர்கள் மேல் பழியைச் சுமத்துவாரும் உளர். ஆனால் சுருதியோ பக்கவாத்தியமோ இன்றி எடுத்த எடுப்பிலேயே பாடி ரஞ்சிக்கச் செய்வோரும் இக்காலத்தில் சிலர் இருக்கிறார்கள்.) அதனைக்கேட்ட காரைக்குடி வீணை சகோதரர்கள் இருவரும் மிகபயபக்தியுடன் அவர்கள் பாடிவந்த இராகம் - தானம் - பல்லவி - நிரவல் - சுரம்

அவற்றின் கற்பனைத் திறத்தின் சிறப்புமிக்க அம்சங்களில் ஈடுபட்டு மனமிளகி இதுவல்லவோ சங்கீதம், இது வன்றோ கேட்கதக்கது. இதுவல்லவோ இசைவல்லுநர்களுக்குரிய இசைவிருந்து, இதுவன்றோ கலைத் திறன் என்று புகழ்ந்து புகழ்ந்து கொண்டாடினார்கள்.

காரைக்குடி வீணை சகோதரர்களும் அங்கு குழுமியிருந்த நூற்றுக்கணக்கான சங்கீத ரசிகர்களும் சற்று நேரம் மௌனமாக இருந்தனர். அப்பொழுது வீணை சகோதரர்களில் மூத்தவரான திரு. சுப்பராம ஐயரவர்கள் பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் பாடிய பல்லவியின் தாளசம்பந்தமான சில அம்சங்களைக் கேட்டார்கள். அவைவருமாறு :—

கேள்வி: சுப்பராமஐயர்: இது என்ன தாளம்?

பதில்: பல்லவி சுப்பையாபாகவதர்: இது பிரம்ம தாளம்.

கேள்வி: சுப்பராமஐயர்: அது எந்தநூலில் உள்ளது?

பதில்: பல்லவி சுப்பையாபாகவதர்: இது விருத்த இரத்னகரத்திலுள்ளது.

கேள்வி: சுப்பராமஐயர்: அப்படியென்றால் அந்நூல் எங்குள்ளது?

பதில்: பல்லவி சுப்பையாபாகவதர்: (தமது நெஞ்சை — ஹ்ருதயத்தைத் தொட்டுக்காட்டி) அந்நூல் இங்குள்ளது.

கேள்வி: சுப்பராம ஐயர்: அப்படியென்றால் புரியவில்லையே! புரியும்படி சொல்லுங்கள்.

பதில்: சுப்பையாபாகவதர்: விருத்தம் என்றால் இருதயம் அதாவது நெஞ்சு. அந்த இருதயத்திலே கடல் போன்ற எண்ணங்கள் உண்டாகின்றன. அவ்வெண்ணங்கள் எல்லாம் கடலிலுள்ள விலையில்லாக் கருப்பொருள்கள். உலகிலுள்ள எல்லாவிதக் கலைகளின் நுட்பங்களும் கடல் போன்ற இருதயத்துள் அடங்கிக் கிடக்கின்றன. அக்கலை சம்பந்தமான ஏதேனும் ஒரு நுட்பமாகிற பொருள் அங்கிருந்து வெளிப்படும்போது அது அவரவர்கள் எண்ணத்தால் உதித்த கற்பனைத் திறமாகிறது. எனவே இப்பொழுது பாடப்பட்ட பல்லவியின் அந்தத்தாளமானது இருதயக் கடலாகிற நூலிலிருந்து வித்தியாரூபமாக கணநேரத்திற்குள் உதயமான கற்பனைத்திறமமைந்த சிறப்புற்ற தாளமாகும்.

கேள்வி: சுப்பராமஐயர்: "வெகு ஆச்சரியப்பட்டு" அது சரி இத்தாளமானது கற்பனைத் திறத்தால் உதிக்கப் பெற்றது என்பதை ஒத்துக்கொள்கிறேன். ஆனால் இதற்குப் பிரம்மதாளம் என்று பெயர் கூறியதன் காரணம் யாது? அப்பெயர் காரணத்துடன் கற்பனை செய்யப் பெற்றதா! அல்லது ஏதோ ஒரு பெயர் கூறல் வேண்டுமென்று கூறப்பெற்றதா!

பதில்: பல்லவி சுப்பையா பாகவதரவர்கள்:— இத்தாளத்திற்குத் திடீரென்று பெயர் உதித்ததும் காரணகாரியத்துடனே யாகும். இப்பெயர் சிந்தித்துப் பார்த்துக் கூறப் பெற்றதல்ல. முன்னோர்களின் வாக்குகளும் எண்ணங்களும் சிலநேரம் யோசனையின்றிக் கூறப்பெற்றாலும் அது பின்னவர்களுக்குக் காரணகாரியத்துடனேயே புலனாகும் அதுபோல எந்தவிதச்சிந்தனையுமின்றி இது பிரம்மதாளம் எனப்பெயர் கூறினேன். ஆனால் தாங்கள் காரணம் கேட்டதன்பின் இத்தாளமும் காரண காரியத்துடனேயே இயற்கையின் அருளால் அமைந்துவிட்டதை நான் அறிகிறேன். அதையும் கூறுதல் சிறப்பாகும். இந்தத் தாளத்தை நான்கு பகுதிகளாகக் கற்பனை செய்தேன். முதற்பகுதி ஏக தாளமாகும். இதற்கு நான்கு அக்ஷரங்கள். ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் நான்கு மாத்திரைகள் வீதம் $(4 \times 4 = 16)$ பதினாறு மாத்திரைக்காலங்கள் கொண்டது. இரண்டாவது சம்பை தாளம். இதற்கு இரண்டரை அக்ஷரங்கள். ஒவ்வொரு அக்ஷரங்களுக்கும் நான்கு மாத்திரைகள் வீதம் $(4+2+4=10)$ பத்துமாத்திரைக் காலங்கொண்டது. மூன்றாவது பகுதி ரூபகதாளம். இதற்கு மூன்று அக்ஷரங்கள். ஒவ்வொரு அக்ஷரத்திற்

கும் நான்கு மாத்திரைகள் வீதம் (4×3=12) பன்னிரண்டு மாத்திரைக் காலங்கள். நான்காவதுபகுதி சாய்ப்புத் தாளம். இதற்கு மூன்றரை அக்ஷரங்கள். ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் நான்கு மாத்திரைகள் வீதம் (2+4+4+4=14) பதினான்கு மாத்திரைக் காலங்கொண்டது. எனவே இத்தாளமானது (16+10+12+14=52) ஐம்பத்திரண்டு மாத்திரைக் காலங் கொண்டதாகும். இவற்றுள் நான்குதாளங்களின் மாத்திரைக் காலங்களே உள்ளபடியாலும், பிரம்மாவுக்கு நான்கு சிரங்களே உண்டு என்ற காரணத்தாலும் இது பிரம்மதாளம் என்று கூறப்பெற்றதாகும். இக்கற்பனையானது சுருதி யுக்தி அனுபவம் என்ற மூன்றுக்கும் பொருந்துவதாகும் எனக் கூறினார்கள்.

காரைக்குடி வீணைசகோதரர்கள் இருவரும் மிகவும் ஆச்சரியப்பட்டு இதுபோலக் காரணகாரியங்களுடன் விளக்கும்போதுதான் எங்கள்போன்ற இக்காலத்து வித்துவான்களுக்குப் பயன் உள்ளதாகும். அக்காலத்திய வித்துவான்களின் திறம் இன்னதென்று அறிந்து மனத்திற்கொண்டு மனமாரவணங்கிப்போற்றவும் இடந்தருகின்றது. தாங்கள் இன்று பாடிய முறைகளிலிருந்து முற்காலத்து வித்துவான்களுக்குத் தலைதாழ்த்தி வணங்குகிறோம். தவிர இன்று தங்களின்

வித்துவத்துத் திறமைகளை நாங்கள் நன்கறிந்தோம். எங்கள் வயதில் இதுபோன்ற இசைத்திறமை வாய்ந்த வித்துவான்களை இதுவரை நாங்கள் கண்டதுமில்லை கேட்டதுமில்லை. இன்று நாங்கள் பெரும்பாக்கியசாலி கள் ஆனோம். தங்களுடைய பாட்டு எங்கள் காது களில் ரீங்காரம் செய்து கொண்டிருக்கிறது. அசாத் தியமான கற்பனைத்திறனைக் கண்டு நாங்கள் தங்களி டம் கட்டுண்டுவிட்டோம். தங்களைப்பற்றி ஹரிகேசவ நல்லூர் திரு. முத்தையா பாகவதரவர்கள் அடிக் கடிக் கூறுவார்கள். ஆனால் அச்சமயங்களில் அதை லட்சியம் செய்யக்கூடிய சூழ்நிலையிலே நாங்கள் இல்லை. இன்றுதான் அவர்கள் கூறிய உண்மைகளை நேரில் கண்டுகளித்தோம். எங்களை ஆசிசெய்தல் வேண்டும். இன்றிரவு நடக்கவிருக்கும் எங்களது வீணை கச்சேரிக்குத் தாங்கள் அவசியம் வந்திருந்து வீணை வாசிப்பைக்கேட்டு அதிலுள்ள குறைநிறைகளை எங்களுக்கு எடுத்து விளக்கி அனுக்கிரகம் செய்யல் வேண்டுமென்று மிக உருக்கமாகக் கேட்டுக் கொண் டார்கள்.

அவர்கள் கூறியதற்கிணங்க அவர்களின் விருப் பத்தை நிறைவேற்றுதலை முன்னிட்டு அன்று இரவு நடந்த வீணைக்கச்சேரிக்குச் சென்று அதனை முழு வதும் இருந்துகேட்டு கச்சேரி முடிந்தவுடன் வீணை வாசிப்பில் அக்காலத்தில் உள்ளோர் கையாண்ட முறைகளை எல்லாம் எடுத்துக்கூறி இரவு சுமார் $12\frac{1}{2}$ அல்லது ஒரு மணிவரையிலும் பேசி அளவளாவிக் கொண்டிருந்தார்கள். சகோதரர் இருவரும் தங்க

ளுடன் சிலமாதகாலமாவது சேர்ந்திருந்து இசைபற்றிய நுட்பமான பலபகுதிகளையும் கலந்து பேச வேண்டும் என்ற அவா மிகுதியாக இருக்கின்றது. கடவுள் கிருபைதான் வேண்டும் என்று கூறினார்கள். பின்பு மனமுருக பல்லவிசுப்பையா பாகவதரவர்களை விட்டுப் பிரிய வேண்டியதாக இருக்கின்றதே என்ற நெகிழ்ந்த உள்ளத்தோடும், கண்களில் நீர்மல்கவும் பன்முறையும் வணங்கி விடைபெற்றுக்கொண்டு வீணை சகோதரர்களிருவரும் தமதூராகிய காரைக்குடிக்குப் பிரயாணமாகி புரப்பட்டுச்சென்றனர்.

> பல்லவி சுப்பையாபாகவதரவர்கள் கற்பனை தோன்றப் பாடிய பல்லவியும், அதன் தாள விபரங்களும் ஒருவாறு கீழே குறிக்கப் பெற்றுள்ளது. ஒவ்வொரு இசை அறிஞரும் அதன் அமைப்பை அறிந்து தெளிக.

இராகம்: சங்கராபரணம்.

பல்லவி: பிரம்மானந்தமே – ஆனந்தமே பர || (பிரம்)

தாளம்: பிரம்மதாளம். இத்தாளமானது ஏகதாளம், ஜம்பைதாளம், ரூபகதாளம், சாய்ப்புத்தாளம் ஆகிய நான்கு தாளங்களையும் முறைப்படுத்திவருவதாகும்.

ஏகதாளம் என்பது ஒரு அடியும் அதைத் தொடர்ந்து எண்ணப்படும் மூன்று விரல்களுமாகும். அது நான்கு அட்சரகாலமாகும். ,,தகதக-தகதக-தகதக-தகதக'' என்ற பதினாறு மாத்திரைகள் உடையது. ஜம்பை தாளமென்பது மூன்று தட்டுக்களாகிய இரண்டரை அட்சரக் காலமாகும். ''தகதக

தக-தரிகிட'' என்ற பத்து மாத்திரைக்கால முடையது. ரூபகதாளம் என்பது இரண்டு தட்டுக்களும் ஒரு வீச்சும் உடைய மூன்றட்சரக்காலமாகும். ''தகதக-தகதக-தகதக'' என்ற பன்னிரண்டு மாத்திரைகளை உடையது. சாய்ப்புத்தாளம் என்பதுமூன்றரை அரட்சரக்காலமுடையது. இது நான்கு அடிகளால் தட்டிப் போடுவது. ''தக-தகதக-தக தக-தகதக'' என்ற பதினான்கு மாத்திரைக்கால முடைத்து.

ஆனால் சாய்ப்புத்தாளம் மட்டும் ''தரிகிடதக-தகதக-தரிகிட'' என்று (6+8=14) போடுதற்குப் பதிலாக ''தகதக-தகதக-தகதரிகிட'' என்று (8+6=14) பதினான்கு மாத்திரையாக மாற்றிப் போடுதல் வேண்டும். இத்தாளத்தில் முற்பகுதியாகிய ஏகமும் ஜம்பையும் சேர்ந்து (16+10=26) இருபத்துஆறு மாத்திரைக்காலமாகவும், பிற்பகுதியாகிய ரூபகமும் சாய்ப்பும் சேர்ந்து (12+14=26) இருபத்து ஆறு மாத்திரைக்காலமாகவும் அமைந்து வருதல் காண்க. பல்லவியின், ''பிரம்மானந்தமே'' என்பது முற்பகுதியின் அமைதியாகவும்; ''ஆனந்தமே-பர'' என்பது பிற்பகுதியின் அமைதியாகவும் வரப்பெறும்.

### ஏகம்

| 4 | 4 | 4 | 4 |
|---|---|---|---|
| தகதக | தகதக | தகதக | தகதக |
| ஸா ; – | ; ரீ – | ; கம – | , தபப \|\| |
| பிரம் . | மா | . னந் | . த . . |

## ஜம்பை

| 4 | 2 | 4 |
|---|---|---|
| த க த க | த க | தி ரி கி ட |
| ரி ; = சா | — ; | ; ‖ |
| மே . | . | . . |

## ரூபகம்

| 4 | 4 | 4 |
|---|---|---|
| த க த க | த க த க | த க த க |
| மா பா = தா | நீ — | ச'ா ; ‖ |
| ஆ . | ன ந் | த . |

## சாய்ப்பு

| 4 | 4 | 2 | 4 |
|---|---|---|---|
| த க த க | த க த க | த க | த ரி கி ட |
| க' ரி' ச' நி | - த பா ம | = க ரி | - க ரி ச நி ‖ |
| மே . . . | . . . | . . | ப . ர . (ப்ரம்) |

இசை அறிஞர் ஒவ்வொருவரும் இப்பல்லவியைச் சங்கராபரண இராகத்தில் இங்கு குறித்துள்ள சுர அமைப்புப்படி இத்தாள அமைதியில் பாடி நிரவல் செய்து வரும்போது இதன் திறம், எளிமையான அமைப்பு, இத்தாளத்தின்கற்பனே, இவைகளின் நுட்பம், அறியபெறுவதாகும்.

## 13

## வாசுதேவநல்லூர் பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் மதுரை நாதசுரவித்துவான் பொன்னுசாமி பிள்ளையவர்கள் ஆகிய இவ்விருவர்களின் சந்திப்பும் இசைபற்றிய செய்திகளும்.

மதுரை நாதசுர வித்துவான் திரு பொன்னுசாமி பிள்ளை அவர்களை அறியாதாரில்லை. அவர் அக்காலத்தில் நாதசுர வாத்தியத்தைச் சிறந்த முறையிற் கைக்கொண்டு மிகப் புகழ் பெற்றிருந்தார். இசை ஆராய்ச்சித் துறையிலும் தம் மனத்தை ஈடுபடுத்தி 'பூர்வீக சங்கீத உண்மை' என்ற நூலும் இயற்றியுள்ளார். அவருடைய நாதசுர வாசிப்பு மிகப் பிரபலமாயிருந்த காலத்தில் திருநெல்வேலிமாவட்டம் சங்கரன்கோயிலைச் சேர்ந்த வாசுதேவநல்லூர் கிராமத்தில் இலட்சாதிபதியான செல்வர் ஒருவருடைய வீட்டுத்திருமண விழாவிற்கு நாதசுரம் வாசிக்க ஒத்துக்கொண்டிருந்தார்.

திரு பொன்னுசாமி பிள்ளை அவர்கள் மேலேகூறிய திருமண விழாவில் நாதசுரக்கச்சேரி செய்வதை முன்னிட்டு, முதல் நாளே வாசுதேவ நல்லூர் வந்து சேர்ந்தார். பொன்னுசாமிபிள்ளை அவர்கள் வாசுதேவநல்லூர் பல்லவி சுப்பையாபாகவதராகிய எனது தகப்பனூர் அவர்களை நன்கறிவாராதலால் வாசுதேவநல்லூர் வந்ததும் பல்லவி சுப்பையா பாவதரவர்கள் வீட்டிற்கு வந்து வணக்கம் தெரிவித்து இன்று மாலை நடக்கவிருக்கும் மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலத்தில் நாதசுரம். வாசிக்க இருக்கிறேன். அதற்குத் தாங்கள் அவசியம் வந்து வாசிப்பைக் கேட்டு ஆசிபுரிய வேண்டும். ஊர் வலத்திற்குத் தங்களால் வர இயலாவிடில் மறுநாள் நடக்கும் திருமணத்தன்று மாலை திருமணக் கொட்டகையில் நான் வாசிக்க இருக்கும் கச்சேரிக்காவது தாங்கள் வருகைதந்து வாசிப்பைக் கேட்டு என்னிடம் உள்ள குறைநிறைகளை எடுத்து விளக்கல் வேண்டுமென்று பன்முறையும் வருந்திக் கேட்டுக்கொண்டார்.

பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் வயதானவர் என்ற காரணத்தாலும், வீட்டைவிட்டு அதிகம் வெளியிற் செல்லுபவரன்று என்ற காரணத்தாலும், மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலத்தில் வெகுநேரம் நின்று தம்மால் கேட்க இயலாது என்ற காரணத்தாலும் ஊர்வலத்தின் போது நடைபெற்ற நாதசுரக்கச்சேரிக்குச் செல்லவில்லை. நாதசுரம் பொன்னுசாமி பிள்ளையின் வேண்டுகோளை நிறைவேற்றவும், அவரது மனம் மகிழ்ச்சி அடைதல் வேண்டுமென்ற நோக்குடனும்

திருமணத்தன்று மாலை நடைபெற்ற நாதசுர இசை நிகழ்ச்சிக்குச் சென்றிருந்தார்கள். நாதசுர வித்துவான் திரு பொன்னுசாமி பிள்ளையவர்களுக்கு எனது தகப்பனாராகிய பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் தாம் வாசிக்க இருக்கும் நாதசுர இசையைக் கேட்க வந்ததில் மிகுந்த மகிழ்ச்சி. அன்றைய தினம் பல்லவி சுப்பையாபாகவதரவர்கள் மகிழ்ச்சியுறல் வேண்டுமென்றும், இசையில் புதிதான கருத்துத்தோன்ற கற்பனை செய்தல் வேண்டுமென்றும் பொன்னுசாமி பிள்ளை அவர்கள் எண்ணினர். அன்று நடந்த நாதசுர இசையானது நல்லமுறையில் அமைந்தது. கச்சேரி களை கட்டிவிட்டது. கேட்போர் யாவரும் 'ஆகா' 'பேஷ்' என்றுகூறி இசையை சுவைத்துக்கொண்டிருந்தனர். திருமணக் கொட்டகையில் நிரம்பியிருந்த மக்கள் அனைவரும் ஐந்துமணி நேரம் அங்குமிங்கும் ஆடாமல் அசையாமல் மௌனிகளாகி இசை வெள்ளத்தில் மூழ்கிக் கொண்டிருந்தனர். அன்றைய தினத்தில் நடந்த நாதசுரக் கச்சேரியில் தலைமையாய் எடுத்துக் கொண்ட இராகம் பூர்வீகல்யாணி ஆகும். அதை நன்ருக ஆலாபனை செய்து, தானம்வாசித்து, பல்லவி நிரவல் செய்து, சுரங்களை ஞானபாவத்துடன் பொலிவுற வாசித்து, இசையின் திட்ப நுட்பப் பகுதிகளை வெகு வித்தாரமாகக் கையாண்டு கேட்போர் யாவரும் மெய்மறந்து, மனநெகிழ்ந்து, செயலிழந்து இருப்பார்போல ஒரே நாத வெள்ளமாக வாசித்து அரங்கத்தை இன்பத்தில் ஆழ்த்திவிட்டார்.

நாதசுரக் கச்சேரி இனிது முடிந்தவுடன் திரு. பொன்னுசாமிபிள்ளை அவர்கள் பல்லவி சுப்பையா பாகவதரவர்களுடன் வெகு நேரம் இசைபற்றியும், இசை வித்துவான்கள் பற்றியும், இசைத்திறங்கள் பற்றியும், பேசி அளவளாவிக் கொண்டிருந்தனர். அச்சமயம் பென்னுசாமி பிள்ளையவர்கள் பல்லவி சுப்பையாபாகவதரவர்களிடம் நான் இன்று நாதசுரக் கச்சேரி செய்ததில் இசையின் அம்சங்கள் பற்றியும், அவற்றிலுள்ள குறைநிறைகளைப் பற்றியும், இனி நான் எம்முறைகளைக் கையாளுதல் வேண்டும் என்பது பற்றியும் தாங்கள் உள்ளது உள்ளபடி எடுத்துக்கூறி எனக்கு வாழ்த்துக் கூற வேண்டும். தாங்களன்றி வேறு யாராலும் இசைத் திட்பநுட்பங்களைப் பற்றித் திட்டவட்டமாக எடுத்து விளக்க இயலாதென்பதை நான் நன்கறிவேன் எனவே மேலும் நான் வளர்வதற்குத் தாங்கள் இசை சம்பந்தமாக எடுத்துக்கூறி உதவுதல் வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்.

உடனே பல்லவிசுப்பையாபாகவதரவர்கள் பொன்னுசாமி பிள்ளையை நோக்கி 'தமது வாசிப்பில் சுருதி சுத்தம், தாளக்கட்டு, கம்பீரமானநடை, இசையின் நுண்ணிய வேலைப்பாடு, நல்ல திறமானகற்பனை, எல்லாவிடத்தானும் எளிமை ஆகிய எல்லா அம்சங்களும் சிறப்புள்ளதாகவே இருக்கின்றன. தம்மைப் போல இசையைச் செம்பாகமாக வாசிப்போர் இல்லை. ஆனால் பிரதானமாக எடுத்துக்கொண்ட 'பூர்வீகல்யாணி' இராகத்தைப்பற்றிச் சிறிது கூறவேண்டியது அவசியமாக இருக்கிறது. தம்மைப்போல் நாத

சுரத்தை எளிமையாகக் கையாளுபவரும், பேரும் புகழும் பெற்றவரும், இசையின் உள்மர்மங்களைச் செம்மையாக அறிந்தோரும் இல்லை. எல்லாம் அமை யப்பெற்ற தம்முடைய வாசிப்பைப் பண்டிதபாமரர் அனைவரும் விரும்புவர். எளவே தாம் இசைசம்பந்த மாகச் செய்யும் ஒவவொரு அம்சங்களும் உண்மைத் திறனமைந்ததாகவே இருத்தல் வேண்டும். இசை யின் உண்மைச் சிறப்பு எதுவோ! அதுதான் தம்மிட மிருந்து வெளிப்படல் வேண்டும். 'வல்லான் வகுத் ததே வாய்க்கால்' என்றபடி நல்ல அம்சங்களை விளக் கினாலும் அல்லது இசைக்கு ஒவ்வாத ஒன்றைத் தமது சாமார்த்தியத்தினால் நல்லது போன்று தோன்றச் செய்தாலும், தம்முடைய புகழ் – திறன் – வாசிப்பின் நயம் இவற்றில் மயக்கமுற்ற மக்கள் அனைவரும் தாம் செய்யும் இசைச் செயல்களைக் ஏற்றுக்கொண்டு விடு வர். தம்மிடம் பலவாற்றானும் கட்டுண்ட மக்கள் தாம் எதனைச் செய்தாலும் ஏற்றுக்கொள்ளுதல் இயல்பே யாகும். எனவே தாம் செய்யும் இசை சம்பந்தமான எச்செயல்களும் உள்ளது உள்ளபடியே இருத்தல் வேண்டுமென்று விரும்புகிறேன். எனவே அதுபற்றிச் சிறிது கூறுகிறேன் என்று கூறத்தொடங்கினார்கள்.

பல்லவி சுப்பையாபாகதரவர்கள் இசை சம்பந்த மாகக் கூறப்போவதை வெகு ஆவலுடன் கேட்பதற் குப் பொன்னுசாமிபிள்ளை அவர்கள் தம்மைத் தயார் செய்துகொண்டார். இன்று மாலை நாதசுரம் வாசித் ததில் 'பூர்வீகல்யாணி' இராகத்தைப் பிரதானமாக எடுத்துக்கொண்டு அதை வெகு வித்தாரமாக ஆலா

பனே செய்தது மிகச் சிறப்பாக இருந்தது. ஆனல் இராகாலாபனத்தை வெகுநேரம் வித்தாரம் செய்து அதிலுள்ள இசைநயங்களை அழகுற வாசிந்து முடித்த பின் 'சுத்தமத்தியமசுரத்தை' (சிறிய உழை) ஆதார சுருதியாக நிலைநிறுத்திக்கொண்டு அதிலிருந்து பூர்வீகல்யாணி இராகம் வாசித்ததாக உணருகிறேன். அது உண்மைதானே என்று பொன்னுசாமிபிள்ளையைக் கேட்டார்கள். 'உடனே பொன்னுசாமிபிள்ளையவர்களும் ஆம்! தாங்கள் எண்ணியது சரிதான். அவ்வாறுதான் வாசித்தேன். இசை சம்பந்தமாக புதிதாக ஒன்றை வெளியிடல் வேண்டுமென்று எண்ணினேன். இதற்கு முன் இதுபோன்ற கற்பனையை யாரும் செய்ததில்லை யாதலால் நான் செய்த இக் கற்பனைத்திறன் அனைவரையும் வியப்பில் ஆழ்த்துமென்றும், இசையில் இம்மாதிரி முறையிற் செய்யும் செயல் புதிதான ஓர் சிறப்பை எய்தும் என்றும் எண்ணியே 'சுத்தமத்தியமசுரத்தை' ஆதாரச் சுருதியாக நிலைநிறுத்திக்கொண்டு அதனின்று 'பூர்வீகல்யாணி' இராகத்தை வாசித்தேன்'' என்று கூறியதுடன் அதன் நற்பகுதி தீய பகுதியாகிய அனைத்தும் எனக்கு எடுத்து உணர்த்துதல் வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

பல்லவி சுப்பையாபாகவதரவர்கள் தாம் இவ்வாறு வாசித்த முறையானது இசைக்குச் சிறப்புத் தருவதன்று! இசை இலக்கணத்திற்கும் பொருந்துவதன்று! இவ்வாறு வாசித்தது தமது சாமர்த்தியத்தை ஒருவாறு காட்டினவேயன்றி இசையின்

தனிச் சிறப்பை உணர்த்தியதாகாது. காரணமென்ன வெனில்:- தாம்முதலில் ஆதார சுருதியாக நிறுத்திக் கொண்ட சுருதிநிலைகளும் 'பூர்வீகல்யாணி' இராகத்தின் கமக பாவங்களும் பண்டித பாமரர் யாவர்களுடைய செவிகளிலும் நிறைந்து ரீங்காரம் செய்தன. அச்சுருதியை மாற்றி அமைத்துக்கொண்டு அதனின்றும் 'பூர்வீகல்யாணி' இராகம் வாசித்தபடியால் சுருதிகள் மாறுதலடைந்து பண்டித பாமர மக்களிடையே ஒரு மயக்கத்தைத் தோற்றுவித்தது. பண்டிதர்களுக்குங்கூட மாற்றி அமைத்துக்கொண்ட சுருதியும் அதனின்றும் ஒலிக்கப்பெற்ற இசை ஒலியும் மனத்திற் படிதற்கு வெகுநேரம் எடுத்துக்கொண்டன. அதுவரை மயக்க நிலையே நீடித்தது. அனைவரும் அந்த மாற்றநிலை இன்னதென்றுணராது, பெரிய வித்துவான் இசையில் ஏதோ செய்கிறார் என்றெண்ணியே கேட்டுக்கொண்டிருந்தனர். தவிர ஓர் இராகத்தை ஆலாபனை செய்யும்போது அதிலுள்ள ஏதேனும் ஒரு சுரத்தை ஆதார சுருதி நிலையாக (ஷட்ஜமாக) நிறுத்திக்கொண்டு அதனின்று சுரங்களை வரிசைப் படுத்திவர அது வேறொரு இராகமாகத் தோற்றமளிக்கின்றதாய் எண்ணி இசைக்கின்றனர். அவ்வாறு இசைப்பதற்குரிய இலக்கணம் யாது? என்று அவர்களைக் கேட்டால் அவர்கள் இது 'கிரகபேதம்' எனப்படும்! இவ்வாறு செய்தற்கு எவ்வளவோ திறமைகள் வேண்டுமென்று கூறிகின்றனர். 'கிரகபேதம்' 'சுருதிபேதம்' இவைகளைப் பற்றி நூல்களில் கூறியிருப்பதாகவும் உரைக்கின்றனர். ஆனால் கிரகபேதங்களைப் பற்றியோ சுருதிபேதங்களைப் பற்றியோ

நூல்களிலே கூறப்படவே இல்லை என்பது நூல்களை ஆழ்ந்து கவனித்தோர்க்கல்லாது ஏனையோருக்குப் புலனாகாது. கிரக பேதத்தினாலும் சுருதி பேதத்தினாலும் இசைக்குக் கேடுண்டாகும் என்பதையே இதன் மூலம் எதிர்மறைப்பொருளாக எடுத்து விளக்கப்படுகின்றது. இது நன்றாகச் சிந்தித்து ஆராயவேண்டியதொன்று.

சங்கீத இரத்நாகரம் என்ற இசைஇலக்கண நூலினுள்ளே முதலில் நிற்கும் நிலையை 'ஜாதி' என்றும், அந்தச் சாதியினிடமாகத் தோன்றிய நிரல்கள் ஷட்ஜக் கிராம இராகமென்றும், ஷட்ஜக் கிராம இராகத்தினிடமாகத் தோன்றிய நிரல்கள் மத்தியமக் கிராம இராகமென்றும் தெளிவாகக் கூறி இருக்கின்றனர். இக்கிராம இராகங்கள் சம்வாதியில் முக்கியம் பெற்ற பஞ்சம முறைகளை அனுசரித்ததேயாம். இம் முறையின்றி வேறு முறைகளில் இராகம் – பண்கள் காணுதல் விபரீதத்தை உண்டாக்கு மென்பதே இந்நூலின் கருத்தாகும் என நூல் ஆதாரம் காட்டி இம்மாதிரி புதிய முறைகளைத் திடீரென்று கையாள்வது பொருத்தமாகாது என்பதை விளக்கினார்கள். என் தந்தையார் அவர்கள் விளக்கிய இக்கருத்து சிலப்பதிகாரத்தினால் மேலும் விளக்கம் பெறுவதை நான் அக்காப்பியத்தின் இசைப் பகுதிகளை ஆராயும் போது கண்டேன்.

[இசை நூல்களிலே சிறந்த சிலப்பதிகாரத்திலே கிரகபேதமென்ற வகை கூறப்பெறும்போது, பண்கள்

நன்முறையில் அமைவதை முன்னிட்டு சுரங்களாகிற ஏழிசைகளும் “ 4 - 4 - 3 - 2 - 4 - 3 - 2 ” என்ற அலகு களிலே (ச—ரி—க—ம—ப—த—நி என்ற சுரங்கள்.) நிலைப் படல் வேண்டுமென்றும், இவ்வாறு நிரல் பட்டு நிற் பது தொன்றுபடுமுறை யென்றும், இவ்வாறு நின்ற நிரல்களிலுள்ள இளி ஆகிற பஞ்சம சுரத்தைக் குரல் (ஷட்ஜம்) ஆக்கி அதனின்றும் ஏழிசைகளை நிரல் செய்யும்போது அது குரல்வாய் பண் என்றும், அதா வது செங்கோட்டி யாழ்முறை என்றும், இவ்வாறு நிற் பதுவே தொன்முறை இயற்கையென்றும், தொன் முறை இயற்கையாகிய செங்கோட்டியாழின் நிரல் களிலுள்ள இளியாகிய பஞ்சம சுரத்தைக் குரல் (ஷட் ஜம்) ஆக்கி அதனின்றும் ஏழிசைகளை நிரல் செய்யும் போது அது இளிவாய்ப்பண் என்றும், அதாவது சகோடயாழ்முறை என்றும், இவ்வாறு நிற்பதுவே வம்புறு மரபு என்றும் கூறப்பெற்றுள்ளது. தொன்று படுமுறையினின்றும் தொன்முறை இயற்கையினின் றும் மகரயாழ் முறையிலேயே பண்கள் உண்டாகும் என்று தெளிவு படுத்தப்பட்டுள்ளது. வேறு எந்த சுரத்தையும் ஆதாரமாகக் கொண்டு பண்காணுதல் குற்றமென்பது நூலின் துணிபு.]

எனவே தொன்று படுமுறை அல்லது ஜாதி இவற் றின் இளியாகிய பஞ்சம சுரத்தை மட்டும் குரலாக்கி தொன்முறை இயற்கை அல்லது ஷட்ஜக் கிராம இராகத்தினையும், தொன்முறை இயற்கையாகிய ஷட் ஜக் கிராம சுரநிலைகளில் உள்ள இளியாகிய பஞ்சம சுரத்தைக் குரலாக்கி வம்புறு மரபு அல்லது மத்தியமக்

கிராம இராகத்தினையும் தோன்றச் செய்யலாமேயன்றி வேறு எந்தச் சுரத்தினையும் ஆதார சுருதி நிலையாக (ஷட்ஜமாக) நிறுத்திக்கொண்டு இராகம் கற்பித்தல் கூடாதென்பது முன்னோர்களின் கருத்தாகும். இங்கு கூறிய இதனை ஒருவாறு மனத்திற் கொண்ட இக்காலத்தவர் எல்லாச் சுரங்களையும் கிரகபேதமாக்கி இசைக்கலாம் என்று எண்ணி அவ்வாறே செய்து வருகின்றனர். இக்காலம் ஷட்ஜக்கிராம இராகம் மத்தியமக்கிராம இராகமென்றவகை இன்னது என்று அறியக் கூடாதவராயுமிருக்கின்றனர். இங்கு இன்னும் ஒன்று குறிப்பிடல் வேண்டும். சங்கராபரணம் என்ற இராகத்தை எடுத்துக்கொண்டு அதன் "ரீ–கா-ம-ப–தா–நீ" என்ற ஒவ்வொரு சுரத்தையும் ஷட்ஜமாக்கி வரும்போது அதன் நிரல்களானவை முறையே கரகரப்பிரியை, தோடி, கல்யாணி, அரிகாம்போதி, நடபயிரவி, இசைக்க இயலாத பொருந்தாப் பண் ஒன்று, ஆகிய இவைகளின் சுரத்தானங்கள் தோன்றும். ஆனால் இந்த இராகங்களின் சுருதி நிலைகளெல்லாம் மாறிவிடும். சுரத்தானங்கள் வேறு, அவற்றின் சுருதி நிலைகள் வேறு, அவற்றின் சுர இயக்கம் (கம்பிதகமக அசைவு பேதங்கள்) வேறு. சுரத்தானங்களே இராகமாகா. ஒவ்வொரு சுரங்களும் நூல்களிலே கூறப்பெற்ற அததற்குரிய சுருதி நிலைகளில் அமைந்து அதன் பிறகு அவைகளை இசைத்து வரும்போது உண்டாகும் இயக்கத்தின் சுவையே இராகமாகும். இன்னும் இங்கு கவனிக்கவேண்டுவது:— "சுத்தரிஷபம் என்ற சுரமானது தோடி, கௌளை, பந்துவராளி, சௌராஷ்ட்

டிரீ ஆகிய எந்த இராகத்திற்கு வந்தாலும் அது ஷட்ஜ சுரத்திற்கு அடுத்த முதலாவது அலகிலேயே நிற்றல் வேண்டும். அந்த அலகை விட்டு முன்னும் பின்னும் நிற்குமேல் அது இலக்கணப் பிழையாகும். சதுஸ்ருதி ரிஷபமானது சங்கராபரணம், காம்போதி, பயிரவி ஆரபி,கேதாரகவுளை ஆகிய எந்த இராகத்திலே அமைதிபெற்றாலும் அது ஷட்ஜ சுரத்திற்குப் பின்பு மூன்றாவது அலகிலேயே நிலைபெறல் வேண்டும். மூன்றாவது அலகினின்று கீழ் அலகிலும் மேலலகிலும் நிற்குமாகில் அது இலக்கணப் பிழை என்க. இதுபோல சாதாரண காந்தாரமானது சதுஸ்ருதி ரிஷபத்திற்குப் பின்பு இரண்டாவது அலகிலும், அந்தர காந்தாரம் சதுஸ்ருதிரிஷபத்திற்குப் பின் நான்காவது அலகிலும், சுத்தமத்தியமம் அந்தரகாந்தாரத்திற்குப்பின் இரண்டாவது அலகிலும், பிரதிமத்தியமம் அந்தரகாந்தாரத்திற்குப் பின் நான்காவது அலகிலும், பஞ்சமம் ஷட்ஜத்திற்குப்பின் பதிமூன்றாவது அலகிலும், சுத்ததைவதம் பஞ்சமத்திற்குப்பின் முதலாவது அலகிலும், சதுஸ்ருதிதைவதம் பஞ்சமத்திற்குப்பின் மூன்றாவது அலகிலும், கைசிகிநிஷாதம் சதுஸ்ருதிதைவதத்திற்குப் பின் இரண்டாவது அலகிலும், காகலிநிஷாதம் சதுஸ்ருதிதைவதத்திற்குப் பின் நான்காவது அலகிலும், ஷட்ஜ சுரமானது பஞ்சமத்திற்குப்பின் ஒன்பதாவது அலகிலும் நிற்பதுவே இருபத்திரண்டு அலகுகளின் நிலைபெற்ற ஸ்தானமாகும்". எந்த இராகத்திற்கும் இந்த அலகினின்று கீழ் அலகிலோ மேல் அலகிலோ சுரங்கள் நிற்பது இசை இலக்கணத்திற்கு முரண்பட்டதாகும்.

“இனி இங்கு சங்கராபரணத்தின் சுரத்தானங்களையும் அவற்றிற்குரிய அலகு (சுருதி) நிலைகளையும் குறிப்பிட்டு பின்பு சங்கராபரணத்தின் ஒவ்வொரு சுரத்தானத்தையும் ஷட்ஜம் (குரல்) ஆக்கி அவற்றினின்றும் வரும் நிரல்களை முறை செய்து குறித்திருப்பதைக் கண்டு ஒவ்வொரு இராகத்திற்கும் உரிய சுருதி நிலைகளின் மாறுபட்ட தன்மைகளைக் கண்டுகொள்க.

ஷட்ஜத்தைப் பூஜ்ய (0) மாகக்கொண்டு அதன் பிறகு வரும் அலகுகளிலிருந்து எண்ணி சுரங்களின் அலகுகளைக்கண்டு தெரிக.

இனி 196- ஆம் பக்கம் குறிக்கப்பெற்ற கிரகபேதங்களின் பொருந்தாத் தன்மைகளை எடுத்துக்கூறுவம். சங்கராபரண இராகத்தின் ஏழிசைகளும் ‘2 – 3 – 4 – 2 - 4 – 3 – 4’ என்ற அலகுகளைப் பெற்று நன்முறையில் அமைந்து தொன்முறை இயற்கையாகிய ஷட்ஜக் கிராம இராகமாக மிளிர்கிறது. கரஹரப்பிரியா இராகத்தின் ஏழிசைகளானது ‘4 - 3 – 2 – 4 - 4 - 3 – 2’ என்ற அலகுகளிலே நிற்றல் வேண்டும். ஆனல் சங்கராபரணத்தின் ரிஷப சுரத்தை ஷட்ஜமாகக்கொண்டு கிரகபேதம் செய்யும்போது அது ‘3 – 4 – 2 - 4 - 3 – 4 – 2’ என்ற அலகுகளிலே கரகரப்பிரியாவின் ஏழிசைகளும் நின்று அலகு மாறுபடுகின்றது. தோடி இராகத்தின் ஏழிசைகளும் ‘4 - 1 - 4 – 4 – 4 – 1 – 4’ என்ற அலகுகளில் நிற்றல் வேண்டும். சங்கராபரணத்தின் காந்தார சுரத்தை ஷட்ஜமாக நிறுத்திக்கொண்டு கிரகபேதம் செய்தால் ‘4 – 2 – 4 – 3 – 4 – 2 – 3’ என்ற

| ஷட்ஜசுரத்திற்குப் பின் 22, அலகெண்கள் | 0 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஒவ்வொரு சுரத்திற்குரிய அலகெண்கள் | 0 | 1 | 2 | 3-1 | | 2-1 | | 2 | 3 | 4-1 | | 2 | 3 | 4-1 | | 2 | 3-1 | | 2-1 | | 2 | 3 | 4 |
| 22-அலகுமுறைப் படிநிற்கும் 12-சுரத்தானங்கள் | ச | ரி | , | ரீ | , | க | , | கா | , | ம | , | மா | , | ப | த | , | தா | , | நி | , | நீ | , | ச் |
| சங்கராபரணம் | ச | – | – | ரீ | – | – | – | கா | – | ம | – | – | – | ப | – | – | தா | – | – | – | நீ | – | ச் |
| கரகரப்பிரியை | நி | – | – | ச | – | – | – | ரீ | – | க | – | – | – | ம | – | – | ப | – | – | – | தா | – | நி |
| தோடி | த | – | – | நி | – | – | – | ச | – | ரி | – | – | – | க | – | – | ம | – | – | – | ப | – | த |
| கல்யாணி | ப | – | – | தா | – | – | – | நீ | – | ச | – | – | – | ரீ | – | – | கா | – | – | – | மா | – | ப |
| அரிகாம்போதி | ம | – | – | ப | – | – | – | தா | – | நி | – | – | – | ச | – | – | ரீ | – | – | – | கா | – | ம |
| நடபயிரவி | க | – | – | ம | – | – | – | ப | – | த | – | – | – | நி | – | – | ச | – | – | – | ரீ | – | க |
| பொருந்தாப்பண் | ரி | – | – | க | – | – | – | ம | – | மா | – | – | – | த | – | – | நி | – | – | – | ச | – | ரி |

அலகுகளிலே தோடி இராகத்தின் ஏழிசைகளும் நின்று அதன் அலகுகள் பேதப்படுகின்றது. கல்யாணி இராகத்தின் ஏழிசைகளும் '2 – 3 – 4 – 4 – 2 – 3 - 4' என்ற அலகுகளிலே நிற்றல் வேண்டும். இங்கு சங்கராபரணத்தின் மத்தியம சுரத்தை ஷட்ஜ சுரமாக நிறுத்தி கிரகபேதம் செய்தால் '2 – 4 – 3 - 4 - 2 - 3 – 4' என்ற அலகுகளிலே கல்யாணி இராகத்தின் ஏழிசைகளும் நின்று பேதத்தை உண்டு பண்ணுகின்றது. அரிகாம்போதி இராகத்தின் ஏழிசைகளானது '4 - 3 - 4 – 2 - 4 - 3 – 2' என்ற அலகுகளிலே நிற்பது இலக்கணமாகும். ஆனால் இங்கு சங்கராபரணத்தின் பஞ்சமத்தைக் குரலாக நிறுத்தி கிரகபேதம் செய்யுங்கால் '4 – 3 – 4 - 2 – 3 - 4 - 2' என்ற அலகு நிலைகளிலே அரிகாம்போதியின் ஏழிசைகளும் நின்று அலகு பேதப்பட்டுக்காண்கின்றது. நடபயிரவியின் ஏழிசைகளானது '4 - 3 - 2 - 4 - 4 – 1 – 4' என்ற அலகுகளிலே நிற்பது இலக்கணமுறை. இங்கு சங்கராபரணத்தின் தைவதத்தைக் குரலாக நிறுத்திக்கொண்டு கிரகபேதமாக்கி வரும்போது '3 – 4 – 2 – 3 - 4 - 2 – 4' என்ற அலகுகளிலே நடபயிரவியின் ஏழிசைகளும் அமைந்து அலகு வேறுபாட்டைக் குறிக்கின்றது. கடைசியாக வரப்பெறும் பொருந்தாப் பண்ணின் அலகு முறைகளானவை '4 – 1 – 4 – 4 - 2 – 3 - 4' என்ற அலகு நிலைகளிலே "ச-ரி-க-ம-மா-த-நி" என்று நிற்றல் வேண்டும். இங்கு சங்கராபரணத்தின் நிஷாதத்தை ஷட்ஜமாக நிறுத்தி கிரகபேதம் செய்யும்போது '4 – 2 – 4 – 2-3 – 4 - 3' என்ற அலகு நிலைகளிலே "ச-ரி-க-ம-மா-த-நி" என்ற ஏழிசையும் நின்று அலகுகள் மாறுபட்டு

பேதமுடையதாய் விளங்குகின்றது. எனவே நூன் முறைப்படி நிற்கவேண்டிய ஒவ்வொரு இராகத்தின் அலகுமுறைகளும் கிரகபேதம் செய்யும் வகைகளினால் அளவு கடந்த மாறுபாட்டினைப் பெற்று வருகின்றது என்பதை நேரில் காணக்கூடியதாகும். இம்முறைக ளில் இயக்கிப் பாடப்படின் அது விபரீத ஒலியைத் தவிர நேரிசையை உண்டுபண்ணுமா! என்பதை இசைஅறிஞர் யாவரும் உணர்தல் வேண்டும்.

இங்கு அலகுகளின் பேதத்தை மட்டும் குறித் தோம். இனி சுரங்களின் அசைவு பேதங்களைப் பற்றி யும் சற்றுக் கவனிப்போம். முதலாவது சங்கராபரண இராகத்தையும், அதன் காந்தாரசுரத்தை ஷட்ஜமாக நிறுத்தி கிரகபேதம் செய்து அதன் மூலம் வரிசை பெற்று வந்த தோடி இராகத்தையும் எடுத்துக்கொள்ளு வோம். ஏனையவற்றை இவ்வகை பற்றித் தாமே அறிந்து கொள்ளலாம். சங்கராபரணத்தின் ஷட்ஜ சுரம் ஆதார சுருதியாக அமைந்து அசையாத் தன்மைபெற்று நிற்பதாகும். அதற்கு நேராக நிற்பது தோடியின் தைவத சுரமாகும். இச்சுரம் பலவித கம் பிதகமகம் (அசைவு) உள்ளது. எனவே இவ்விரண் டும் பொருந்தாச்சுரங்கள் ஆகும். சங்கராபரணத் தின் ரிஷபசுரமானது மேலும் கீழும் ஆடி அசைந்து பெரிய வட்டம் போன்ற சுழலையுடையது. அதற்கு நேராக நிற்பது தோடியின் நிஷாத சுரமாகும். இச் சுரமானது அசையும் தன்மையுடையதாயினும் இதன் அசைவு பேதம் மேலே கூறியது போன்ற சுழல் அசைவு உடையதன்று. வேறுவகையிற்பலவித கம்பிதகமகங்

களையுடையது. ஆகையால் இவ்விரண்டும் பொருந்தாச் சுரங்களாகும். சங்கராபரணத்தின் காந்தாரச் சுரமானது அசையாத்தன்மை பெற்றது. அதற்கு நேராகஉள்ளது தோடியின் ஷட்ஜ சுரமாகும். இதுவும் அசையாத்தன்மையதாகும். எனவே இவ்விரண்டு சுரங்களும் பொருந்தி ஒற்றுமையுடையதாக விளங்குகின்றது. சங்கராபரணத்தின் மத்தியம சுரமானது காந்தாரசுரத்தை ஆதாரமாகக் கொண்டு தணிந்த அசைவு உடையதும், (இதைச் சுர சாதாரணம் என்பர் இலக்கணநூலார்.) பஞ்சமசுரத்தை ஆதாரமாகக்கொண்டு உயர்ந்த அசைவையும் பெற்று விளங்கும். இதைத் 'துவிகுணத்துவம்' இரண்டு குணமுடைத்து என்பர். இதற்கு நேராக நிற்பது தோடியின் ரிஷபசுரமாகும். தோடியின் ரிஷபமானது ஷட்ஜ சுரத்தை ஆதாரமாகக்கொண்டு சாதாரண அசைவையே பெறும். அல்லது சுத்தத்தானமாகவும் ஒலிக்கும். இந்த ரிஷபமானது இரண்டுகுணத்தைப் பெற்ற அசைவாக இல்லாதபடியால் இவ்விரண்டு சுரங்களும் பொருந்தா இயக்கத்தைப் பெறும். சங்கராபரணத்தின் பஞ்சமசுரமானது ஆதார சுருதியாக நிலைபெற்று அசையாத்தன்மையதாய் விளங்கும். இதற்குநேராகத் தோடியின் காந்தாரசுரம் நிற்கும். இச்சுரமானது பலவகையான கம்பிதகமக ரூபங்களைப் பெற்று வருவதாகும். எனவே இவ்விரண்டும் பொருந்தா இயக்கம் உடையதாகும். சங்கராபரணத்தின் தைவத சுரமானது மேலும் கீழும் ஆடி அசைந்து பெரிய வட்டம் போன்று சுழன்றுவரும் தன்மையது. இதற்கு நேராக நிற்பது தோடியின் மத்யம சுரமாகும். இந்தச் சுரம்

அசையாத்தன்மை உடையதாகும். எனவே அவ்விரண்டும் பொருந்தாச் சுரமாகும். சங்கராபரணத்தின் நிஷாத சுரமானது மேல்ஷட்ஜத்தை ஒட்டினாற்போல நின்று ஒலிக்கும் (இது ஷட்ஜசுரமா! நிஷாத சுரமா! என்று அறிதற்கியலாத நுட்பத்தன்மையைப் பெற்று, சற்று மெல்லியதான அசைவைப்பெற்று வருவதாகும். இது மிக நுண்ணிய சுரமாதலின் காகலி என்றனர்.) இதற்கு நேராகநிற்பது தோடியின் பஞ்சமசுரமாகும். இது ஆதார சுருதியாக விளங்கி அசையாத்தன்மை பெற்றதாகும். எனவே இவ்விரண்டும் பொருந்தாச்சுரமாகும். ஆதலின் சங்கராபரண ஏழிசையின் அசைவு பேதங்கள் வேறு. தோடியில்வரும் ஏழிசையின் அசைவு பேதங்கள் வேறு. இந்த சங்கராபரண இராகத்தின் காந்தாரசுரத்தை ஷட்ஜமாக்கி கிரக பேத முறையில் கிடைக்கப்பெற்ற ஏழிசைகளும் சங்கராபரணத்தின் ஏழிசைகளும் அதனதன் அசைவு பேதங்கள் யாவும் ஒன்றிற்கொன்று முரண்பட்டனவாக விளங்குவதால் இதன் இயக்கங்கள் இனிமைபயப்பதற்கு எவ்வகையிலும் இடமில்லை.

இக்காலத்தோர் கூறும் கிரகபேதமானது சுருதி (அலகு) நிலையிலும், சுர நிலையிலும், அசைவு நிலையிலும் முரண்பட்டேவரும் என்பது கண்கூடு. அவ்வாறு முரண்பட்டே வரும் இவ்வகையை கிரகபேதம் என்று பெயர் சொல்லி இயக்கிவருதல் நகைப்பிற்கு இடமளிக்குமன்றோ! இவ்வாறு செய்யப்படும் இசை இயக்கம் இராகச் சிதைவை அல்லவா உண்டுபண்ணும்! சங்கராபரண சுரங்களின் அசைவு அசைவில்

லாத் தன்மையும், தோடிச் சுரங்களின் அசைவு அசைவில்லாத் தன்மையும் வெவ்வேறு என்பதைக் கூட இசைவித்துவான்கள் உணரவில்லையோ? என்ற ஐயம் எழுகின்றது. எனவே ஒரு இராகத்தின் ஒவ்வொரு சுரங்களையும் ஆதார சுருதிநிலையாகிய ஷட்ஜ சுரமாக நிறுத்தி அதனின்றும் வரிசைப்படும் நிரல்களை இராகமாகப் பாடுதல் சிறப்பில்லை என்றும், அவ்வாறு பாடுவதனால் சுரங்களுக்குரிய சுருதி நிலைகளும் அசைவு பேதங்களும் வேறுபட்டு வெறுப்புணர்ச்சி (அபசுரம்) ஏற்படுமென்றும், இவ்வாறு பாடுதல் இலக்கண மரபுக்கும், சுருதியுக்தி அனுபவத்திற்கும் ஒத்து வருவனவல்லவென்றும் அறிதல் வேண்டும் எனக் கூறி மேலும் சில விளக்கங்களைத் திரு. பொன்னுசாமி பிள்ளையவர்களுக்குப் பல்லவி சுப்பையா பாகவதரவர்கள் எடுத்துக்காட்டிப் பேசத் தொடங்கினார்கள்.

“தாம் பூர்வீகல்யாணி இராகத்தை ஆலாபனை செய்து அதன் பிறகு சுத்தமத்தியமசுரத்தை ஆதார சுருதியாக (ஷட்ஜசுரமாக) நிறுத்திக்கொண்டு அதனின்றும் பூர்வீகல்யாணி இராகம் வாசித்த முறையானது சரிதானா! என்று கவனித்தல் வேண்டும். இது சுருதி யுக்தி அனுபவமென்ற மூன்றுக்கும் பொருந்துவனவல்ல என்று அறிகிறேன். ஏனெனில் முதலாவது பூர்வீகல்யாணி இராகத்திற்குச் சுத்தமத்தியமம் என்ற சுரத்தானமே கிடையாது. அந்த இராகத்திற்கு இல்லாத ஒரு சுரத்தைத் தாம் ஆதார சுருதியாக நிறுத்திக் கொண்டதில் பொருளில்லை. இரண்டாவது இந்த இராகத்திற்கு இல்லாத ஒரு சுரமாகிற சுத்தமத்

தியமத்தை ஆதார சுருதியாக எடுத்துக் கொண்டது மத்தியம சுருதிசெய்யப்பட்டது என்று வைத்துக் கொண்டாலும் அதனின்றும் பூர்வீகல்யாணி வாசித்ததானது இசைத் திறத்தைக் காட்டியதன்று என்று அறிகிறேன். தவிர முதலில் எடுத்த ஆதார சுருதியில் வாசிக்கப்பெற்ற பூர்வீகல்யாணியின் சுரத்தானங்கள் அதன் கமகங்கள் இராக சொரூபங்கள் வேலைத்திறங்கள் இவைகள் செவிகளில் நிறைந்து இருக்கும்போது திடீரென்று மத்தியமச் சுருதியை ஆதாரநிலையாகக்கொண்டு பூர்வீகல்யாணி வாசிக்கப் பெற்றதால் முதலில் வாசித்த சுரத்தானம் கமகம் அலகு முறைகள் அசைவு குழைவு ஆகியவைகள் முறைபிறழ்ந்து இசையின் நயங்கள் ஒவ்வாதனவாகச் செயல்பட்டன வல்லவா? இதனைச் சீர்தூக்கி ஆராய்தல் வேண்டும்.

முதலில் வாசித்த பூர்வீகல்யாணி இராகத்தின் நிலையும், சுத்த மத்தியமத்தை ஆதார சுருதியாகக்கொண்டு இரண்டாவது வாசித்த பூர்வீகல்யாணி இராகத்தின் நிலையும் இங்கு குறித்துள்ளன. இவற்றின் நிலைகளைக் காண்க.

| 22-அலகெண் | 0 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| முதலாம்நிலை | ச | ரி | – | – | – | – | – | கா | – | – | – | மா | – | ப | – | – | தா | – | – | – | நீ | – | ச் |
| இரண்டாம்நிலை | ப | – | – | தா | – | – | – | நீ | – | ச | ரி | – | – | – | – | – | கா | – | – | – | மா | – | ப |

இங்கு கவனிக்க வேண்டுவது:- முதலாவதாகச் சுரத்தானங்களை நோக்குவோம். முதல் நிலையிலுள்ள ரிஷபம், பிரதிமத்தியமம், பஞ்சமம் இவைகளுக்கு நேராக இரண்டாம்நிலையில் சுரங்கள் அமையவில்லை. இரண்டாம் நிலையிலுள்ள தைவதம் ஷட்ஜம் ரிஷபம் இவைகளுக்கு நேராக முதல்நிலையில் சுரங்கள் அமையவில்லை. முதல் நிலையிலுள்ள ஷட்ஜம், காந்தாரம், தைவதம், நிஷாதம் ஆகிய இவைகளுக்கு நேராக இரண்டாவது நிலையில் முறையே பஞ்சமம், நிஷாதம், காந்தாரம், பிரதிமத்தியமம் ஆகிய இவைகள் நிற்கின்றன. எனவே நேருக்குநேராக அமைந்த சுரங்களின் அசைவு பேதங்களும் அசையாபேதங்களும் ஒன்றிற்கொன்று முரண்பட்டவை என்பதைப் பார்த்த மாத்திரத்தில் அறியலாம். இன்னும் இம்மாற்றத்தால் சுரங்களே இல்லாத இடங்களிலும் சுரங்கள் அமைந்து அதன் ஒலி வேறுபாட்டையும் அடைகின்றன. எனவே இது கிரகபேதம் என்று .இக்காலத்துக் கூற்றுக்கும் ஒத்ததல்ல. தவிர முதலில் வாசித்த ஆதார ஷட்ஜ சுருதிக்கு சம்வாதி (நட்பு) சுரமாகிற மத்தியமசுரத்தை ஆதார சுருதியாக நிலைநிறுத்திக்கொண்டு வாசித்த இதனைச் சுருதிமாற்றம் என்ற வகையினதாகக் கூறலாம். ஆனால் இரண்டாவதாக வாசித்த பூர்விகல்யாணியின் சுரங்களுக்கு முதல் நிலையிலுள்ள சுரத்தானங்களின் சுருதிகள் ஒத்ததாக இருத்தல் வேண்டும். அங்ஙனமும் வரப்படாமையான் இவ்வாறு வாசித்த முறையினால் நமது இசைத்திறம் சிறந்து விளங்கிற்றென்றே! இசை அறிஞர்களுக்குச் சிறந்த இசை நுட்பத்தை உண்டாக்கிற்றென்றே! இது ஓர்

அரும்பெரும் செயலென்றே, கூறுதற்கு இயலாதென்று அறிகிறேன். சுருதிபேதம் செய்ததில் ஏனைய சுருதி நிலைகள் உண்மையானதாக விளங்கப் பெருமையால் இச்செயல்கள் இசைச் சிறப்புப் பெற்றனவல்ல'' என்று பல்லவி சுப்பையாபாகவதரவர்கள் எடுத்துக் கூறி விளக்கினார்கள்.

இவற்றின் உண்மைகளையும் அனுபவரீதியில் ஒத்துவராத வகைகளையும் மனத்திற் பதித்துக் கொண்ட திரு. பொன்னுசாமி பிள்ளையவர்கள் தாங்கள் கூறயவை யாவும் ஒத்துக் கொள்ளத் தக்கனவாகவே இருக்கின்றன. இது வகைகளை இது காறும் நான் ஆழ்ந்து சிந்திக்கவில்லை. இது இசையில் ஏதோ ஒரு புதுமையான செயலென்றே எண்ணிவந்தேன். இதிலுள்ள குறைகளையெல்லாம் இன்று நான் தெளிவாகத் தெரிந்து கொண்டேன். ஆனால் இதுபோலப் புதிய வகையினதாய் வேறு ஏனும் செய்தற்கு வழிதுறைகள் இருக்கின்றனவா! அவ்வாறு இருப்பின் எனக்கு எடுத்து விளக்குதல் வேண்டும்.அது எனக்கு மிகுந்த பயனுள்ளதாக இருக்கும் என்று கேட்டுக் கொண்டார்.

பல்லவி சுப்பையாபாகவதரவர்கள் இந்தப் பூர்வீகல்யாணி இராகத்தில் திறம்பட இசைக்குற்றமின்றி இலக்கணம் வழுவாது முன்னோர்களின் கூற்றுக்கு இணங்கக் கற்பனை செய்து புதுப்பிக்கலாம். அதனையும் கூறுகிறேன் என்று கூறத் தொடங்கினர்.

பூர்வீகல்யாணி இராகத்திலுள்ள பஞ்சமச் சுரம் ஒன்றைத்தவிர வேறு எந்தச்சுரத்தையும் ஆதாரசுருதி

யாக (ஷட்ஜமாக) நிறுத்திக்கொண்டு கிரகபேதம் அல்லது சுருதிபேதம் செய்யலாகாது. இவ்வாறு செய்யப்படின் இசைநரம்புகள் ஒன்றிற்கொன்று பகை நரம்பாகி இசை ஒலிகளின் நயம் வேறுபட்டு இசைக்குக் கேடுஉண்டாக்கும். இவ்வாறு செய்தல் இசை இலக்கணக் குற்றமுமாகும். ஆனால் பூர்வீகல்யாணி இராகமானது நூலின் முறைப்படி ஷட்ஜக்கிராம (தொன்முறை இயற்கை) இராகம் எனப்படும். இது நைஷாதி என்ற ஜாதியிலிருந்து பிறந்தது. (பாலையாழ்பண்ணைச் சேர்ந்தது.) இது ஷட்ஜக்கிராமப் பண் ஆகையால் இதனுடைய பஞ்சமசுரத்தைமட்டும் ஷட்ஜசுரமாக்கி (வண்ணப்பட்டடை யாழ்மேல் வைத்தாங்கு) அதை ஆதாரமாகக் கொண்டு அதன் சீரான முறைப்படி சுரத்தானங்களை நிரல்செய்து, அவ்வாறு வரப்பெற்ற அச்சுரத்தானங்களைப் பூர்வீகல்யாணியின் ஏழிசைகளும் எவ்வாறு இயங்கி அசைவுபெற்று ஒலித்து வந்தனவோ அவ்வாறே இதனையும் இயக்கிவர அது ஒன்றிற்கொன்று ஒற்றுமையுடைத்தாய் வந்து இசையைச் சிறப்பிக்கும். இவ்வாறு ஒற்றுமையுடைத்தாய் இசைத்தும் அது சுவை தராமல் வெறுப்பூட்டி இசையைக் கெடுக்குமாயின் அது இசைக்கத் தகுந்ததல்லவென்று விலக்கல் வேண்டும். இவ்வாறு இயக்குவதில் இராகச் சுவையை உண்டாக்குமெனின் அது அறிந்து இசைக்கத் தக்கது. இவ்வாறு வருவதான அமைதியே மத்தியமக்கிராம (வம்புறுமரபு) இராகமெனப்படும். ஷட்ஜக் கிராமத்துச் சுரங்களும் சுருதிகளும் மத்தியமக் கிராமத்துச் சுரங்களும் சுருதிகளும், ஒன்றிற்கொன்று ஒற்றுமையுடையதாக இயங்கி அவை வெவ்வேறு

இராகமாகச் செவிபுலனாகி இன்பந்தரத்தக்கனவாகும். இம்முறைகளே நூல்களில் விளக்கப் பெற்றிருக்கின்றன. ஆனால் மத்தியமக் கிராமத்தில் எல்லாச் சுரங்களும் ஷட்ஜக்கிராம அலகுடன் பொருந்தி வரும் போது பஞ்சமம் மட்டும் ஷட்ஜக்கிராம அலகிலிருந்து ஒரு அலகு குறைந்து மூன்றுவது அலகிலேயே நிற்கும். இவ்வாறு நிற்பினும் அது இசைக்குக் கேடுண்டாகாது என்பதை நம் முன்னோர்கள் நூல்களின் வாயிலாகத் தெளிவுபடுத்தியுள்ளனர்.

இம்முறைப்படி ஷட்ஜக் கிராமத்தில் தோன்றிய பூர்வீகல்யாணியின் சுரத்தான வருமுறைகளையும், அதன் பஞ்சமம் ஷட்ஜமாகி அதனின்று வரும் சுரத்தான வருமுறைகளும், குறிக்கப்பெற்றதோடு, ஷட்ஜக்கிராம இராகம், மத்தியமக்கிராம இராகம், ஆகிய இவைகளின் தோற்றத்தையும் இங்கு காண்க. இவற்றைச் சுரத்தான முறையிலேயே விளக்கியுள்ளது.

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| சுரத்தான எண்கள் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |
| சுரத்தானக் குறியீடு. | ச | ரி | ரீ | க | கா | ம | மா | ப | த | தா | நி | நீ |
| ஷட்ஜக்கிராம முறைப்படி பூர்வீகல்யாணி | ச | ரி | – | – | கா | – | மா | ப | - | தா | – | நீ |
| மத்தியமக் கிராமமுறைப் படிவேறுபண் | ம | மா | – | – | தா | – | நீ | ச | - | ரீ | - | கா |

இங்கு கவனிக்க வேண்டுவது:- பூர்வீகல்யாணி இராகத்தின் ஷட்ஜசுரமானது காகலிநிஷாதத்திற்குப்

பின்பு இரண்டாவது அலகிலும், சுத்தரிஷபமானது ஷட்ஜத்திற்குப்பின் முதலாவது அலகிலும், அந்தர காந்தாரமானது சுத்தரிஷபத்திற்குப்பின் ஆறுவது அலகிலும், பிரதிமத்திய சுரமானது அந்தரகாந்தாரத் துக்குப் பின் நான்காவது அலகிலும், பஞ்சமசுரமானது பிரதிமத்தியமத்திற்குப் பின் இரண்டாவது அலகிலும், சதுஸ்ருதி தைவதமானது பஞ்சமத்திற்குப்பின் மூன்று வது அலகிலும், காகலிநிஷாதசுரமானது சதுஸ்ருதி தைவத்திற்குப்பின் நான்காவது அலகிலும், நின்று அழகு பெறுகின்றது. இச்சுரங்களுக்கு நேராக நிற் கும் சுரங்களைக் கவனிக்கும்போது பூர்வகல்யாணியின் பஞ்சமசுரத்திற்கு நேராக ஷட்ஜசுரமும், தைவத சுரத்திற்கு நேராக சதுஸ்ருதிரிஷபமும், நிஷாத சுரத் திற்கு நேராக அந்தரகாந்தாரமும், ஷட்ஜசுரத்திற்கு நேராக சுத்தமத்தியமும், ரிஷப சுரத்திற்கு நேராக பிரதிமத்தியமும், காந்தார சுரத்திற்கு நேராக சதுஸ் ருதிதைவதமும், மத்தியமசுரத்திற்கு நேராக காகலி நிஷாதமும் நிலைபெற்று நிற்கும். இது மத்தியமக் கிராமப்பண் எனப்படும். இவ்வேழிசையும் முறையே '2-1-6-4-2-3-4' என்ற அலகுகளிலே 'ம-மா-தா-நீ -ச-ரீ-கா' என்று நிற்கப்பெறுகின்றன. ஷட்ஜக் கிராமத்திலே முதலாவது தோன்றிய 'சரிகாமாபதாநீ' என்ற ஏழிசைகளுக்கும் மத்தியமக்கிராம முறையிலே இரண்டாவதாகத் தோன்றிய 'ம-மா-தா-நீ-ச-ரீ-கா' என்ற ஏழிசைகளுக்கும் சுரத்தான வகையிலும், அலகு முறையிலும் அசைவு வகையிலும் யாவும் ஒத்து நிற்பனவாகும். ஆனால் இரண்டாவதாகத் தோன்றிய மத்தியமக்கிராமச் சுரநிலைகளிலே பஞ்சம சுரம் வரப்

பெறவில்லை. இரு மத்தியமச் சுரங்களும் வரிசை பெற்றுள்ளன. இச்சுரங்கள் இசை இயக்கத்தில் அழகுபெற்று எளிமை பெறுதல் வேண்டுமாயின், சுத்தமத்தியமமாகிய சிறிய உழையை மேலே பெய்தல் செய்து கொள்ளல் வேண்டும். அப்பொழுது இவ்வேழிசைச் சூழலும் 'மா – தா – நீ – ச – ரீ – கா – ம' என்ற வரிசையில் நிரல் பெறும். பூர்விகல்யாணியின் ரிஷபச்சுரம் முதல் மேல் ஷட்ஜ சுரம் வரை இசைத்து வரும் போது அவ்வேழு இசைகளும் எவ்வாறு கம்பித கமகங்களைப் பெற்று வந்தனவோ! அது போலவே மத்தியமக் கிராமத்தில் தோன்றிய பிரதிமத்தியமச் சுரம் முதல் மேலேயுள்ள சுத்த மத்தியமச் சுரம் வரையுள்ள இவ்வேழு இசைகளும் கம்பிதகமகத்தைப் பெற்றுவரும். இது அழகுடைய இன்னிசையைத் தருவதாகும்.

பூர்விகல்யாணியிலிருந்து தோன்றிய மத்தியமக் கிராமச் சுரங்களிலே பஞ்சம சுரமின்றி இரண்டு மத்தியமச்சுரங்களுடன் வருவதான இவ்வேழிசைகளும் நம் நாட்டிலே ஒரு பண்ணாக இது வரை பாடி வரப்படவில்லையாயினும், இதுவும் ஒரு பண்ணாக இருத்தற்குரிய இலக்கண அமைதிகளை இச்சுரங்கள் அடைந்துள்ளன. இச்சுரங்கள் பூர்வீல்யாணிக்கு நேர் நேரான சுரங்களாகையால் பூர்விகல்யாணியின் ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்தியமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் ஆகிய இவைகளின் அசைவு அசைவில்லாத் தன்மை ஆகிய இவைகள் எவ்வாறு இயங்குமோ அது போலவே மத்தியமக் கிராமத்தின் சுத்தமத்தியமம், பிரதிமத்தியமம், சதுஸ்ருதிதைவதம், சாகலிநிஷாதம்,

ஷட்ஜம், சதுஸ்ருதிரிஷபம், அந்தரகாந்தாரம் ஆகிய இச்சுரங்களையும் பூர்வீகல்யாணிச் சுரங்களின் போக்கு வரத்தாய் இசைத்து இயக்கினால் இவ்விரண்டும் குற்ற மற்றதாய் அழகிய ஒலிகளாய் விளங்கி இன்பம் தரும். இவ்விரண்டும் வெவ்வேறு இனிய பண்ணாகவும் தோற்றமளிக்கும். இங்கு செய்யப்பட்ட இச்செயல் இசைத்திறனை நன்கு விளக்கும். இசை இலக்கணத் தோடு ஒற்றுமையுடையதாகவும் இருக்கும். இதற்கு நல்ல செயலாற்றல் வேண்டும்.

இதேபோல ஜாதியிலிருந்து (தொன்றுபடுமுறையி லிருந்து) வரப்பெற்ற ஷட்ஜக்கிராம (தொன்முறை இயற்கை) இராகத்தின் பஞ்சம (இளி) சுரத்தை மட்டும் எடுத்துக்கொண்டு அச்சுரத்தை ஷட்ஜமாக (குரலாக) நிலைநிறுத்தி அதனின்று வரப்பெற்ற நிரல் களை இயக்கி கானம் செய்யலாம். இவ்விதிமுறை எல்லா ஷட்ஜக்கிராம இராகங்களுக்கும் பொருந்தும். பொருந்தாதவற்றை விட்டுவிடல் வேண்டும். ஷட்ஜக் கிராம இராகங்கள் பெரும்பான்மையன. மத்தியமக் கிராம இராகங்கள் சிறுபான்மையன. இது தவிர வேறு எந்தச் சுரத்தையேனும் எடுத்துக்கொண்டு இசைத்துவருதல் சுருதியுக்தி அனுபவத்திற்கு ஒத்து வாரா, என்று இன்னும் பலவாறாக எடுத்துக் கூறி விளக்கினார்கள்.

பல்லவி சுப்பையாபாகவதர்வர்கள் இவ்வாறு இலக்கிய இலக்கண முறைகளுடன் அனுபவ சித்த மாய் எடுத்துக்கூறிய இசை விளக்கங்களைக் கேட்ட திரு. பொன்னுசாமிபிள்ளையவர்கள் மிகவும் நன்றி

யுள்ளவராக மன நிறைவோடு இவ்வாறு யாரால் எடுத்துக் கூற இயலும், இவற்றுள் எவ்வளவு உண்மைகள் பொதிந்து கிடக்கின்றன, எவ்வளவு நுட்பங்கள் அடங்கிக் கிடக்கின்றன என்று கூறி, இன்று எனக்கு ஒரு நன்னாளாகும். இன்று நான் பெரியபாக்கியசாலியானேன். பெறற்கரியதாகிய அருமைமிக்க இசை நுட்பங்கள் பலவற்றை நான் அறிந்துகொள்ளுதற்குரிய நன்னாள் இன்றுதான் கிட்டியது. நான் இனி எந்த இடத்தில் கச்சேரி செய்ய நேர்ந்தாலும் இன்று தாங்கள் கூறிய இந்நுட்பத்தினை மனத்திற்கொண்டு இவ்விலக்கிய இலக்கண முறைகள் தவராது கைக்கொண்டு இசைநிகழ்ச்சிகளைச் செய்து வருவேன். இம்மாதிரி செய்ய வேண்டிய விதிமுறைகள் இன்றுதான் என் மனத்திற்குத் தெளிவாயிற்று. இவ்வித அருமைமிக்க அரும்பெரும் செய்திகளை எனது குருவாக இருந்தே தாங்கள் எனக்கு அருளினீர்கள் என்று மிகவும் பணிவும் பேரன்பும்கொண்டு வணங்கி விடை பெற்றுக்கொண்டார்.